எழிலுடைய பெண்கள் யார்?

நீங்கள் பரிசு பெறலாம்

எளிதானது! இலவசமானது!



# ரூ. 2000

# ரெக்ஸோனா அழகு போட்டி

முடிவு தேதி
மே 16
1955

நீங்கள் செய்யவேண்டியது என்னவென்றால் ஒரு பிரவேச பாரத்தைப் பெறுங்கள்; அதிலுள்ள ஒன்பது அழகிய பெண்களின் போட்டோக்களை சரியாக கவனித்துப் பாருங்கள். பிறகு அவர்களுடைய அழகு, கவர்ச்சி முதலியவைகளைக்கொண்டு உங்கள் கருத்துப்படி வரிசைக்கிரமமாகப் பொறுக்குங்கள். நீங்கள் தேர்ந்தெடுத்த விடை விசேஷ பரிசீலனை குழுவினரது முடிவுடன் ஒத்திருந்தால் நீங்கள் பரிசு பெறுவீர்கள். இதற்கு பிரவேசக் கட்டணம் கிடையாது — ஒவ்வொரு முழு விடையுடன் ஒரு ரெக்ஸோனா சோப் சுற்றுத்தாளை அனுப்புங்கள்.

ஒவ்வொரு முழு விடையுடன் ஒரு சாதாரண சைஸ் ரெக்ஸோனா சுற்றுத்தாள் (அல்லது மூன்று சிறிய சைஸ் சுற்றுத்தாள்களை) அனுப்பவும் — ஒரு பெரிய சைஸ் சுற்றுத்தாளுக்கு [illegible] இரு முழு விடைகளை அனுப்பலாம்.

## ரெக்ஸோனா

கேடில் கலந்த சோப் இது ஒன்றே



ரெக்ஸோனா விற்பனையாளரிடமிருந்து
ஒரு பிரவேச பாரத்தைப் பெறுங்கள்

எல்லோரும் கலந்து கொள்ளலாம் (பம்பாய் மாகாணத்திலுள்ளவர்களைத் தவிர)

RP. 120-50 TM

# கல்கி

மலர் 14
இதழ் 39

மன்மத வரு
சித்திரை 11

## பொருளடக்கம்

மலர் 14


இதழ் 39
தமிழ்த் திருநாடு தன்னைப் – பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்

# இங்கிலாந்தில் தேர்தல்

பிரிட்டனில் தேர்தல் மே மாதம் கடைசி வாரத்தில் என்று நிச்சயம் செய்து விட்டார்கள். இதுதான் நல்ல சமயம் என்று 'கன்ஸர்வேடிவ்' சர்க்கார் நினைத்திருப்பதில் வியப்பு ஒன்றும் இல்லை.

தொழிற் கட்சித் தலைவர்களுக்குள் வெளியான பிளவுகளைப் பற்றி எழுதும் போது இதை எதிர்பார்த்து ஏப்ரல் பத்தாம் தேதி இதழில் எழுதி யிருந்தோம்.

இந்த அனாவசியமான அவசரத் தேர்தலை ஒரு சூழ்ச்சி என்று தொழிற் கட்சியார் கூறுகிறார்கள். இந்தக் குற்றச்சாட்டு இயற்கையே.

தேர்தல் முடிந்து 'கன்ஸர்வேடிவ்' கட்சியார் வெற்றியுடன் வரும்போது, சர்ச்சில்லே மறுபடியும் பிரதமர் பொறுப்பு ஒப்புக் கொள்ளும்படி வற்புறுத்தப்பட்டு அவரும் ஒப்புக் கொண்டார் என்று செய்தி வந்தால், அதைக் கண்டும் ஆச்சரி யப்பட வேண்டிய தில்லை.

பிரதம மந்திரி வேலையிலிருந்து அவர் இப்பொழுது நீங்கியது, தேர்தலைத் தற்போது நடத்துவதற்கு ஒரு காரணம் உண்டாக்கிக் கொள்ளுவதற்காகவே என்று கருதவும் இடம் இருக்கிறது.

எதிர்க் கட்சியில் உண்டான பலமான பிளவுகளும் பொறாமைகளும் பகிரங்க மாகி விட்டதைக் கண்டு இதுவே தேர்தலில் தங்களுக்கு அனுகூலமான சமயம் என்றும், பல முக்கியமான பிரச்னைகளைச் சமாளிக்க வேண்டிய சந்தர்ப்பத்தில் பொதுஜனங்கள் பிளவுபட்டுக் கிடக்கும் தொழிற் கட்சியை நம்புவதற்குத் தயங்கு வார்கள் என்றும், 'கன்ஸர்வேடிவ்' கட்சிக்கே வாக்குக் கொடுப்பார்கள் என்றும் அவர்கள் எண்ணுவதாகத் தோன்றுகிறது.

இந்த அந்தரங்கக் காரணத்தை அவர்கள் வெளியில் சொல்ல முடியாது. ரகசியமாக ஆலோசித்துப் பயன்படுத்திக் கொள்ள வேண்டிய விஷயம்.

தொழிற் கட்சியில் உண்டான பிளவுகளைப் பயன்படுத்திக் கொள்ளத்தான் இப்படிச் சூழ்ச்சி செய்திருக்கிறார்கள் என்று தொழிற் கட்சியாரும் சொல்லக் கூச்சப் படுகிறார்கள். பிளவுகள் ஒன்றும் இல்லை, எல்லாம் சரிப்படுத்திக் கொண்டு விட்டோம் என்றே சொல்லி வருவார்கள்.

இங்கிலாந்திலேயே இப்படி யென்றால் பிற நாடுகளைப் பற்றிச் சொல்ல வேண்டியதே யில்லை. கட்சிகளுக்குள் எப்படி நடந்து கொள்ள வேண்டும், கட்சி களைக் கொண்டு சர்க்கார் எப்படி நடத்த வேண்டும், கட்சியின் அநுகூலங்கள் எந்த வரம்புக்குள் நிற்க வேண்டும் முதலிய பிரச்னைகளை யெல்லாம் பிரிட்டிஷ் கட்சித் தலைவர்கள் புத்திசாலித்தனமாக முடித்துப் பழக்கத்தில் கொண்டு வந்திருக்கிறார்கள். பிற நாடுகளில் இதை யெல்லாம் புதிதாகக் கற்றுக்கொள்ள வேண்டும்.

இதுவெல்லாம் கட்சி அடிப்படையின்மேல் கட்டப்பட்டு நிற்கும் குடியரசின் சகஜமான இலக்ஷணங்கள். ஆரம்பிக்கும்போது தத்துவங்களையும் லட்சியங்களையும் வைத்துக் கட்சிகள் உண்டாகின்றன. காலம் செல்லச் செல்ல, சின்னக் கூட் டங்கள் பெருங் கூட்டங்கள் ஆகின்றன. லட்சியங்கள் மறைந்து போகின்றன. கங்காணிகளும் மேஸ்திரிகளுமே குடியரசை ஆள்வார்கள். பொதுமக்களின் வாழ்க் கைச் சுதந்திரம் இவ்வளவுதான்.

# பால் விழா

பால் திருவிழா நடத்தி விட்டார்கள்! பத்திரிகைகளிலும் செய்தி வெளிவந்து பதிவாகி விட்டது!

பால் திருவிழாவை ஒரு தேவி பூஜையாக வைத்துக் கொண்டால் ஒரு ஆட்சேபணைக்கும் இடம் இல்லை.

"யாவர்க்கும் ஆம் பசுவுக்(கு) ஒருவாய்
அறுகு!"

என்று திருமந்திரமே சொல்கிறது. ரொம்ப சரி.

ஆனால் சர்க்கார் பாலுக்கு என்று ஒரு விழாவைக் கொண்டாடுவதில் என்ன பொருள்! இதனால் பாலோ அல்லது பால் கொடுக்கும் பசுவோ விருத்தியாகி விடுமா! "சர்வ ரோக நிவாரணி" என்று சில வைத்தியர்கள் எல்லா வியாதிகளுக்கும் ஒரே மருந்தைக் கொடுப்பதுண்டு. அந்த ஏக ஔஷத முறையில் ஒவ்வொரு பிரச்னைகளுக்கும் ஒரு டே நடத்துவது என்று இப்பொழுது வழக்கம் ஆகி விட்டது!

ஒரு தத்துவத்தை மக்கள் மறந்து போயிருந்தால் அதை நினைவூட்டி, அதை மறப்பதினால் ஏற்படும் தீமைகளைத் தவிர்க்க முயல்வது நியாயம். அதற்காக ஒரு தினத்தைக் குறிப்பிட்டு அன்று அனைவரும் அதில் கலந்து கொண்டு விஷயங்களை நினைவுபடுத்திக் கொள்ளலாம். ஆனால் இப்பொழுது பாலைப் பற்றி என்ன மறதி வந்து விட்டது! பால் உடம்புக்கு நல்லது என்ற மகத்தான விஷயத்தை யாராவது அறியாமல் இருக்கிறார்களா! அல்லது மறந்து போய் விட்டார்களா! குழந்தைகளும் மறக்கவில்லை. பெற்றோர்களும் மறக்கவில்லை. எல்லாருக்குமே தெரியும். கிடைத்தால் எல்லாருமே போதிய மட்டும் பால் குடிக்கத் தயார் தான்!

இந்த நிலைமையில், வருஷத்துக்கு ஒரு நாள் சில அறியாக் குழந்தைகளை அழைத்து அவர்களுக்குப் பால் விநியோகிப்பதனால் என்ன பயன்! பாலின் முக்கியத்தை அவர்களுக்கு உணர்த்தி மறுநாள் அது கிடைக்கவில்லையே என்ற அங்கலாய்ப்பை அதிகப்படுத்தவா!

செய்ய வேண்டிய காரியம் எது! நாட்டில் பால் வளம் பெருகும்படி செய்ய வேண்டும். அதற்கு வேண்டிய காரியத்தை ஆலோசிக்க வேண்டும். பசுக்களை வைத்துக் காப்பாற்றுவதில் என்ன கஷ்டங்கள் இருக்கின்றன, அந்தக் கஷ்டங்களை எப்படி நிவர்த்திப்பது என்பதையெல்லாம் ஆராய வேண்டும். யாருமே பசு வதை செய்யக் கூடாது என்று ஒரு சட்டம் போட்டு விட்டால் மட்டும் போதாது. புலால் உண்பவர்களுக்கு ஒரு தடை விதிப்பதால் பால் உண்டாகி விடாது.

பால் தந்து தனக்குப் பயன் கொடுக்கக் கூடிய ஒரு பசுவை எந்தச் சொந்தக்காரனும் கொல்ல மாட்டான். அதைக் காப்பாற்றுவதற்குச் சக்தி இருக்கும் எவனும் அதைக் கொல்லவோ விற்கவோ செய்ய மாட்டான். மாமிச வியாபாரி என்ன செய்கிறான்! பிறரிடமிருந்து பசுவை விலைக்கு வாங்கியே கொல்லுகிறான். பசுவைத் திருடிக் கொல்லுவதில்லை. இப்படியிருக்க, இறைச்சி வியாபாரத்தை ஒரு குற்றமாகச் செய்து விட்டால், பால் மாறிய பசுவை வைத்துக் கொண்டு காப்பாற்ற முடியாமல் கஷ்டப்படுகிற குடியானவன் என்ன செய்வான் என்பதை ஆலோசிக்க வேண்டும். பால் நின்று போன பசுவை எப்படிக் காப்பாற்றுவது என்கிற விஷயத்தைச் சர்க்காரும் சமூகமும் யோசித்துப் பார்த்து அதற்கு வழி செய்ய வேண்டும். "பால் குடியுங்கள், அதிகமாகக் குடியுங்கள்" என்று ஒரு விளம்பர நாளைக் குறிப்பிட்டு அதற்காக எல்லாரும் கூடித் திருவிழா நடத்துவதில் ஒரு பலனும் இல்லை. "எல்லாரும் பணம் சம்பாதிக்க வேண்டும்; அதிகமாகச் சம்பாதிக்க வேண்டும்!" என்று சொல்லி அதற்காக ஒரு திருவிழாக் கொண்டாடி விட்டால், நாட்டின் பொருள் நிலை உயர்ந்து விடுமா! அதுபோலத் தான் பால் விழாவும்! யாவரும் அறிந்த விஷயம், யாரும் மறக்க முடியாத ஒரு விஷயம். அதற்கு ஒரு டே அவசியமில்லை! (அவசியமில்லாததற்கு ஆங்கிலப்பதமே சரி; அதைப் போய்த் தமிழாக்கிக் கஷ்டப்பட வேண்டாம்!)

பால் மாறிப் போன பசுக்கள், சிறு கன்றுகள்–இவை சொந்தக்காரர்களுக்கு அதிக பாரமாக இல்லாத முறையில், அவற்றைக் காப்பாற்றுவதற்கு உரிய மேய்ச்சல் ஏற்பாடுகளே இப்பொழுது நாட்டுக்குத் தேவை.

"பசுவுக்கு ஒரு வாய் அறுகு" என்றால், பலன் தராத பசுவுக்கும் அறுகம்புல் தர வேண்டும், அதையும் காப்பாற்ற வேண்டும், அதுதான் லாபத்தைக் கருதாத தருமம் என்று பொருள்! இந்த விஷயத்தைப் பரிசீலனை செய்து நடவடிக்கை எடுப்பதே பொருத்தமான செயலாகும்.

# கலைக் களஞ்சிய வெளியீடு

தமிழ் வளர்ச்சிக் கழகத்தார் சென்ற தமிழ்ப் புத்தாண்டு தினத்தில் வெளியிட்டுள்ள அகர வரிசை அறிவுத் தொகை நூலின் இரண்டாவது பகுதியை மிக்க மகிழ்ச்சியோடு வரவேற்கிறோம்.

கட்டிய வீட்டுக்குக் குற்றம் சொல்லுவது எளிது. வீட்டைக் கட்டிப் பார்த்தால்தான் கஷ்டம் தெரியும். அது போல வெளியிட்ட புஸ்தகத்தில் உள்ள குறைகளையெல்லாம் எடுத்துக் கூறுவது எளிது. ஆனால் இம்மாதிரி ஒரு பெரும் பணியில் ஈடுபட்டுத் தொண்டாற்றுவது மிகவும் கடினமான காரியம். அந்த வகையில் இந்தக் கலைக் களஞ்சியத்தின் ஆக்க வேலையில் தலைமை ஆசிரியராக இருந்து மிக்க பொறுமையோடும் உழைப்போடும் திறமையோடும் பணி செய்துள்ள திரு பெரியசாமித் தூரன் அவர்களைப் பெரிதும் பாராட்டுகிறோம்.

பௌதிக விஞ்ஞானத்தைத் தமிழில் கற்பிக்க முடியுமா என்று இன்னும் சில ஞான சூன்யங்கள் கேட்டுத்தான் வருகிறார்கள். அவர்

களுக்கெல்லாம் இந்தக் கலைக் களஞ்சியம் ஒரு நல்ல விடையாகும்.

நூதன பௌதிகத்தைத் தமிழில் கற்பிக்க வேண்டும் என்று சொன்னதுமே, பல கேள்விகள் எழுகின்றன. அவற்றில் முக்கியமானது தமிழில் இந்தக் கல்விக்கு உரிய பதங்கள் இருக்கின்றனவா என்பது.

பொதுவாக கல்விச் சாலைகளிலும் அவற்றையொட்டிய பிரசங்கங்களிலும் விளக்கம் செய்கிற அறிஞர்கள், எல்லா நூதன அறிவுத் தொகைகளையும் தமிழில் எடுத்துச் சொல்ல முயன்றாலேதான் நாவில் மொழிகள் ஊறும். தீவிர முயற்சிக்கு இடையில் கலைமகள் தானே வந்து புகுவாள். தனியாகக் கதவு மூடின அறைக்குள்ளேயிருந்து கொண்டு வாதங்கள் செய்வதிலும் ஒரேயடியாகப் பிரதி பதங்களைத் தேடுவதிலும் அதிகப் பயனில்லை. கல்விப் பணியில் ஈடுபட்ட அறிஞர்கள் அவரவர்களுக்குத் தோன்றின சொற்களையும் சொற்றொடர்களையும் வைத்து மாணவர்களுக்கு விளக்கம் செய்யத் தொடங்கினால், நிலைக்கும் மொழிகளும் நிலைக்காத மொழிகளும் வழக்கத்தில் தெரிந்துவிடும். எந்த பலாத்காரத்திலும் இறங்கிச் சாதித்தல் நலமாகாது.

சொல்லாக்கம் என்ற காரியத்தில் ஈடுபடுகிறவர்கள் ஒரு விஷயத்தை முக்கியமாக ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். உடனடியாக நமக்கு நினைவு வராத பல நல்ல சொற்கள், அழகும் வேகமும் பொருளும் நிரம்பிய சொற்கள், தமிழில் ஏராளமாகக் கிடக்கின்றன. அதிகம் தோண்ட வேண்டியது கூட இல்லை. புதிய சொற்களை உண்டாக்குவது நம்முடைய வேலை என்றே நினைக்காமல், இருக்கும் சொற்களையும் சொற்றொடர்களையும் தேடிக் கண்டெடுப்பதே முக்கியமான காரியம் என்று கொண்டு இந்த மொழிபெயர்ப்புப் பணியில் ஈடுபட வேண்டும்.



திரு பெரியசாமித் தூரன்

விளக்கம் செய்கிற முறைகள் இரண்டு வகை. பாமரர்களுக்கும், ஆரம்பப் படிப்பில் உள்ள பிள்ளைகளுக்கும் கற்பிக்கும் முறை ஒன்று. மற்றொன்று, மேல் படிப்புக்கான முறை: அதாவது, இட்டமான இடுகுறிகள் வைத்துக் கொண்டு செய்ய வேண்டியது. இந்த இரண்டு முறையான விளக்கங்களுக்கும் ஒரே மாதிரிச் சொற்களாக இல்லாமல், அந்த அந்த முறைக்கு உகந்த சொற்களைப் பயன்படுத்த வேண்டும்.

வடமொழி, தென்மொழி என்று அவசியமற்ற விதத்தில் பேத உணர்ச்சி கொள்வது பயன்படாது. ஆங்கிலமாயினும் ஸம்ஸ்க்ருதமாயினும் தமிழ் ஒலி மரபுக்குச் சரியாக இசையும் வார்த்தையாக இருந்தால், அதை எடுத்துக் கொள்வதில் தவறில்லை.

ஒலி மரபு என்று ஒன்று இருக்கிறதா என்று பலர் கேட்கக் கூடும். இது ஒரு பாஷையின் ஜீவனைக் கண்டவர்களுக்கே புலப்படக் கூடிய நுட்பம். இந்த நுட்பத்தை அறிந்து, சொற்களை ஆக்கினால் அவை நிற்கும்.

தமிழில் முதல், இடை, ஈறு என்ற எழுத்துக்கள் ஒரு குறிப்பிட்ட முறையிலேதான் இணையும். இந்த விஷயம் தமிழ்க் காதுகளுக்குத்தான் தெரியும். இந்த ஒலி மரபுக்கு இசைந்த பல நல்ல சொற்களை ஏற்கனவே வெளியாகியுள்ள சில தமிழ் நூல்களில் காணலாம். உதாரணமாக ராஜாஜி எழுதிய 'திண்ணை ரசாயன'க் கட்டுரைகளைப் படித்துப் பார்த்தால் இந்த விஷயம் விளக்கமாகும்.

'அனலம்', 'நீரகம்' என்ற சொற்களைப் பாருங்கள் எத்தனை அழகு! இவை, தமிழில் எளிதாகக் கலந்து கொள்ளும். ஆக்ஸிஜென், ஹைட்ரோஜன் — இந்தச் சொற்கள் தமிழில் இசையாது. 'மாலெக்யூல்' என்கிற ஆங்கிலச் சொல்லை ராஜாஜி 'மூலக் கூறு' என்று மொழி பெயர்த்திருக்கிறார். மூலக் கூறு என்ற சொல்லில் தமிழ் மரபைக் காணலாம். காதுக்கு உகப்பான சொல் இது. உகப்பில்லாத சொல்லை பலாத்காரம் செய்து புகுத்தல் சரியில்லை.

ஆகவே இத்தனை சிக்கல்கள் நிரம்பிய ஒரு புதிய முயற்சியில் இறங்கி அதில் பெரும் வெற்றியும் கண்டு விட்டால் அந்த சாதனையை எவ்வளவு பாராட்டினால்தான் என்ன! பலவித மனோபாவங்களும், எழுத்து முறை விருப்பு வெறுப்புகளும் கொண்ட நிபுணர்களை எல்லாம் ஒன்று சேர்த்து, அவர்களுடைய யோசனைகளையெல்லாம் அவர்கள் மனம் புண்படாத முறையில் கூட்டியும் குறைத்தும் வரிசைப் படுத்தி அச்சில் ஏற்றுகிற ஆசிரியப் பணியை மேற்கொண்ட தூரன் அவர்களையும், அவருடைய ஆற்றல் மிக்க சகாக்களையும் தமிழ் மக்கள் சார்பில் பெரிதும் பாராட்டுகிறோம்.

தமிழ் நமது சென்னை ராஜ்யத்தில், பள்ளிபோதனை மொழியாகும் நல்ல காரியத்துக்குத் துணை செய்யும் வகையில், கலைக் களஞ்சியத்தின் மற்றப் பகுதிகளும் விரைவில் வெளிவர வேண்டும் என்று ஆசைப்படுகிறோம்.

போதனை முறையில் ஒரு முக்கியமான விஷயம், இந்த சந்தர்ப்பத்தில் வேறு விஷயமாயினும், குறிப்பிட விரும்புகிறோம். நூதனமான அன்னியச் சொற்களை எடுத்துக் கொண்டாலும் மொத்தத்தில் போதனை தமிழ் மாணவருக்குத் தமிழிலேயே இருக்க வேண்டும். ஆங்கிலப் பதங்களை உபயோகப்படுத்த வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்ட காரணத்தினால் பேச்செல்லாம் ஆங்கிலமாகவே இருக்க வேண்டும் என்பது இல்லை. அப்படி எண்ணுவது தவறாகும்.

'ப்ளாட்டினம்' 'ரேடியம்' என்கிற பதங்களை உபயோகித்த போதிலும், அவ்விரு மூலப் பொருள்களைப் பற்றிப் பேசுவதெல்லாம் தமிழாகவே இருக்கலாம். இதை உணர்ந்து நினைவில் வைத்துக் கொண்டால் நம்முடைய கல்வி மந்திரி அவர்களின் கொள்கைக்கும் சென்னை சர்வகலாசாலைத் தலைவருடைய கொள்கைக்கும் இருக்கும் பேதம் நிவர்த்தியாகும்.

# காளையைப் பிடிக்க!

இம்பீரியல் பாங்கியைத் தேசிய மயமாக்கும் மசோதா ஒன்றை நிதி மந்திரி தேஷ்முக் பார்லிமெண்டில் கொண்டு வந்திருக்கிறார்.

# முன்னேற முடியுமா?

"வாழ்க்கைப் பாதையில் முன்னேறிச் செல்ல இந்தக் கடுஞ் சுமைகள் பாரமாக இருந்தால் எப்படி?" என்று நேருஜி மக்கள் சபையில் கூறியிருக்கிறார்.

# இங்கும் அங்கும்!

எகிப்து
இந்தியா
அமெரிக்கா
துருக்கி
பாகிஸ்தான்

இந்தியா எகிப்து நாட்டுடன் நேச உடன்படிக்கை செய்து கொண்டுள்ளது.
பாகிஸ்தான் துருக்கியுடன் ராணுவ ஒப்பந்தம் செய்து கொண்டுள்ளது.

# இருட்டில் தேர்தல்!

தேர்தல்
பிரிட்டிஷ் பொதுஜனம்
பத்திரிகைகள்

பிரிட்டனில் மே மாதம் தேர்தல் நடக்க விருக்கும் இந்த சந்தர்ப்பத்தில்
அங்கே நீண்ட நாட்களாகப் பத்திரிகைகள் வேலை நிறுத்தத்திலும் நின்றிருக்கின்றன.



# தாய்மொழியில் வழிபாடு



தமிழகத்தைப் போல் விண்ணை யிடிக்கும் கோபுரங்கள் உடைய கோயில்கள் வேறு எந்த நாட்டிலும் இல்லை. மனங் கவரும் மதில்கள், உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் சித்திரப் பிராகாரங்கள், சிந்தனையைக் கிளறும் சிற்பங்கள் இவ்வளவையும் தற்போது தமிழகத்துக் கோயில் களில்தான் காண முடியும்.

கோயில்கள் எதற்காகக் கட்டப்பட்டன? மக்களின் மனத்தைப் பண்படுத்தவே என்பதை யாரும் மறுக்க முடியாது. "மக்கள் துங்கமுயர்ந்து வளர்கெனக் கோயில்கள் சூழ்ந்ததும் இந்நாடே!" என்ருர் கவியரசர் பாரதியார். ஆனல் இன்றைய நிலைமை என்ன?

ஆண்டவனுக்கு உரிய வழிபாட்டை அதாவது அர்ச்சனையைச் செய்து வைக்கும் அர்ச்சகர்கள் எல்லாரும் வடமொழியில் அர்ச்சனை செய்து வருகிருர்கள். இதைப் பற்றி ஒரு பிரச்னை கிளம்பி யிருக்கிறது.

பொது மக்கள் எல்லாருடைய உள்ளத்திலும் தெய்வ உணர்ச்சியை, பக்தி என்னும் அமுதை ஊட்டுவதற்குரிய வழிபாட்டில் மக்கள் பேசும் தாய்மொழியை ஆளவேண்டும் என்று பெரியார்கள் பலர் ஒன்றுகூடி யோசித்து ஒரு நல்ல முடிவைச் செய்திருக்கின்றனர்.

கோயில்களில் அர்ச்சனை தாய்மொழியில் நடத்த வேண்டும். அப்போதுதான் மக்களுக்கு அறிவு கலந்த உணர்ச்சி வளரும் என்று கோவிலூரில் நடைபெற்ற எட்டாவது அர்ச்சகர்கள் மகாநாட்டில் பல சமயப் பெரியோர்கள் சொல்லி யிருக்கின்றனர்.

இந்த மகாநாட்டைத் தொடக்கி வைத்த திருப்பெருந்திரு குன்றக்குடி அடிகளார் ஆலயங்களில் தமிழில் அர்ச்சனைகள் செய்ய வேண்டும், அப்போதுதான் மக்கள் மத்தியில் தெய்வ பக்தியை அழியாமல் காப்பாற்ற முடியும் என்று பல உதாரணங்களுடன் அனுபவ பூர்வமாக எடுத்துக் கூறியிருக்கிருர்.

கோயில்களில் தமிழ் மொழியில் அர்ச்சனை செய்ய வேண்டும் என்று கூறுவதால் வடமொழி மீது வெறுப்போ, துவேஷமோ கொள்வதாக யாரும் தவருகக் கொள்ளக் கூடாது என்று கேட்டுக் கொண்டிருக்கிருர்.

சமயத்துறையில், முக்கியமாகக் கோயில் களில் தமிழுக்கு உரிய இடத்தைச் சூன்யமாக்கி வடமொழியைப் புகுத்தி விட்டிருப்பதைத்தான் குன்றக்குடி அடிகள் அவ்வாறு குறிப்பிட்டிருக்கிருர்.

"மறைக் காட்டிலே கதவம் திறந்தது எங்கள் கன்னித் தமிழ்; எலும்பைப் பெண் உருவாக்கியது எங்கள் இன்பத் தமிழ்; முதலையுண்ட பாலனை அழைத்தது எங்கள் முத்தமிழ்." இவ்வளவு பெருமையுள்ள தமிழில் கோயில்களில் அர்ச்சனை செய்ய வேண்டும் என்று கூறுவதால் அது வடமொழித் துவேஷம் என்று கொள்ளக் கூடாது.

தெய்வ வழிபாட்டைத் தமிழ் நாட்டில் வளர்த்த சுந்தரர் அந்தணர் மரபில் தோன்றியவர். வடமொழியில் வேத ஆகமங்களை எல்லாம் கற்று உணர்ந்தவர். ஆனலும் அவரை ஆட்கொண்ட பெருமான் தனக்கு அர்ச்சனையைத் தமிழாகவும் பாட்டாகவுமே செய்யச் சொன்னதாகக் கொண்டார்:

> "அர்ச்சனை பாட்டேயாகும்
> ஆதலால் மண்மேல் நம்மை
> சொற்றமிழ் பாடு கென்ருர்
> தூமறைப் பாடும் வாயார்"

என்பது பெரிய புராணம். "முத்தமிழால் வைதாரையும் வாழவைப்பான்" முருகன் என்று மனம் கசிந்து உருகிப் பாடுகிருர் அருணகிரி நாதர்.

நமது சமய குரவர்களும், நாயன்மார்களும் கூறிய கருத்தைத்தான் இன்றைய தினம் குன்றக்குடி அடிகளார் போன்ற சமயத் தலைவர்கள் கூறுகிருர்கள்.

அர்ச்சனையில் தமிழைச் சேர்ப்பதினல் வேத மந்திரங்களை விட்டுவிட வேண்டும் என்பது இல்லை, தமிழிலே வேண்டுமென்று சொல்வோர்களின் கருத்து.

விஷ்ணு ஆலயங்களில் தமிழ்ப் பாசுரங்களைத் தங்குதடையின்றி பூஜா முறையில் சேர்த்துக் கொண்டிருக்கிருர்கள். வெளி உற்சவங்களிலும் மூர்த்திக்கு முன்னல் தமிழ்ப் பாசுரங்கள் பாடிக் கொண்டு தமிழ் பக்தர்கள் செல்லுகிருர்கள். வேத கோஷம் மூர்த்திக்குப் பின்னல்தான் போகும்.

வீடுகளில் செய்யும் தெய்வ ஆராதனைகளிலும் கூட வைஷ்ணவர்கள் தமிழில் பாசுரங்களைச் சொல்லி பூஜை செய்து வருகிருர்கள். வைஷ்ணவ தினசரி சம்பிரதாயங்களிலும் கூட வடமொழிச் சொற்களுக்குப் பதிலாகப் பல தமிழ்ச் சொற்களே பழக்கத்தில் இருப்பதையும் காணலாம். ஸ்நானம் என்பதற்கு நீராடுதல் என்பார்கள். திதி என்பதற்கு நாள் என்பார்கள். சம்பாவனை என்பதற்கு ஒதி இடுதல் என்பார்கள். இதைச் சைவர்கள் ஆழ்ந்து கவனிக்க வேண்டும்.

நமது தெய்வத் தமிழ் நாட்டில் சிற்சில கோயில்களில் ஏற்கெனவே தாய் மொழி

யில் அர்ச்சனை நடைபெற்று வருகின்றது. ஈரோடு, தூத்துக்குடி, குன்றக்குடி, திருப்பேரூர் முதலிய திவ்விய ஸ்தலங்களில் எல்லாம் தமிழில் வழிபாடு நடைபெற்று வருகின்றது. எல்லா அர்ச்சனைகளும் திருவிழாக்களும் குறையின்றிச் சிறப்பாகவே நடைபெற்று வருகின்றன.

தமிழ் அர்ச்சனை சம்பந்தமாகச் சந்தேகப்படுவோரும், வழிபாட்டுக்குரிய பாஷையைப் பற்றித் தவருன எண்ணம் கொண்டுள்ளோரும், மகாகவி பாரதியார் பாடிய,

தேவர் வருக வென்று சொல்வதோ?— ஒரு
செம்மைத் தமிழ் மொழியை நாட்டினுல்......
'ஓம்' என்றுரைத்து விடிற்போதுமோ—அதில்
உண்மைப் பொருளறிய லாகுமோ?
'அமிழ்தம் அமிழ்தம்' என்று கூறுவோம்—நித்தம்
அனேப் பணிந்து மலர்தூவுவோம்
தமிழிற் பழமறையைப் பாடுவோம் — என்றுந்
தலைமை பெருமைபுகழ் கூடுவோம்!

என்ற வேதாந்தப் பாடலைப் படித்துத் தெளிவு பெறலாம்.

# போர்ச்சுகலுக்கு எச்சரிக்கை

அணையப் போகும் தீபம் மூன்று தடவை குபீரென்று கிளம்பிக் கிளம்பி எரிந்து விட்டு அடங்கி விடுமல்லவா? அதுபோலவே அன்னியர் ஆதிக்கம், மறையப் போகும் தறுவாயில் கொடிய அடக்கு முறையில் இறங்குவது வழக்கம். சுதந்திரம் இழந்திருந்த சகல பிரதேசங்களிலும் இதே கதையைத்தான் கண்டும் கேட்டுமிருக்கிறோம். இந்த 'விதி'க்குத் தானும் விலக்கு அல்ல என்பதை கோவாவில் நடைபெற்று வரும் அன்னிய ஆட்சி நிரூபணம் செய்து வருகிறது.

சென்ற சில தினங்களாகக் கோவாவில் போர்ச்சுகல் அதிகாரிகளின் கொடுங்கோன்மை உச்ச நிலையை அடைந்திருக்கிறது. அங்கு சுதந்திரப் போரிலும் சத்தியாக்கிரகத்திலும் ஈடுபட்டுள்ள தேசபக்தர்களை அதிகாரிகள் அடித்தும், ஹிம்சித்தும் கூட்டம் கூட்டமாகக் கைது செய்தும் வருகிறார்கள். கோவா போலீசார் எவ்வளவோ இடையூறுகள் செய்து தடுத்தும், தேசபக்தர்கள் கோவா காங்கிரசை வெற்றிகரமாக நடத்தி விட்டார்கள்.

இதை யெல்லாம் கவனிக்கும்போது, போர்ச்சுகல் அதிகாரிகள் கோவாப் பிரதேசத்திலிருந்து தாங்கள் வெளியேறும் காலம் வந்து விட்டதை உணர்ந்திருக்கிறார்கள் என்றே எண்ண வேண்டியிருக்கிறது! வெளியேறுவதற்கு முன் கோவா மக்கள்மீது வஞ்சம் தீர்த்துக் கொள்ள வேண்டுமென்ற விபரீத எண்ணம் அவர்களுக்கு ஏற்பட்டிருக்கலாம். போர்ச்சுகல் ஆட்சி விஷயத்தில் இந்திய சர்க்கார் காட்டி வரும் பொறுமையையும் பெருந்தன்மையையும் போர்ச்சுகல் அதிகாரிகள் உணரவில்லை. சரித்திரம் கற்பிக்கும் படிப்பினையையோ, காலம் காட்டும் பாதையையோ அவர்கள் உணரவில்லை.

கோவாவில் போர்ச்சுகல் அதிகாரிகளின் அடக்கு முறைகள் இந்தியாவில் எவ்வளவு மனக் கொதிப்பை உண்டாக்கியிருக்கின்றன என்ற உண்மை சென்ற வாரம் மக்கள் சபையில் எழுந்த கேள்விகளிலிருந்து வெளியாயிற்று. அங்கத்தினர்களின் கேள்விகளுக்குப் பதில் அளித்த இந்திய சர்க்கார் உள்நாட்டு மந்திரி பண்டித கோவிந்த வல்லப பந்த், போர்ச்சுகல் சர்க்காரை இந்திய சர்க்கார் கடுமையாக எச்சரித்திருப்பதாக அறிவித்தார். "கோவா சத்தியாக்கிரகிகளுக்கு விரோதமாகப் போர்ச்சுகல் அதிகாரிகள் கைக்கொண்டுள்ள முறைகள் மிகவும் அநாகரிகமானவை" என்று பண்டித பந்த் எச்சரித்திருக்கிறார்.

அட்டைப்பட விளக்கம்

## கண்கள் சந்தித்தன!

அவன் சந்தையில் தான் கொண்டு சென்ற சாமான்களை விற்று விட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்தான். வழியில் அவன் காதலியும் தனியே நடந்து போய்க் கொண்டிருந்தாள். உடனே வண்டியை நிறுத்தி அவளை ஏற்றிக் கொண்டான். தன் உள்ளத்தில் பொங்கும் அத்தனை காதல் உணர்ச்சிகளையும் அவளிடம் கொட்டி விடவேண்டும் என்று வண்டி போகப் போக நினைத்துக் கொண்டே போனன். இனியும் கட்டுப்படுத்தி வைக்க முடியாது என்று தோன்றி விட்டது. வண்டியை நிறுத்தினன்; திரும்பிப் பார்த்தான். சொல்ல வேண்டும் என்று நினைத்த வார்த்தைகளில் ஒன்றுகூடவும் வெளி வரவில்லை!

கண்ணொடு கண்ணிணை நோக்கு ஒக்கின்
வாய்ச்சொற்கள் என்னபயனும் இல!

இவர்கள் நிலை இப்படி யிருக்க, ஓய்வு பெற்ற அந்த மாடுகள் "அப்பாடா!" என்று பெருமூச்சு விட்டன. "எத்தனை நேரம் வேண்டுமானலும் பார்த்துக் கொண்டிருங்கள். எங்களுக்கும் கொஞ்சம் அலுப்புத் தீரட்டும்" என்று தங்களுக்குள் பேசிக் கொண்டன!



லம் ஜில்லா நாமக்கல் தாலூகாவில் காளப்பநாயகன் பட்டியில் மிக உற்சாகம். புதுச் சட்ட சபை மெம்பர் மாரிக் கவுண்டருடைய சலிப்பறியா உழைப்பினால் அந்தக் கிராமத்தில் தேசிய விஸ்தரிப்புத் திட்டம் வந்து விட்டது. ஜில்லா கலெக்டர் புது வருஷத்தன்று வந்து மங்களத்' துவக்கம் செய்வார். ஊர் பள்ளிக் கூடத்துக்குச் சுண்ணாம்பு அடித்தார்கள். காளியம்மன் கோயிலுக்கு ஓடு மாற்றினார்கள்—அது பல வருஷங்களாகச் சீர் கெட்டுக் கிடந்தது. பாவடியில்தான் கூட்டம் நடக்கும். அவ்விடம் குப்பையெல்லாம் கூட்டிச் சுத்தப் படுத்தினார்கள். ஊர் மணியகாரர் வண்ணான் வீட்டுக்குச் சென்று ஒரு நல்ல வண்ணத் துணி இரவல் வாங்கித் தலைப்பாகை கட்டிக் கொண்டார். குழந்தைகள், தாய்மார்கள் எல்லாரும் ஒரே பேச்சு,—'விச்சரிப்பு' 'விச்சரிப்பு' என்று.




* * *

ஆரம்ப விழா முடிந்து விட்டது. கிராம விஸ்தரிப்புக் கமிட்டியும் ஏற்பாடு ஆய்விட்டது. மாரியப்பாசாரிதான் தலைவர். அவருடைய பட்டடையில்தான் விஸ்தரிப்பு ஆபீசு.

முதல் வெற்றி ஊருக்கு மின்சார விளக்குகள் வந்து விட்டன. நான்கு விளக்குகளுக்கு டிப்டி கலெக்டர் உத்தரவு செய்தார். சரியான இடத்தில் அந்த நான்கு விளக்குகளையும் அமைக்கக் கமிட்டி கூடிற்று. டிப்டி கலெக்டர் நேரில் வந்து கூட்டத்தை நடத்தினார்.

எல்லாரும் ஏகோபித்துப் பெருமாள் கோயிலுக்குமுன் ஒரு விளக்கு, மாரியப்பாசாரி வீட்டுக்கு முன் ஒரு விளக்கு, ஊர் குட்டையண்டை ஒன்று, ஹரிஜனச் சேரியில் ஒன்று என்று தீர்மானித்தார்கள்.

"என் வீட்டுக்கு முன் வேண்டாம், எஜமான்! அதை முதலியார் தெருவில் போட்டு விடலாம்" என்றார் மாரியப்பாசாரி.

"இப்படியல்லவோ இருக்க வேண்டும் நாட்டாண்மைப் பண்பு" என்றார் தெய்வசிகாமணி முதலியார். இவர்தான் டிப்டி கலெக்டர்.

* * *

விளக்குகள் வந்ததும் கிராமம் இரவில் மிக அழகாகப் பிரகாசித்தது. பகலில் கொஞ்சம் அழுக்கும் குப்பையுமாக இருந்தாலும் இராத்திரி ஒரு புது லக்ஷணத்தோடு விளங்கிற்று. ராத்திரி குழந்தைகள் விளக்கடியில் வெகு நேரம் விளையாடிக் கொண்டு, கூச்சல் போட்டுக் கொண்டிருப்பார்கள். செங்குந்தர் தெருவு விளக்கடியில் ஏகாதசி ராத்திரி வேஷம் போட்டுக் கூத்து நடத்துவார்கள். இப்படி 'விஸ்தரிப்பு' வந்ததும் காளப்பநாயகன் பட்டி மகிழ்ச்சிக் கடலாக இருந்தது.

தாலூகா வெல்லாம் காளப்ப நாயகன் பட்டியைப் பற்றியே பேச்சு. 'எங்கள் ஊருக்கு எப்போ வரும்!' என்று அடுத்த பெரியதாசம்பட்டி முதலிய கிராமங்களிலெல்லாம் கேள்வி. இதற்கு ஏதோ பதில் சொல்லி வந்தார் சட்டசபை மெம்பர். அவருடைய சமாதானம் கிராமத்தார்களுக்குத் திருப்திப் படவில்லை. "உங்களுடைய மாமனார் ஊர் காளப்ப நாயகன் பட்டி. அதனால் தான் அங்கே விளக்கு வைத்து விட்டீர்கள்" என்று குற்றம் சொல்ல ஆரம்பித்தார்கள். "இல்லை; இது அபவாதம்" என்றார் மாரியப்பாசாரி. "நாங்கள் பணம் சேர்த்தோம். எங்களுக்கு வந்தது. நீங்களும் பணம்





திரட்டுங்கள். உங்களுடைய ஊருக்கும் வரும்" என்றார்.

"இந்த மாரியப்பாசாரி சமாசாரம் நமக்குத் தெரியும்" என்றார் பெரியதாசம்பட்டி குமர கவுண்டர்.

* * *

மாரியப்பாசாரிக்குக் கொஞ்சம் நிலமுண்டு. அது பெரியதாசம்பட்டி குமர கவுண்டர் பூமிக்கு அடுத்தது. ஒரே ஏரிப் பாசனம். ஏரியிலிருந்து தண்ணீர் இரண்டு மூன்று வருஷங்களுக்கு ஒரு தடவைதான் வரும். மற்றப்படி ஏரி வறண்டு கிடக்கும். மாரியப்பாசாரியின் வயலில் அவர் ஒரு கிணறு வெட்டியிருந்தார். அதில் எப்போதும் தண்ணீர் இருக்கும். குமர கவுண்டர் நிலத்தில் கிணறு கிடையாது. ஏரியில் தண்ணீர் வற்றிப் போன காலத்தில் அவருடைய நிலத்தில் புன்செய் சாகுபடிதான். மாரியப்பாசாரியின் குத்தகைதாரன் நன்றாகப் பாடுபடும் ஆள். எப்படியோ நல்ல வெள்ளாமை எடுத்து நியாயமாகக் கொடுக்க வேண்டிய பாகம் ஆசாரிக்குக் கொடுத்து வந்தான்.

ஒரு நாள் இரவு கிணற்றின் கவலைச் சாமான் திருட்டுப் போய்விட்டது. குத்தகைதாரன் சாமிக்கவுண்டன் ஆசாரியிடம் சமாசாரம் சொன்னான். "குமர கவுண்டனுடைய ஆள் சக்கிலி ராமசாமிதான் இந்த வேலை செய்திருக்கிறான். சக்கிலித் தெரு முழுதும் எல்லாருக்கும் தெரியும். வெட்டி விறகுத் துண்டுகளாக்கிக் குமர கவுண்டர் வீட்டில் போட்டிருக்கிறான்" என்று சொன்னான்.

ஆசாரிக்கு இன்னது செய்வது என்று தோன்றவில்லை. விஷயம் இப்படித்தான் என்பது உறுதியானாலும் போலீசாருக்குச் சொன்னால் ஒன்றும் உருப்படியாகாது என்பதும் அவர் கண்டார்.

குமர கவுண்டரிடம் நேரில் சென்று பேசினார். குத்தகைதாரன் சாமிக்கவுண்டன் ஏழை. அவனை இப்படி அநியாயம் செய்து கெடுப்பது தவறு என்று நிதானமாகச் சொன்னார்.

குமர கவுண்டருக்குப் பெருங் கோபம் வந்துவிட்டது.

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

"எந்தப் பையல் இந்தப் பொய் சொல்லத் துணிந்தது? செருப்பால் அடித்து விடுவேனுக்கும்" என்றார்.

"கோபித்துக் கொள்ள வேண்டாம். ராமசக்கிலி கோயிலில் சத்தியம் செய்யட்டும். போதும்" என்றார் மாரியப்பாசாரி.

"அப்படியே சரி!" என்றார் குமர கவுண்டர்.

* * *

காளப்ப நாயக்கன் பட்டி காளி கோயில் அந்தப் பிரதேசத்திலெல்லாம் பெயர் வாய்ந்த கோயில். எந்தப் பஞ்சாயத்துத் தகராறுகளுக்கும் அந்தக் காளியம்மன் கோயில் முன்னிலையில் சத்தியம் செய்து முடிப்பது வழக்கம்.

ஆடி மாதம் அமாவாசை தினம். சத்தியம் செய்வதற்காக ராமசக்கிலி கோயிலுக்கு வந்திருந்தான். பெருங் கூட்டம். இரண்டு கிராமத்துக் குடியானவர்களும் கூடியிருந்தார்கள். பூஜாரி திருநீறு கொண்டு வந்து ராமனிடம் தந்தான். அவன் அதை இரண்டு கைகளிலும் நீட்டி வாங்கிக் கொண்டு நெற்றியிலும் தலையிலும் பூசிக் கொண்டான்.

கொண்டு போய் நிறுத்தினார்கள். "இந்தத் திருட்டுக்கு நான்" என்று ஆரம்பித்தான். உடனே திடீர் என்று விழுந்து ஓடி விட்டான். எல்லாரும் துரத்திக் கொண்டு போனார்கள். ஆள் சிக்கவேயில்லை.

* * *

"அவன் கண்டிக்குத்தான் போய் விட்டான். ஒரு மாதமாகவே அவன் ஊரை விட்டுப் போவதாக மனைவியிடம் சொல்லியிருந்தான்" என்றார்கள் சேரியில் எல்லாரும்.

"இது மாரியப்பாசாரியின் சூழ்ச்சி" என்றார் குமர கவுண்டர்.

ஆயினும் ஊரார் வாயில் இது மாரியப்பாசாரியின் வெற்றியாகவே பிரசாரமாயிற்று. குமர கவுண்டர் அவமானப் பட்டார்.

* * *

அடுத்த வருஷம், காளி கோயிலில் இரண்டு ஜன்னல்கள் வைத்து ஒரு மின்சார விளக்குக்கும் ஏற்பாடு ஆயிற்று. மாரியப்பாசாரி என்ன சொன்னாலும் அதை டிப்டி கலெக்டர் ஒப்புக் கொண்டு மேலுக்கு எழுதி உத்தரவு பெற்று வந்தார். மாரியப்பாசாரியின் செல்வாக்கு மிக ஓங்கிப் போயிற்று. மாரியப்பாசாரிக்கு ஒரு பாட்டியம்மை இருந்தாள். அவள் ஒரு நாள் காலை தலை விரித்துக் கொண்டு ஆட ஆரம்பித்தாள்.

கண்டார் சொல்லும் சொல்லைக் கேட்டு
எண்ணெய் விளக்கை விட்டு விட்டு
தீண்டாத தீபம் ஏற்றுகிறாய்
வேண்டாம் வேண்டாம் மாரியப்பா
என் பழைய சுவரை ஓட்டையாக்கு
பின்னால் பார்ப்பாய் எங்கே இருப்பேன்
ஓட்டை வழியாக ஓடிப்போவேன்
தீட்டு விளக்கைக் கொண்டு வராதே!

இப்படியும் இன்னும் பலவாறாகவும் பாடியாடினாள்.

"ஏ, பாட்டி! இரு!" என்று மாரியப்பாசாரி மிரட்டியும் சமாதானம் செய்தும் சமாளித்தான்.

கம்பி போட்ட ஜன்னல்கள் வைத்து விட்டார்கள். நல்ல 'பல்பு' விளக்கும் வந்தது. வைத்து விட்டார்கள். திருவிழாவும் ஒன்று விமரிசையாக நடத்தி விட்டார்கள். காளப்ப நாயகன் பட்டியின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை.

* * *

"இது வென்ன விபரீதம்!" "கலிகாலம் அல்லவா?" "பாட்டியின் பேச்சைக் கேட்டிருக்க வேண்டியது" என்று ஒவ்வொருவர் ஒவ்வொரு விதமாகப் பேசிக் கொண்டு ஊரே குழப்பமாகப் போய் விட்டது. கோயிலுக்குள் ராத்திரி திருடன் புகுந்து சாமி சாமான்களெல்லாம் தூக்கிக் கொண்டு போய் விட்டான். போலீசாரும் வந்து விசாரித்துக் கொண்டிருந்தார்கள். பெரியதாசம்பட்டி சக்கிலித் தெருவில் அமர்க்களம். அங்கே எல்லாருடைய வீடும் சோதனை போட்டார்கள். ஒன்றும் துப்பு சிக்கவில்லை.

"விளக்கு வைத்ததும் கோயிலில் கூட்டம் பெரிதாயிற்று. ஆனால் பக்தி குறைந்து போயிற்று" என்றார் கணக்கு வேங்கடய்யர்.

"ஆமாங்கோ! இல்லாவிட்டால் யாராவது அம்மன் கோயிலில் நுழைந்து திருட்டு செய்வார்களா?" என்றான் பழனிக் குறவன்.

"கன்னம் வைத்திருப்பதைப் பார்த்தாயா?" என்றார் வேங்கடய்யர்.

"பார்த்தேனுங்கோ! அது நம்மவங்க வேலையல்ல, பார்த்தாலே தெரிகிறது. இது யாரோ குடியானப் பயல் வேலை" என்றான் பழனி.

காளப்பநாயகன்பட்டிக் கோயிலின் புகழ் தீர்ந்து போயிற்று. சில விஸ்தரிப்புக்கள் இப்படியும் ஆகும்!



# ரவிசந்திரிகா

## 2. இருளில் கண்ட ஒளி!

'சோமு'

நாற்றுக்கால் மண்டபத்தில் நாட்டியம் நடந்து கொண்டிருந்தது.

சந்திரிகா தோகை மயிலைப் போல் மெல்ல மெல்ல நடந்தாள். சில சமயங்களில் புள்ளி மானைப் போல் வேகத்தோடு துள்ளிக் குதித்தாள். அன்ன நடை என்கிறார்களே, அப்படியும், சில சமயங்களில் அவள் மென்னடை நடந்தாள்.

அந்த நடனத்தை எப்படிச் சொல்லிலே சித்திரிப்பது? அழகும் இசையும் உணர்ச்சிகளுமாகச் சேர்ந்து பதினாறு வயதுப் பெண்ணின் வடிவில் நின்று கொண்டு நடனம் ஆடினால் எப்படியிருக்கும்?

சந்திரிகா நடனம் ஆடினாள். அதே சமயம் அவளுடைய இதய அரங்கில் வேறொரு நடனம் நடந்து கொண்டிருந்தது. அந்த நடனம் மயிலைப் போலவும், அன்னத்தைப் போலவும், புள்ளி மானைப் போலவும் இல்லை. கார்காலத்தில் வான அரங்கிலே நடக்கும் மின்னலும் இடியும் போல் இருந்தது அது! நடனத்துக்கு மத்தியில் ஆட்டம் நின்று வாத்தியங்கள் இசையும் போதெல்லாம், சந்திரிகா மண்டபத்தின் வாசலையே கூர்ந்து பார்த்தாள். யாருடைய வரவுக்காகவோ அவளுடைய மெல்லிய இதயம் துடியாகத் துடித்தது என்று நன்றாகத் தெரிந்தது.

கச்சேரியின் மத்தியில் நிகழ்ந்தது, சந்திரிகாவின் இதயத் துடிப்புக்குக் காரணமான அந்த எதிர்பாராத சம்பவம். ஸ்வர வரிசை மேலே மேலே செல்லுவது போல நடனம் விறுவிறு என்று நடந்து கொண்டிருந்த போது, ரஸமான ஒரு கட்டத்தில் திடீர் என்று ஏதோ நினைத்தவன் போல ரவீந்திரன் எழுந்தான். தன்னோடு உட்கார்ந்திருந்த ஒரு சிஷ்யரைப் புல்லாங்குழல் வாசிக்கச் சொல்லி விட்டுத் தன் புல்லாங்குழலை இடுப்பிலே செருகிக் கொண்டு அந்த அரங்கிலிருந்து வெகு வேகமாக எங்கோ சென்று விட்டான் ரவீந்திரன்! இது சந்திரிகாவின் உள்ளத்தை வேதனை செய்தது. ரவீந்திரன் திரும்பி வர நேரம் ஆக ஆக, சந்திரிகாவின் சஞ்சலம் அதிகரித்தது. அவளுடைய இதய வீணை படிப்படியாகக் கலைய ஆரம்பித்தது.

இதோ, மீண்டும் அதே வேகத்தோடு ரசிகர் கூட்டத்தை வகிடு எடுத்த மாதிரி விலக்கிக் கொண்டு உள்ளே நுழைகிறான் ரவீந்திரன்! கையில் என்ன? ரோஜாப் பூவின் நிறத்தில் மெல்லிசான ஒரு சிவப்புக் காகிதச் சுருள். உள்ளே வெள்ளி மின்னுகிறது. சந்தேகமில்லை; நகைக் கடையிலிருந்து வாங்கி வந்த ஒரு சுருள்தான் அது!

ரவீந்திரன் வந்ததும் வாத்திய வித்வான்களிடையே ஒரு பரபரப்பு உண்டாயிற்று. புல்லாங்குழல் வாசித்துக் கொண்டிருந்தவர் எழுந்து நின்றார். அவசரத்தோடு வந்த ரவீந்திரன், அந்த சிஷ்யரிடமிருந்து புல்லாங்குழலை வாங்கினான். தன்னுடைய ஜிப்பாவின் பையிலிருந்து விரைவாகக் கைக்குட்டையை எடுத்தான். வெகு அவசரமாக அந்தக் கைக் குட்டையினால் புல்லாங் குழலைத் துடைத்தான். அடுத்த வினாடி அதை உதட்டிலே பொருத்தி வாசிக்க ஆரம்பித்து விட்டான்.

என்ன ஆச்சரியம்! ரவீந்திரனுடைய நடையிலும், பேச்சிலும், கண்களிலும் தோன்றிய பதற்றமும் வேகமும் இப்பொழுது விரல்களிலே பரிணமித்தன. இசையும் கற்பனையும் விறுவிறுப்போடு பொங்கி வந்தன. புல்லாங்குழலிலிருந்து பிறந்த



இசையின் வேகம் மற்றப் பக்கவாத்தியங்களிலே தவழ்ந்து சந்திரிகாவின் பாதச் சிலம்பிலே சென்று பின்னியது. 'கலீர் கலீர்' என்று புதிய மிடுக்கோடு சலங்கைகள் ஒலிக்க ஆரம்பித்தன.

பைரவ ராகத்தில் அமைந்த ஒரு வர்ணம் அது! நம்முடைய தென்னாட்டில் எத்தனை நூறு ஆண்டுகளாக இந்த பைரவி என்ற ராகம் முதிர்ந்து முதிர்ந்து, கனிந்து கனிந்து, சுவை யேறி வந்திருக்கிறது. அந்தக் கனிவெல்லாம் சேர்ந்து அரங்கிலே நின்ற சந்திரிகாவின் பூங்கொடி போன்ற மேனியிலே குலுங்கியது.

இசை நின்றது. ரவீந்திரன் எழுந்தான். அந்த ரோஜா நிறக் காகிதச் சுருளைக் கையிலே எடுத்தான். சரேல் என்று நடந்து சென்று, ரசிகர்களின் முன் வரிசை முகப்பிலே அமர்ந்திருந்த கனவானை அணுகி அவரிடம் காதோடு ஏதோ சொல்லி விட்டு, அந்தச் சுருளைக் கொடுத்தான். அடுத்த விநாடி அவர் எழுந்து நின்றார். ரசிகர்கள் கை தட்டினார்கள்.

அரங்கேற்றத்துக்குத் தலைமை வகித்த கனவான் இப்பொழுது பேச ஆரம்பித்தார்:

"சகோதர சகோதரிகளே, இந்த அரங்கேற்றத்துக்குத் தலைமை வகிக்கும் படியான சந்தர்ப்பம் எனக்குக் கிடைத்ததை ஒரு பெரும் பாக்கியமாகவே கருதுகிறேன். ஏனென்றால் இன்று நம் முன் நடனம் ஆடுகிற சந்திரிகாவின் குருவாகிய ரவீந்திரன் அவர்கள், ஒரு பெரிய இசைப் பரம்பரையைச் சேர்ந்தவர். சங்கீதம் அவரோடு உடன் பிறந்தது. அவருடைய இந்தக் குடும்பச் சொத்து இன்னும் கோடிக் காலம் நின்று விளங்க வேண்டும் என்ற ஆசையில், இப்படிப்பட்ட ஒரு சிஷ்யப் பெண்ணைத் தேடிப் பிடித்து, ரவீந்திரன் தமது ஞானத்தை யெல்லாம் அவளுக்கு அன்போடு அப்படியே வழங்கி யிருக்கிறார்.

"சந்திரன் எப்படி சூரியனிடமிருந்து ஒளியைப் பெற்று நிலவாக நமக்குத் தருகிறதோ, அதுபோல இந்தச் சந்திரிகாவும் ரவீந்திரனிடமிருந்து சங்கீத ஒளியை ஏற்று நமக்கு நிலவாக வழங்குகிறாள். தென்னாட்டின் சங்கீத பரம்பரைக்கே தனிச் சிறப்பாக அமைக்

ளுள்ள வர்ணங்கள், பதங்கள், ஜதிகள், தில்லானாக்கள் முதலியவற்றையெல்லாம், ஒளி மங்கி விடாமல் பாதுகாத்துப் பிரகாசிக்கும்படி செய்வதற்குத் தகுதி வாய்ந்த இந்த அருமையான சஞ்சிகையை, அவர் எங்கு கண்டு எப்படிப் பயிற்சி அளித்தார் என்பதை எண்ண எண்ண ஒரே ஆச்சரியமாக இருக்கிறது. உண்மையில் இது ஒரு அதிசயந்தான் என்று........."

தலைவர் அதற்குமேல் ஏதேதோ புகழுரைகள் பேச முனைந்தார். ஆனால் ரவீந்திரனுடைய செவிகளில் அந்த வார்த்தைகள் ஒன்றும் விழவில்லை. அவனுடைய மனம் ஒரு ரயில் வண்டியின் சக்கரத்தைப் போல நினைவுப் பாதையிலே வேகமாகச் சுழல ஆரம்பித்தது.



* * *

ரயில் வண்டியின் சக்கரங்கள் மிக வேகமாகச் சுழன்றன. தனது நீண்ட நாளைய ஆசைப்படி ரவீந்திரன் இலஞ்சியை நோக்கிச் சென்று கொண்டிருந்தான்.

இலஞ்சி என்ற அழகான பெயரோடு கூடிய ஊரைப் பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள். 'இலஞ்சி' என்ற சொல்லுக்குத் தமிழில் மடு, குளம், மதில் என்று பல பொருள். இத்தனை பொருளுக்கும் பொருத்தமாக இலஞ்சி என்ற ஊர், குளமும் வயலுமாகக் கண்ணுக்கு இனிய காட்சி தருகிறது. அங்கே மதிற் சுவர் இல்லையென்றாலும், அழகான ஒரு கோவிலும் அதன் மதிலும் உண்டு. தமிழ்க் கடவுளான முருகனுடைய ஆலயம் வயல் வரப்புக்களையே கோட்டையாகவும், நெற் கதிர்களையே சுடர் வேலாகவும் தாங்கி ஊருக்கு அரண் செய்கிறது.

இந்த சுந்தர கிராமத்தைப் பற்றி ரவீந்திரன் கேள்விப்பட்டிருக்கிறான். இந்த ஊர் திருக்குற்றாலத்துக்கு அருகில் இருக்கிறது என்று தெரிந்ததும் பிரியம் இன்னும் அதிகரித்தது. இதற்கெல்லாம் மேலாக, குறவஞ்சி நாடகத்தில்,

"அருள் இலஞ்சி வேலர்தமக்கு
ஒரு பெண்ணைக் கொடுத்தோம்
ஆதினத்து மலைகள் எல்லாம்
சீதனமாய்க் கொடுத்தோம்!"

என்று குற்றாலத்துக் குறத்தி, இலஞ்சி முருகனைச் சம்பந்தி முறை கொண்டாடிப் பாடுவதைக் கேட்கும் போதெல்லாம் அங்கே போக வேண்டும், அந்த இலஞ்சி முருகனுடைய சந்நிதியில் தனது சங்கீதக் காணிக்கையைச் செலுத்த வேண்டும் என்று ரவீந்திரன் ஆசைப்பட்டிருக்கிறான்.

இந்த நிலையிலேதான் அவனுக்கு இலஞ்சியிலிருந்து ஒரு கல்யாணக் கச்சேரிக்கு அழைப்பு வந்தது. மேள தாளத்தோடு வந்தது என்று சொல்ல வேண்டும். காரணம், அப்பொழுதெல்லாம் புல்லாங்குழல் வித்வான் ரவீந்திரனுடைய கச்சேரிக்கு நாடெல்லாம் அத்தனை மதிப்பும் செல்வாக்கும் இருந்து வந்தன.

ரயில் வேகமாக ஓடிக்கொண்டிருந்தது. ரவீந்திரன் இலஞ்சியை நோக்கிச் சென்றுகொண்டிருந்தான்!

அப்பொழுது இரவு எட்டு மணி இருக்கும். வெளியே கன்னங் கறுப்பான இருள் இந்த உலகத்தையே இழுத்துப் போர்த்து மூடியிருந்தது. வேகமாகச் சென்ற ரயில் வண்டிக்குள்ளே மின்சார விளக்கு எரிந்து கொண்டிருந்தாலும் ஜன்னல்வழியாகத் தலையை நீட்டினால் இருள், இருள், இருள்! ஒரே கார்த்திகை மாதத்து அமாவாசைக் காரிருள்!

ரயில் வண்டி ஓடும்போது அங்கங்கே பொட்டுப் பொட்டாகத் தெரிகின்ற சிற்றூர்களின் விளக்கு வெளிச்சமும், கைகாட்டி மரங்களின் சிவப்பு பச்சை விளக்குகளும் சேர்ந்து 'இருளுக்கு மத்தியில் ஒளி இருக்கிறது' என்ற உபநிஷத வாக்கியத்தை நிரூபித்துக் கொண்டிருந்தன. அதைப் பார்த்தபோது ரவீந்திரனுடைய உள்ளத்தில் ஏதேதோ தத்துவச் சிந்தனைகள் ஓடின.

"பாம்புக் கோயில் சந்தை", "பாம்புக் கோயில் சந்தை" என்று போர்ட்டர் கத்தினான். ரயில் நின்று கொண்டிருந்தது. ஒரு சிறிய ஸ்டேஷன் அது.

இதோ! ரயில் நின்று மூச்சு விடுவதற்குள் கார்ட் விசிலை ஊதி விட்டார். ஸ்டேஷன் மாஸ்டரும் பச்சை விளக்கைக் காண்பித்து விட்டார். ரயில் மீண்டும் நகர ஆரம்பித்தது. ஆனால் இதென்ன?

ரவீந்திரன் ஏறியிருந்த மூன்றும் வகுப்பு வண்டியின் கதவைத் திறந்து கொண்டு யாரோ உள்ளே நுழையும் சத்தம் கேட்டது. உடனே "இறங்கு, இறங்கு, கீழே இறங்கு!" என்று கூக்குரல்கள் எழுந்தன. இதற்குள் வண்டி நகர்ந்து வேகம் எடுக்க ஆரம்பித்தது.

ரவீந்திரன் பெஞ்சின் பின்புறம் உள்ள சாய்மானத்தின் இடைவெளி வழியாகப் பார்த்தான். யாரோ ஒரு பிச்சைக்காரக் கிழவியும் ஒரு சிறு பெண்ணுமாக உள்ளே வந்து கொண்டிருந்தார்கள். இவர்களை வண்டிக்குள்ளே விடுவது பற்றிச் சக பிரயாணிகளுக்குள் ஒரு பலமான சர்ச்சை.

"இந்த மாதிரி டிக்கெட் இல்லாமல் பிரயாணம் செய்கிறவர்களால்தானே நம்முடைய நாடே கெட்டுப் போகிறது!" என்றார் ஒருவர்.

"ரயில் நகரும் சமயமாய்ப் பார்த்து ஏறி விட்டாள் பாருங்களேன்! என்ன திருட்டுத்தனம்!" என்றார் இன்னொருவர்.

"கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளுங்கள் சார்!" என்று சொல்லிக் கொண்டே பின்னுக்கு ஒதுங்கிச் சென்றார் மூன்றாவது சூரர்!

"ஐயோ பாவம்! அவர்களை ஒன்றும் செய்யாதீர்கள் ஐயா!" என்றார் ஒரு இரக்கப் பிரயாணி.

இதற்குள் சர்ச்சை* பலத்து விட்டது. இரண்டு நிமிஷ நேரத்தில் இரக்கப்படுகிற கட்சியின் பலம் ஓங்க ஆரம்பித்தது.

"சரி பாவம்! இந்த நடைபாதையில் உட்கார்ந்து விட்டுப் போகட்டும்!" என்றார் முதலில் பேசிய நண்பர், இரக்கத்தைப் புதிதாக வரவழைத்துக் கொண்டு!

இந்தக் கட்டத்திலே ரவீந்திரன் வேகமாக எழுந்தான்.

"இரக்கமா! ஏன் சார் இதுவா இரக்கம்? அட ஆண்டவனே! ரயில்வேக்காரனுக்குச் செய்கிற துரோகம் ஐயா இது! இந்தப் பரம துரோகத்துக்கா இரக்கம் என்று பெயர்? அப்படிக் கருணை இருந்தால் உங்கள் மடியில் இருந்து பணத்தை எடுத்து இரண்டு டிக்கெட் வாங்கிக் கொடுங்களேன்! எவனுக்கோ சொந்தமான ரயிலில் நமக்கு என்ன ஐயா உரிமை?"



ரவீந்திரனுடைய குரலில் படபடப்பு ஒலித்தது.

"சார், ஆத்திரப் படாதீர்கள். அடுத்த ஸ்டேஷனில் வண்டி நின்றதும் இறக்கி விட்டு விடலாம்!" என்றார் ஆரம்பத்தில் இரக்கப்பட்ட மனிதர். ஆனால் இதென்ன திடீரென்று ஓசை?

இரண்டு காலணாக்களினால் தாளம் தட்டுகிற ஒலி கேட்டது. அதைத் தொடர்ந்து சிறுமியின் பாடல் வந்தது:

முன்னூ முனையிலே
மூணு குளம் வெட்டினேன்
ரெண்டு குளம் பாழு—ஒண்ணு
தண்ணியே இல்லே—ஒண்ணு
தண்ணியே இல்லே!

தண்ணியில்லாக் குளத்துக்கு
வரிப் பணம் மூணுபணம்
ரெண்டு பணம் செம்பு—ஒண்ணு
செல்லவே இல்லே—ஒண்ணு
செல்லவே இல்லே!

செல்லாத பணத்துக்கு
மண்குயவன் மூணுபேரு
ரெண்டுபேரு நொண்டி—ஒத்தன்
கையே இல்லே—ஒத்தன்
கையே இல்லே!

கையில்லாக் குயவன்
செய்தது மூணு பானை,
ரெண்டு பானை பச்சை—ஒண்ணு
வேகவே இல்லே—ஒண்ணு
வேகவே இல்லே!

அவ்வளவுதான்; ரயில் வண்டிக்குள்ளேயிருந்த அத்தனை பேரும் சர்ச்சைகளை மறந்து விட்டார்கள். அந்த அருமையான நாட்டுப் பாடலின் வர்ணனையில் சொக்க ஆரம்பித்தார்கள். இதுதான் சமயம் என்று அந்தப் பொல்லாத கிழவி கையை அகலமாக நீட்டிப் பிச்சை கேட்டாள். சிறு பெண்ணோ பாவம், தன்னுடைய பாட்டிலேயே முழு மனத்தையும் செலுத்தி, இரண்டு காலணாக்களை விரலுக்குள்ளே கொடுத்துத் தாளம் தட்டியவாறு பாடிக் கொண்டு நின்றாள். ஊடே ஊடே அவள் கிழவியைப் பார்த்துக் கொண்டாள். கேட்பவரின் உள்ளத்தில் இரக்கம் உண்டாக்கும் அளவுக்குப் பாட்டு உருக்கமாக இருக்கிறதா என்பதைக் கிழவியின் முகக் குறிதான் அங்கீகரிக்க வேண்டும் போலும்!

பாடலின் பொருளை ஜனங்கள் அனுபவித்துக் கொண்டிருந்தபோது, ரவீந்திரனுடைய உள்ளம் அந்தச் சிறுமியின் குரலிலே லயித்தது. ஒரு பிச்சைக்காரப் பெண்ணின் குரலா அது? ரவீந்திரனால் நம்பவே முடியவில்லை. பாறைக்குள்ளே, கல்லின் மடிப்புக்களுக்குள், மென்மையான இளஞ் செடிகள் வளர்ந்து மலர் பூக்கின்றன என்று விஞ்ஞான நூல்கள் கூறுகின்றனவே, அப்படி யல்லவா இருக்கிறது இது!

ரவீந்திரன் பெஞ்ச் பலகையை விட்டு எழுந்து நின்று, அந்தச் சிறுமியை மின்சார வெளிச்சத்தில் கூர்ந்து பார்த்தான்.

எலுமிச்சம் பழம்போன்று இருந்தாள் அந்தப் பெண். முகத்திலேதான் எத்தனை களை! அவளுடைய கண்களில் மின்சார விளக்கின் ஒளி படும்போது, ரத்தினக் கற்களில் வெளிச்சம் பட்டால் ஒரு ஜொலிப்போடு ஒளிக்கதிர் எதிரொளித்து வரும் அல்லவா, அப்படி இருந்தது! 'கட்டழகு' என்ற சொல்லுக்குப் பொருத்தமாக அந்த இளம் மேனியின் அங்கங்களில் வடிவும் வனப்பும் அமைப்பாக இருந்தன.

ரவீந்திரன் சிறுமியின் பாடலைக் கேட்டுக் கொண்டே, அவனுடைய உடல்

அழகையும், குரல் இனிமையையும் வியந்த வண்ணம் இருந்தான்.

"வேகாத பானைக்கு
இட்டது மூணரிசி
ரெண்டரிசி நெட்டை—ஒண்ணு
வேகவே இல்லே—ஒண்ணு
வேகவே இல்லே!

வேகாத அரிசிக்கு
விருந்தாளி மூணுபேரு
ரெண்டு பேரு பட்டினி—ஒத்தன்
உண்ணவே இல்லே—ஒத்தன்
உண்ணவே இல்லே!

என்று அந்தப் பிச்சைக்காரப் பெண் தன்னுடைய பாடல்—விருந்தை முடித்துக் கொண்டு, ரவீந்திரனுக்கு முன்னால் நடந்து வந்தாள். அந்த நடையிலேதான் எத்தனை கவர்ச்சி! ஒயிலாக நடனம் ஆட வேண்டிய மென்மையான பாதங்கள் அல்லவோ அவை!

சற்று நேரத்துக்கு முன்பு அவளைக் கீழே இறக்கிவிடத் தயாராக இருந்த ரவீந்திரன்தானா அது! என்ன விந்தை! ஜிப்பாவின் பைக்குள்ளே கையைப் போட்டான். ஒரு ரூபாயும் சில்லறையுமாக இருந்தது. அதை அப்படியே எடுத்து அந்தச் சிறுமியின் கையிலே வைத்தான்.

"ஹும். பாடு மேலே!" என்றான்.

கிழவி அந்தச் சிறுமியின் கையிலிருந்த பணத்தைத் தான் எடுத்துக் கொண்டு, அடுத்த இடத்துக்குப் போகும்படியாகச் சிறுமியை நகர்த்தினாள். ரவீந்திரனுக்கு ஆத்திரம் வந்தது. கிழவியைக் கூர்மையாகப் பார்த்தான். தாடகை சூர்ப்பணகை என்றெல்லாம் சொல்லுவது கற்பனையில்லை, இன்றைக்கும் உயிர் வாழ்ந்து நம் கண் முன்னே உலவுகிற மனிதப் பிறவிகள்தான் என்னும்படி யிருந்தது அவளுடைய தோற்றம்! சிறுமிக்கும் அவளுக்கும் தான் எத்தனை வித்தியாசம்! மெய்யாகவே பாறைக்கு நடுவிலேதான் இந்த அரிய மலர் பூத்திருக்கிறதோ!

"இந்தா கிழவி, இப்படி வா இங்கே. ஒரு நாளைக்கு இந்தத் தொழிலிலே எவ்வளவு பணம் கிடைக்கும் உனக்கு?" என்று கேட்டான் ரவீந்திரன்.

"அது ஒரு கணக்கா சாமி! சில நாளைக்கு ஒண்ணுமே கிடைக்காமலும் போயிடும்!"

"அதிகமாக் கிடைச்சா, எவ்வளவு கிடைக்கும்?"

"ஒரு ரூபா கிடைச்சாப் பெரிசு சாமி!"

"இப்போ தான் ஒரு ரூபாய்க்கு மேலேயே கிடைச்சாச்சே! இப்படி உக்காரு கீழே. குழந்தை பாடட்டும்!"

கிழவியினால் இதற்குப் பதில் பேச முடியவில்லை. ரயில் வண்டியின் நடைபாதையில் உட்கார்ந்து தன்னுடைய டிக்கெட் இல்லாப் பிரயாணத்தைத் தொடர்ந்து நடத்தினாள் அவள்! சிறுமியோ? அவள் பாடினாள். பாடிக் கொண்டேயிருந்தாள். எவ்வளவு நேரம் இப்படி நடந்தது என்று தெரியாது.

"தென்காசி", "தென்காசி" என்று சத்தம் கேட்டது. ரவீந்திரன் பதறிக் கொண்டு எழுந்தான். "ஏ கிழவி! இறங்கு கீழே!" என்றான் அதிகார தோரணையில்! கிழவி தயங்கினாள்.

"இறங்கு கீழே. டிக்கெட் இல்லாமல் எவ்வளவு தூரம் போகிறது? ஹும்!" என்று ஒரு அதட்டு அதட்டினான்.

கிழவி கீழே இறங்கினாள். சிறுமியும் இறங்கினாள். "நடவுங்கள் என் பின்னோடே!" என்று ஒரு மிரட்டு மிரட்டி விட்டு, ஸ்டேஷனில் தனக்காக யார் வந்திருக்கிறார்கள் என்பதைக்கூட லக்ஷியம் செய்யாமல், நேரே ஸ்டேஷன் மாஸ்டரை நோக்கி விரைந்தான் ரவீந்திரன்.

சென்னை டிப்டி அகௌண்டண்ட் ஜெனரல் ஸ்ரீ ஏ. பத்மநாப அய்யர், B.A., I.A. & A.S. அவர்களின் புதல்வி சௌ. மோகாம்பாளுக்கும் (சாந்தா) சென்னை போஸ்டல் ஆடிட் ஆபீஸ் ஆடிட்டர் (ரிடயர்டு) ஸ்ரீ நாராயண அய்யர் அவர்களின் குமாரரும் பம்பாய் இன்கம்டாக்ஸ் ஆபீஸருமான ஸ்ரீ என். சுப்பிரமணியம், M.A., I.R.S. அவர்களுக்கும் சென்ற 30-3-55 தேதி திருப்பதியில் திருமணம் வெகு சிறப்பாக நடந்தேறியது. திருமணத்தை யொட்டி 3-4-55 அன்று தாம்பரத்தில் மணமகள் இல்லத்தில் ஒரு வரவேற்பு வைபவமும் நடந்தது.
வாழ்க மணமக்கள்!



"ஸார்!" என்று அவன் ஸ்டேஷன் மாஸ்டரைக் கூப்பிட்ட போது கிழவிக்கு உடம்பு பதறியது.

"ஸார்! பாப்புக் கோயில் சந்தையிலிருந்து தென்காசி வரை இரண்டு பேர் டிக்கெட் இல்லாமல் பிரயாணம் செய்த குற்றம் என்னைச் சேர்ந்தது. தயவு செய்து அதற்கு உரிய அபராதத் தொகையைப் பெற்றுக் கொண்டு, இந்த இரண்டு பேரையும் என்னுடைய ஸ்டேஷனுக்கு வெளியே போக அனுமதியுங்கள்!"

ஸ்டேஷன் மாஸ்டருக்குத் தூக்கி வாரிப் போடாமல் என்ன செய்யும்? இந்த விசித்திரமான மனிதனை ஏற இறங்கப் பார்த்தார் அவர்!

"என்ன சார் பார்க்கிறீர்கள்? என் கடமையை நான் செய்கிறேன். உங்கள் கடமையை நீங்கள் தயவு செய்து தாமதியாமல் செய்யுங்கள், சார்!"

ரவீந்திரனுடைய பதற்றமும் அவசரமும் ஸ்டேஷன் மாஸ்டரைப் பிடித்து ஆட்டின. எனவே, ஐந்தே நிமிஷத்தில் ரயில்வே நிர்வாகம் தன்னுடைய கடமையைச் செய்து முடித்து அந்த மூவரையும் வெளியே அனுப்பியது.

ஆனால் கிழவி ஏன் காலைக் கெஞ்சுகிறான்?

"ஏ கிழவி! உண்மையைச் சொல்லு. இந்தக் குழந்தை யாரு? எங்கே இருந்து திருடி வளர்த்து இந்த மாதிரித் தொழிலுக்குத் தயார் பண்ணினே? மரியாதையா உண்மையைச் சொல்லிப் போடு!" என்று கேட்டான் ரவீந்திரன்.



"என் பேத்தி சாமி இது!" என்று ஒரே போடாகப் போட்ட கிழவி, அந்தச் சிறுமியைப் பார்த்து ஒரு முழி முழித்தாள்.

"ஆமாம் ஐயா!" என்று ஈனஸ்வரத்தில் சொன்னாள் சிறுமி.

ரவீந்திரனுக்குச் சந்தேகம் உறுதி ஆயிற்று.

"இந்தா கிழவி! எனக்குப் பொய் பேசினாப் பிடிக்காது. பிசாசக் கோபம் வரும், தெரிஞ்சுதா? ரயில்வே ஸ்டேஷனிலே இருந்து அனாவசியமாப் போலீஸ் ஸ்டேஷனுக்கு என்னை அலைக்காதே! நிஜத்தைச் சொல்லிப் போடு!"—ரவீந்திரன் அவளை விடுவதாக இல்லை.

இதன் பிறகு பத்து நிமிஷம் வாக்குவாதம் நடந்தது. இதில் மிகவும் ரஸமான விஷயம் என்னவென்றால், இந்த வாக்குவாதத்தில் எவ்விதக் கவலையும் இல்லாமல் இதன் முடிவு என்ன ஆகிறது என்றே அந்தச் சிறுமி கவனித்துக் கொண்டிருந்ததுதான்!

"நூறு ரூபா வாங்கிக்கோ. மறு பேச்சு இல்லாம, இந்தக் குழந்தையை இங்கே விட்டுட்டு ஓடிடு!" என்றான் ரவீந்திரன். சிறுமியின் முகத்தில் ஒரு பிரகாசம் தெரிந்தது, விடுதலை தனக்குக் கிடைக்கப் போவது போல!

"எனக்கு நேரம் ஆச்சு. சொல்லு சீக்கிரம்!"

"என்ன சாமி, இப்படி அவசரப்பட்டா எப்படி?" என்று வார்த்தைகளை இழுத்தாள் கிழவி. நூறு ரூபாய் என்ற வார்த்தை அவளுடைய மனத்தில் கொஞ்சம் வேலை செய்திருக்கிறது என்பது அவளுடைய குரலிலே தெரிந்தது.

"இந்தா பார்! இப்பவே இலஞ்சிக்குப் போயாகணும் நான். நீ வருகிறதாயிருந்தா புறப்படு. ஒரு வகையா உன் கடனையும்......"

"இலஞ்சிக்கா...?" என்று கேட்கும் போதே கிழவியின் கையும் காலும் 'வெட வெட' என்று ஆட்டம் கொடுத்தன. அந்த ஆட்டத்தின் காரணம் நீண்ட நாளைக்குப் பிறகுதான், பல ஆண்டுகளுக்குப் பிறகுதான், ரவீந்திரனுக்குப் புரிந்தது!

"ஆமா, இலஞ்சிக்குத்தான்!" என்று வெகு அழுத்தமாகச் சொன்னான் ரவீந்திரன்.

இதற்குள் ரவீந்திரனைத் தேடிக் கொண்டு பூமாலையோடு ஸ்டேஷனுக்குள்ளே சென்றவர்கள், அவனைக் காணாமல் ஏமாற்றத்தோடு திரும்பிக் கொண்டிருந்தார்கள். இதைக் கண்டதும் கிழவி நூறு ரூபாய்க்குக் கையை நீட்டினாள்.

"நூறு ரூபாதானே? அது இப்போ ஏது? கச்சேரி முடிஞ்சதும்தான்! கிழவி, பார்க்கப் போனா நானும் ஒரு அனாதைதான் அம்மா உன்னைப் போல! ஆனா யாசகம் என்கிற அருங்கலை நமக்குப் பயிற்சி இல்லாமல் போச்சு! மற்றப்படி அன்றன்றைப் பாடு, அன்றன்றைக்குத்தான்—உன்னைப் போல! நாளை இந்த நேரத்துக்கு இலஞ்சிக் கோயிலுக்கு வா. நூறு ரூபாயோடு காத்திருக்கிறேன்!"

இலஞ்சி நண்பர்கள் இவர்தான் ரவீந்திரனாக இருக்க வேண்டும் என்று யூகித்து அங்கே வருவதற்குள், கிழவி சிறுமியை அந்த இடத்தில் அப்படியே விட்டு விட்டு ஏனோ கூட்டத்துக்குள்ளே நகர்ந்து விட்டாள்! பிறகு அவளைக் காணவே இல்லை!

ஆமாம்; மறு நாள் கிழவி இலஞ்சிக்கு வரவில்லை. முருகனுடைய சந்நிதானத்தில் நூறு ரூபாயோடு அவளுக்காகக் காத்திருந்தான் ரவீந்திரன். பயன் இல்லை.

அதற்கு மறு நாளும் அவள் வரவில்லை. உண்மையில் அந்தக் கிழவியைப் பற்றி அதன் பிறகு தகவலே இல்லை! அவளைப் பற்றி அந்தச் சிறுமி சொன்ன விவரங்களைக் கேட்ட பிறகு, கிழவி அந்த மாதிரி ஒழிந்ததே நல்லது என்று பட்டது ரவீந்திரனுக்கு. அதையெல்லாம் எண்ணும் போது இப்பொழுது ரவீந்திரனுக்கு......

* * *

சபையோருடைய பலமான கைதட்டலில் ரவீந்திரனுடைய சிந்தனை சிதறியது. தலைவர் தமது பேச்சைக் கீழ்க்கண்டவாறு முடித்துக் கொண்டிருந்தார்:–

''நடனம் இன்னும் தொடர்ந்து நடக்கப் போகிறது. அதற்கு முன் இந்த வெள்ளிப் பாத சரத்தை ரவீந்திரன் சார்பில் சந்திரிகாவுக்கு மகிழ்ச்சியோடு வழங்குகிறேன். உண்மையில் அரங்கேற்றத்தின் போது சிஷ்யர்கள்தான் குருவுக்குக் காணிக்கை செலுத்துவார்கள். இந்த அரங்கேற்றம் அந்த வகையிலும் ஒரு புதுமையாகவே இருக்கிறது. இங்கே குருவே தமது சிஷ்யைக்குப் பரிசு வழங்குகிறார். அவருடைய நிகரற்ற அன்பின் ஒரு அடையாளமே இந்தப் பாத சரம். ரவீந்திரனுடைய அன்பே இந்தப் பாதசர உருவத்தில் சிஷ்யையின் நடனத்துக்குக் காப்பாக அமைந்து, நடனம் ஆடும் கால்களை என்றென்றும் 'கலீர் கலீர்' என்று ஆசி கூறி அலங்கரிக்குமாக!''

மீண்டும் கைதட்டல். சந்திரிகா வந்து அந்தப் பரிசை வாங்கிக் கண்ணிலே ஒற்றிக் கொண்டாள். ரசிக மக்கள் மகிழ்ச்சியோடு ஆரவாரம் செய்தார்கள்.

இதென்ன? அந்தக் கைதட்டல் அடங்கியதும் மாதர் கூட்டத்தில் ஒரு பரபரப்பு? அந்த அம்மாள் யார்? ஏன் இப்படி அவள் எழுந்து நிற்கிறாள்?

அந்தப் பெரிய சபையையே காறி உமிழ்வது போல ஒரு பார்வை. அடுத்த விநாடி அந்த அம்மாள் 'தடதட' என்று நடந்து அந்தக் கூட்டத்தை ஆங்காரத்தோடு விலக்கிக் கொண்டே வெளியே சென்றாள்.

இதைப் பார்த்ததும் ரவீந்திரனுடைய கண்ணிலே சுருக்கென்று முள் குத்துவது போல் இருந்தது. ஆயிரம் மின்னல்கள் அவனுடைய முகத்தில் துவண்டன. எல்லாம் ஒரு கணந்தான். அடுத்த கணம் தம்புரா 'ரீம் ஙிஎம்' என்று ஒலித்தது. வீணை வித்வான் நரம்புகளைச் சுண்டினார். மிருதங்கம் குங்காரம் கொடுத்தது. அவ்வளவுதான்; கண்ணிலே குத்திய முள்ளை எடுத்து எறிந்தவனைப் போலத் தன்னை மறந்து புல்லாங்குழலை எடுத்து உதட்டிலே பொருத்தி விரல்களை அதன்மேல் ஓட விட்டான் ரவீந்திரன்.

மத்தளம் ஒலித்தது. குரல் எழுந்தது. பாதச் சிலம்புகள் 'கலீர் கலீர்' என்றன. நடன நிகழ்ச்சி மீண்டும் தொடங்கியது.

எழுந்து சென்ற அம்மாள் இது ஒன்றையும் லக்ஷியம் செய்யவில்லை. விறு விறு என்று ஒரே ஆவேசத்தோடு நடந்து நாற்றுக்கால் மண்டபத்தை விட்டு வெளியே வந்தாள். (தொடரும்)

## உழைப்பால் உயர்ந்தவர்

பிரபல தேயிலை வியாபாரிகளான ''ப்ரூக் பாண்டு இந்தியா லிமிடெட்'' கம்பெனியின் தலைவராக திரு ஜி. வி. கே. மூர்த்தி நியமிக்கப்பட்டிருக்கிறார் என்பதை அறிந்து பெரு மகிழ்ச்சியடைகிறோம். பிரிட்டிஷ் முதலாளிகளால் நடத்தப்பட்டு வரும் இக் கம்பெனிக்குத் தலைவராக ஒரு இந்தியரை நியமிப்பது இதுதான் முதல் தடவை. இருபத்தாறு கிளைக் காரியாலயங்களும், ஐந்து தொழிற் கூடங்களும் கொண்ட இக் கம்பெனியின் தலைமைப் பொறுப்பை ஜி. வி. கே. மூர்த்தி இன்று பெற்றிருக்கிறார். 1939ம் ஆண்டில் கோயமுத்தூரில் மேற்படி கம்பெனியில் 'சேல்ஸ்மன்' ஆகப் பிரவேசித்த திரு ஜி. வி. கே. மூர்த்தி படிப்படியாகக் கிளைக் காரியாலய மானேஜராகவும், குரூப் மானேஜராகவும் பணியாற்றி அக் கம்பெனியிலேயே மிக உயர்ந்த பதவியாகிய சேர்மன் பதவியை அடைந்திருக்கிறார். உழைப்பாலும் திறமையாலும் உயர்ந்தவர்களில் திரு ஜி. வி. கே. மூர்த்தி முக்கியமான ஒருவர். அவர் பணி பெருகுவதாக!





# கம்பன் திருநாள்

எஸ்.வி.எஸ்

அன்று ரயிலில் ஏறி உட்கார்ந்ததும் இந்த எண்ணம்தான் மேலோங்கி நின்றது:

அதிர்ஷ்டம் என்பது அவரவர் வாழ்நாளில் ஏற்படுவது. தமிழ் நாட்டுக் கவிச் சக்கரவர்த்திக்கு அதிர்ஷ்டம் அவர் வாழ்நாளில் இருந்ததோ என்னவோ தெரியவில்லை. ஆனால் அவருக்கு ஆயிரம் வருஷத்துக்குப் பிறகு, இப்பொழுது, பிரமாதமாக அதிர்ஷ்டம் அடித்து வருகிறது! ஆண்டு தோறும் அவர் திருநாள் காரைக்குடியில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகிறதல்லவா!

காரைக்குடி கம்பன் கழகத்தின் செயலாளர் திரு சா. கணேசன் மிக்க அருமையான நண்பர்களைப் பெற்றிருக்கிறார். அவர்களுடைய துணை வலிமையாலும், தம்முடைய செயல் திறமையாலும் அவர் வெகு சிறப்பாக ஆண்டு தோறும் கம்பன் திருநாள் நடத்தி வருகிறார்.

இதற்கு முன்பெல்லாம் நான் காரைக்குடியில் நடக்கும் மூன்று நாள் வைபவத்துக்கு மட்டும் இருந்து விட்டு, அப்படியே காரைக்குடி ரயில்வே ஸ்டேஷனில் ரயில் ஏறி விடுவது வழக்கம். இம்முறை கம்பர் சமாதிக்குச் சென்று அஞ்சலி செய்ய விரும்பினேன்.

காரைக்குடியில் நடக்கும் மூன்றும் நாள் விழாவுக்கும், நாட்டரசன் கோட்டையில் நடக்கும் நான்காம் நாள் விழாவுக்கும் தங்கும் வகையில் புறப்பட்டேன். எனவே, முதல் இரண்டு நாள் நடந்த பேச்சுக்களைக் கேட்கும் பேறு பெற்றிலேன்.

கம்பன் கவிச் சக்கரவர்த்தி என்ற புகழை நிலை நாட்டியது தனது ராமாயணத்தை அரங்கேற்றிய பங்குனி அத்த நாளில். அந்தப் புனித நாளிலே தான் நாட்டரசன் கோட்டையில் கம்பன் விழா—இல்லை, இல்லை — கம்பன் திருநாள் கோலாகலமாக நடக்கிறது.

ஆம், "கம்பன் விழா" என்று சொல்லி விட்டால் கோபம் வந்து விடும். கவிச் சக்கரவர்த்தி என்று தன் புகழை நிலைநாட்டிய புனித நாளைக் கொண்டாடும் போது 'விழா' என்று சொல்லுவது சரியல்ல தானே! மகத்தானதொரு காரியத்தைச் சாதித்த நாள் அல்லவா பங்குனி அஸ்த நாள்!



திரு சா. கணேசன்

இவ்வாண்டு வைபவத்தை நமது நிதி மந்திரி திரு சுப்பிரமணியம் துவக்கிவைத்தார். பழைய இலக்கியங்களைப் போற்ற வேண்டும் என்று வற்புறுத்திப் பின்வருமாறு கூறினார்: "நறுமணம் வீசும் மலர்களையும் இனிய கனிகளையும் வேண்டுவோர் அவைகள் உற்பத்தி செய்யும் மரமும் அம்மரத்தின் வேரும் கிளையும் கெடாமல் பாதுகாக்க வேண்டும்" என்று குறிப்பிட்டார். பிறகு கல்வி மந்திரி என்ற பதவிக்கு ஏற்ப. சர்வ கலாசாலைகளில் போதனாமொழி தமிழிலேயே இருக்கவேண்டுமென்றும், நவீன கருத்துக்களை எடுத்துக் கூறத் தமிழில் பிற மொழி வார்த்தைகளைச் சேர்ப்பதைப் பற்றித் தமக்கு ஆட்சேபணை இல்லை என்றும் கூறினார்.

இலங்கைச் சர்வகலாசாலையில் தமிழ்ப் பேராசிரியராக இருக்கும் திருப்பெருந் திரு தனி நாயக அடிகள் முதல் நாள் நிகழ்ச்சிகளுக்குத் தலைமை தாங்கினார். கடல் கடந்து ஐரோப்பிய நாடுகளுக்குப் போய் வந்து, பல மொழிகளை அறிந்த விற்பன்னர் அவர். அதனாலேயே அவர் பகர்ந்த ஒவ்வொரு வார்த்தையும் தனியானதோர் வேகத்துடன் விளங்குகிறது.

அவர் கூறியதில் ஒரு பகுதியைப் படித்துப் பாருங்கள்:

"தூரக் கிழக்கில் தாய்லாந்து, கம்போடியா, மலாயா, இந்தோனேஷ்யா முதலிய நாடுகளில் தமிழர் கலாசாரம் வெகுவாகப் பரவி யிருந்திருக்கிறது என்பதற்கு அத்தாட்சி இருக்கிறது. தூரக் கிழக்கில் ஆராய்ச்சியாளர்கள் பல விஷயங்களைப் பற்றி ஆராய்ச்சி நடத்தி வந்திருக்கின்றனர்.

"தூரக் கிழக்கில் கம்பருடைய சாம்ராஜ்யம் பல நாடுகளில் வியாபித் திருக்கிறது. தென் ஆசியாவிலும் தென் கிழக்கு ஆசியாவிலும் ராமாயணக் கதைகள் வியாபித்திருக்

கின்றன. அந்தக் கதைகள் கம்ப ராமாயணத்தைப் பின்பற்றியதாகவே இருக்கின்றன!''

எந்தப் புவிச் சக்கரவர்த்திக்கும், இந்தக் கவிச் சக்கரவர்த்தி பெற்றிருப்பது போன்ற விஸ்தாரமான சாம்ராஜ்யம் இருந்ததில்லை!

அன்று அதாவது ஏப்ரல் 4ம் தேதி திரு எஸ். சடகோபாச்சாரியார், திரு தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், திரு ஜி. சுப்பிரமணியம், திரு. அ. சீனிவாசராகவன், திரு எஸ். ராமகிருஷ்ணன் ஆகிய அறிஞர்கள் வான்மீகி, ஹோமர், தாந்தே, ஷேக்ஸ்பியர், மில்டன் ஆகிய உலக கவிஞர்களுடன் கம்பனை ஒப்பிட்டுப் பேசினார்கள். நல்ல வைரத்தின் சிறப்பு மற்றவற்றுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் தானே தெரிய வரும்! அன்றிரவு கலை மன்ற மாணாக்கியரின் நடன நிகழ்ச்சி நடைபெற்றது.

மறு நாள் காலை நிகழ்ந்த கவியரங்கில் ''கம்பன் கண்ட வண்ணம்'' என்ற பொதுத் தலைப்பில் திருவாளர்கள் 'துறைவன்', முடியரசன், அ. வெ. ர. கிருஷ்ணசாமி, எஸ். கே. இராமராசன், ராம. பெரிய கருப்பன், திருலோக சீதாராம், பூ. அமிர்தலிங்கன் ஆகிய கவிஞர்கள் பங்கு பற்றிச் சிறப்பித்தார்கள். மாலை கம்பனை வள்ளுவனுடனும், இளங்கோவுடனும், திருத்தக்க தேவருடனும், சேக்கிழாருடனும் ஒப்பிட்டு, திருவாளர்கள் தி. நடேச முதலியார், ம. பொ. சிவஞானம், கி. வா. ஜகந்நாதன், அ. ச. ஞானசம்பந்தன் முதலிய தமிழ் அறிஞர்கள் பேசினார்கள். அன்றிரவு ஸ்ரீரங்கம் ஸ்ரீ சடகோபாச்சாரியார் அவர்களின் ரஸமான காலக்ஷேபம் நடந்தது.

மூன்றாம் திருநாளுக்கு நாங்கள் போய்ச் சேர்ந்தபோது...அடேடே இது என்ன திடீர் என்று பன்மையில் 'நாங்கள்' என்று ஆரம்பித்து விட்டீர் என்கிறீர்களா? ஆம், உங்களுக்குச் சொல்லவில்லை யல்லவா! 'கல்கி' ஆசிரியர் ''சோமு'' அவர்களுக்கு மூன்றாம் திருநாளில் சொற்பொழிவு இருந்தது. அவரோடு நானும் காரைக்குடிக்குப் போய்ச் சேர்ந்தேன்.

விழாப் பந்தலை அணுகியபோது, மதுரை மன்னன் கூட்டிய புலவர் சங்கத்துக்கு வந்து விட்டாற் போன்ற பிரமை ஏற்பட்டது! மேடையில் அரைவட்ட வடிவத்தில் உட்கார ஒரு மணையும், சாய ஒரு மணையும், எதிரில் புஸ்தகம், குறிப்பு முதலியவை வைத்துக்கொள்ளச் சிறிது உயரமுள்ள சிறு மேடையும் ஒவ்வொருவருக்கும் கொடுக்கப்பட்டிருந்தது. அவற்றில் தான் உட்கார்ந்திருந்தனர் பட்டிமண்டப அறிஞர்கள். நடுவில் பட்டிமண்டபத் தலைவர் மயிற்பீலியினால் விசேஷமாக அலங்கரிக்கப் பட்ட ஆசனத்தில் அமர்ந்திருந்தார். அவர்களுக்குப் பின்னால் சகல கலாவல்லியான சரஸ்வதி தேவி வெள்ளைக் கலையுடுத்தி வெள்ளைப் பணிபூண்டு கம்பீரமாக அமர்ந்திருந்தாள்.

அன்று பட்டிமண்டப விவாதத்துக்கு எடுத்துக்கொண்ட பொருள் ''சிறந்த தம்பி பரதனா, இலக்குவனா?'' என்பதாகும்.

கம்பரை அநுபவிக்க நாட்டரசன் கோட்டையில் கூடிய மகாஜனங்கள்



'சிறந்த தம்பி பரதனே' என்று கூறியவர்களும், 'இல்லை, இலக்குவனே' என்று மொழிந்தவர்களும், வெகு வன்மையாகவே தங்கள் தங்கள் கட்சியை ஆதரித்துப் பேசினார்கள். கடைசியில் இவ் விவாதத்துக்குத் தலைமை வகித்த திரு மகராஜன் அவர்கள் பாத்திரங்களுள் சிறந்தவன் யார் என்றால் பரதன்தான் என்று பரதன் புகழைப் பாடிவிட்டு, ஆனால் சிறந்த தம்பியார் என்றால் லக்ஷ்மணன்தான் என்று முடித்தது வெகு ரஸமாக இருந்தது.

அன்று பிற்பகல் நிகழ்ச்சி நிரல் மிகவும் சுவைபட விளங்கிற்று. அதாவது கம்பன் கவியமுதைப் பரப்பும் பணியை மேற்கொண்டு தொண்டு புரிந்த வ. வெ. சு., வெள்ளகால் முதலியார், டி. கே. சி., 'கல்கி' ரா. கிருஷ்ணமூர்த்தி, முத்துசிவன் முதலியவர்களைப் பற்றி அமைந்திருந்தது. இதற்கு, சுவாமி சித்பவானந்தர் தலைமை தாங்கிச் சிறப்பித்தார். அவரது முன்னுரையில் ஆத்மீகத் துறையில் கம்பர் எவ்வளவு ஈடுபட்டுப்பாடியிருக்கிறார் என்பதை வெகு விளக்கமாகக் கூறினார்.

பிறகு 'கல்கி' ஆசிரியர் "சோமு" ரஸிகமணி டி. கே. சி. யைப் பற்றி உணர்ச்சி மிக்க அரிய சொற்பொழிவு நிகழ்த்தினார். அவர் உடனே சென்னைக்குத் திரும்பிவிட நேர்ந்ததால், அவர் சொற்பொழிவைக் கேட்டு மகிழ்ந்தவர்கள் எல்லாம் என்னிடம் வந்து தங்கள் பாராட்டுதலைத் தெரிவித்தார்கள். அவற்றைக்கேட்ட போது நானே நல்ல பிரசங்கம் புரிந்து விட்டதாக நினைத்து மகிழ்ந்து போனேன்.

திரு கு. அருணாசலக் கவுண்டர், வெள்ளகால் ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள் "கம்பராமாயண சாரம்" என்ற நூலை வெளியிட்டு அருமையான தொண்டு புரிந்திருக்கிறார் என்றும், அந்த நூலின் பதிப்புரிமை முழுதும் திருநெல்வேலி ஹிந்து கல்லூரிக்கு வழங்கிவிட்டார் என்றும், அந்த நூலின் விற்பனை மூலம் ரூ. 30,000 கிடைத்திருக்கிறதென்றும் கூறினார். கம்பன் கவிதையை ரஸிக்கும் தமிழர்களின் தொகை இதிலிருந்தே எப்படிப் பெருகியிருக்கிறது என்று தெரிந்து கொள்ளலாம்.

திரு ஏ. ஸி. பால் நாடார் அவர்கள், வ. வெ. சு. ஐயர் அரசியல் துறையில் திலகர் கட்சியைச் சேர்ந்த புரட்சி வீரராக இருந்த காலத்தில் எப்படிக் கம்பருடைய யுத்த காண்டத்தில் பெரிதும் ஈடுபட்டிருந்தார் என்பதையும், பின்பு காந்தி மகானின் அஹிம்சா நெறியில் ஈடுபடத் தொடங்கிய பின் அயோத்தியா காண்டப் பகுதிகளில் ஆர்வம் காண்பிக்கலானார் என்பதையும் எடுத்துக் கூறினார்.

தமிழகம் சென்ற ஆண்டு அடைந்த பெரு நஷ்டங்களில் ஒன்று முத்துசிவன் மறைவு. அவரது கம்பன் ஈடுபாட்டைப் பற்றி, திரு எஸ். மகராஜன் பேசினார்.

ஒரு முறை ரஸிகமணி ஒரு பிரபலமான பாடலைக் கம்பன் பாடியதல்ல, செருகு கவி என்று நிரூபித்து ஒரு கட்டுரை எழுதியிருந்

காரைக்குடியிலே கம்பன் கவியமுதை ரஸித்த தாய்மார்கள்





கம்பர் சமாதியில் நடந்த வைபவத்தில் கலந்து கொண்ட தமிழ் அறிஞர்கள்

தார். அதை மகராஜன் அவர்கள் படித்துக் காண்பித்தவுடன், மூத்துசிவன் அந்த உண்மையைக் கண்டு தம் மனத்தை விட்டு அப் பாட்டை அகற்றி விட்டார். அதை அருமையாகக் குறிப்பிட்டார் திரு மகராஜன்.

கல்கி ஸ்ரீ ரா. கி. அவர்கள் சென்ற முப்பது ஆண்டுகளாகக் கம்பன் கவிதைச் சிறப்பைத் தமிழ் மக்கள் அறியப் புரிந்த பல அரிய தொண்டுகளைப் பற்றி திரு பாஸ்கரத் தொண்டைமான் பேசினார். ரசிகமணி டி. கே. சி. அவர்களை வாரம் தவறாது "கம்பர் தரும் காட்சி"யை எழுதச் செய்த பெருமை கல்கி அவர்களையே சாரும் என்று கூறினார்.

சுவாமி சித்பவானந்தா தமது முடிவுரையில், "டி. கே. சி. கவிதையை ரசித்துக் கூறுவதையே ஒரு யோகசாதனமாகப் பயின்று வந்தார்கள். கவிதையின் மூலம் இறைவன் திருவடி அணுக இயலும் என்பதைக் காண்பித்தவர் டி.கே.சி." என்று கூறினார்கள்.

நான்காம் நாள் விழா நாட்டரசன்கோட்டையிலே நடந்தது. காரைக்குடியிலிருந்து இருபத்தைந்து மைல் தூரத்தில் கம்பன் சமாதி அடைந்த இடத்திலே ஒரு சிவன் கோவிலிருக்கிறது. அந்தச் சிவலிங்கத்தின் பக்கத்தில் கம்பர் திருவுருவச் சிலையிருக்கிறது. அதை இக் கட்டுரைத் தலைப்புப் படத்தில் காணலாம்.

காரைக்குடியிலிருந்து ஒரு மோட்டார் வானில், நாட்டரசன் கோட்டையில் பேச வேண்டியவர்கள், கம்பர் விழாவுக்கு வந்தவர்கள் அத்தனை பேரும் சென்றோம். திருவாளர்கள் ம. பொ. சி., பாஸ்கரத் தொண்டைமான், சி. எம். ராமசந்திரன் செட்டியார், ஏ. வி. பால் நாடார், புருஷோத்தம நாயுடு முதலியவர்கள் இருந்தார்கள். எனக்கெதிரே ம. பொ. சி. இருந்தமையால், "ஐயா, தாங்கள் கம்பனையும் இளங்கோவையும் பற்றி என்ன பேசினீர்கள்!" என்று கேட்டு வைத்தேன்.

"ராமனைக் கடவுளாகச் செய்தவன் கம்பன் என்று சொல்லுவது பெரும் தவறு. இளங்கோ அடிகள் காலத்திலேயே மக்கள் மனத்தில் ராமன் ஒரு தெய்வம் என்ற உணர்ச்சி உறுதிப் பட்டுவிட்டது என்பதை ஆய்ச்சியர் குரவையில் காண்கிறோம்" என்று கூறிக்கொண்டு வந்தார்.

நாட்டரசன்கோட்டையில் திரு சா. கணேசன் கம்பன் சமாதியில் மலர்களைக் கொண்டு அருச்சனை செய்தார். திரு ஷண்முகசுந்தரம் கம்பன் போற்றி அகவல் இனிய பண்ணில் ராகமாலிகையாகப் பாடினார். அதில் சில வரிகளைப் பாருங்கள் :

காவிய வானக் கதிரவ போற்றி
ஓவியக் கவிதைக் கொருவனே போற்றி
விருத்தக் கவிக்கொரு வேந்தே போற்றி
கருத்துப் புரட்சிக் கவிஞனே போற்றி

இப்படி மலர் வணக்கம் ஆனபின் கோவை கிழார் திரு சி. எம். ராமசந்திரன் செட்டியார் அவர்கள் தலைமையில் "கம்பனும் பாரதியும்" என்ற பொருள் பற்றி திரு ப. ஜீவானந்தம் அவர்களும், "கம்பனும் வள்ளலாரும்" என்னும் பொருள் பற்றி திரு கா. கிரிதாரி பிரசாத் அவர்களும், "கம்பனும் நால்வரும்" என்னும் பொருள் பற்றி திரு ராய. சொ. அவர்களும், "கம்பனும் ஆழ்வார்களும்" என்னும் பொருள் பற்றி வித்துவான் திரு பு. ரா. புருஷோத்தம நாயுடு அவர்களும் பேசினார்கள்.

அன்றிரவே ரயில் ஏறிச் சென்னைக்குத் திரும்பினேன். அப்பொழுது என் மனத்தில் கம்பன் அதிர்ஷ்டசாலி என்று நினைத்தது எவ்வளவு பெரிய தவறு என்று தோன்றியது. திரு சா. கணேசன் போன்றவர்கள் ஏதாகிலும் அருந் தொண்டு செய்து கொண்டிருக்க வேண்டும் என்ற மன இயல்பைப் படைத்தவர்கள். அவருடைய தொண்டுக்கு வேறு யாராவது புலவர் வந்து வாய்க்காமல், உலக மகாகவி, கவிகளுக்குள் சக்கரவர்த்தி, ஆயிரம் ஆண்டுகளுக்கு ஒரு முறை தோன்றும் மகாகவி கம்பர் வாய்த்ததில், திரு சா. கணேசன் அல்லவோ அதிர்ஷ்டசாலி என்ற எண்ணம் தான் மேலோங்கி நின்றது. கணேசன் அவர்கள் நான்கு நாட்கள் ஆகாரம் என்று பெயருக்கு ஏதோ சொற்பமாக உண்டு, விரதம் அனுஷ்டித்து, பயபக்தியுடன் திருநாளை நடத்துகிறார். அந்த பக்தியைப் பார்ப்பதே ஒரு ஆனந்தம். அத்தகைய தொண்டு வாழ்க !

கம்பன் புகழ் வாழ்க !
கன்னித் தமிழ் வாழ்க !

# விரைவில் வருகிறது!

# கணவனே

கண் கண்ட

# தெய்வம்



அஞ்சலி தேவி • லலிதா
கணேஷ் • நாகய்யா
நம்பியார் • பிரண்ட் ராமசாமி
முத்துலக்ஷ்மி • ராஜம் நடித்தது

டைரக்ஷன் • **T.R. ரகுநாத்**

**கண்ணுக்கினிய கேவாகலரில்**
**கன்னியரின் ஆனந்த நடனம்•**
**காணக்களிப்பூட்டும்....**

**நாராயணன் கம்பெனி** தயாரிப்பு

BAKTHA




நா. ராமகிருஷ்ணன்

ஏப்ரல் 9ம் தேதி, வோலேடி வெங்கடேச்வரலு சென்னை நிலையத்தில் பாடினர். பாட்டு கற்பனை நிரம்பி இருந்தது. சாரீரம் உதவியாக இருந்திருந்தால், மிகப் பரிமளிப்பாக இருந்திருக்கும். 'தர்பார், வாகதீச்வரி, தேவகாந்தாரி ராகங்களை விரிவாக ஆலாபனை செய்தார். முக்கிய சாயைகளைத் திரும்பத் திரும்பப் பாடிக் கொண்டிராமல் கற்பனையுடனும், ஆனால் பாவம் சிறிதும் குறையாமலும் ஆலாபனை செய்தார். தேவகாந்தாரி ஆலாபனையில் தைவத நியாச பிரயோகங்களும் சம்பூரண ஆரோஹண மூர்ச்சனைகளும் அழகாக இருந்தன. கீர்த்தனைகள். சிட்டா செய்த சங்கதிகள் கொண்டு இராமல், மனோதர்மம் இடம்பெறும் படி பாடப்பட்டன. தேவகாந்தாரி கீர்த்தனையை (க்ஷிதிஜா ரமணம்) குறிப்பாகச் சொல்லலாம்.

மறுநாள் முடிகொண்டான் எல். கிருஷ்ணமூர்த்தி அவர்கள் பாடிய கீர்த்தனைகளில் ஹரிகாம்போதி கீர்த்தனை (எந்தரா நீ தெதனா) அழகாக இருந்தது. பொதுவாகக் கீர்த்தனைகள் பாவம் நிறைந்து இருந்தன. ஹரிகாம்போதி ஆலாபனை கார்வை மயமாகவும், கற்பனை குறைவாகவும் இருந்தது. ஆனால் சுலோகத்தில் பாடிய கேதாரகௌள, தன்யாசி, பிலஹரி ஆலாபனைகள் பாவத்துடன் இருந்தன. பொருள் பாவத்துடன் பாடும் இத்தகைய ராக மாலிகைகளில் மூன்று ராகங்கள் மட்டும் சிறிது விஸ்தாரமாகப் பாடினால் எடுப்பாக இருக்கும்.

பூவனூர் என். கிருஷ்ணமூர்த்தி அவர்களின் சாரீரம் அன்று சௌஜன்யமாக இருக்கவில்லை. காம்போதி ஆலாபனை பெரும்பாலும் நன்றாக இருந்தது. ஆனால் 'பதநிஸ்' போன்ற பிரயோகங்களால் சிலசமயம் ஹரிகாம்போதி சாயை தலைகாட்டிக் கொண்டிருந்தது.

அன்றே பாடிய எஸ். கல்யாணராமன் அவர்கள் டக்க, கிரணாவளி, பிருந்தாவனி ராகங்களை ஆலாபனை செய்தார். கிரணாவளியை விரிவாகப் பாட முயன்றார். ஆனால் இயற்கையாக வெளிவரும் கீரவாணி சாயையை மாற்றுவதற்காக அடிக்கடி 'ஸப' பிரயோகம் செய்ய வேண்டியிருந்தது. பிருந்தாவனி ஆலாபனை நன்றாக இருந்தது. நேரத்தைச் சரிக்கட்டிப் பாடியிருந்தால், கீர்த்தனையை அவசரமில்லாமலும், மனோதர்மத்திற்கு இடம் கொடுத்தும் பாடியிருக்கலாம்.

திங்கட்கிழமை 11ம் தேதி திருச்சி நிலையத்தில் சிங்கநல்லூர் என். ராதாகிருஷ்ணன் பாடினர். கல்யாணி, தோடி ஆலாபனைகள் நன்றாக இருந்தன. கீர்த்தனைகள் விறுவிறுப்பாகப் பாடப்பட்டன. ஆனால் சாகித்ய உச்சரிப்பில் தெளிவு போதவில்லை. முன்னிரவு நிகழ்ச்சியில் பைரவி ஆலாபனை செய்து தானமும் பல்லவியும் பாடினர். ஆலாபனை கற்பனையுடன் இருந்தது. சில துரித மூர்ச்சனைகள் கவர்ச்சியாக இருந்தன. ஆனால் மற்றும் சில மூர்ச்சனைகள் ஸ்வர ஸ்தானங்களிலிருந்து வழுவி, சுகம் குன்றியிருந்தன. சங்கதிகள் பெரும்பாலும் தாரஸ்தாயியிலேயே நிலவாமல் மத்ய ஸ்தாயியிலேயும் விவரிக்கப் பட்டிருந்தால் சாரீரம் களைத்துப் போயிருக்காது.

மறு நாள் ராதாவும் ஜயலக்ஷ்மியும் பாடினார்கள். 'ரஞ்சனி நிரஞ்சனி' எனும் ரஞ்சனி கீர்த்தனை கவர்ச்சியாக இருந்தது. கல்யாணி கீர்த்தனை (பஜரே சித்தாம்) அழகிய சங்கதிகளுடன் இனிமையாக இருந்தது. கல்யாணி ஆலாபனையில் விதரணையான துரித சங்கதிகள் பெரும் பங்கு எடுத்துக் கொண்டன. குழைவு சங்கதிகளுக்குத் தேவையான இடம் கொடுத்துப் பரிமளிக்கப் பாடி இருக்கலாம். 'உருட்டல்' சங்கதிகளில் சுக பாவம் குறையாமல் காத்துக் கொள்ள வேண்டும். ஏதாவது ஒரு கீர்த்தனையில் நிரவல் செய்திருக்கலாம். ராகமாலிகையில் பாடிய காபி ஆலாபனை அழகாக இருந்தது.

புது ஆண்டு பிறந்த அன்று சீர்காழி எஸ். கோவிந்தராஜன் பாடிய கீர்த்தனைகள் ராக, பொருள் பாவத்துடன் இருந்தன. 'ப்ரோவஸ் பதே' (அடாணா) 'எந்தனுத்த' (சங்கராபரணம்) 'வேங்கடேச்வரா' (மேகரஞ்சனி) ஆகிய கீர்த்தனைகளை விசேஷமாகக் குறிப்பிடலாம். சங்கராபரண ஆலாபனை கச்சிதமாக இருந்தது. கீர்த்தனையில் பாடிய நிரவலோ, கற்பனா ஸ்வரமோ விதரணையில்லாமல் சாதாரணமாக இருந்தன.



மாயூரம் கடம் வித்வான் திரு டி. வி. பட்டு பிள்ளையின் குமாரன் செல்வன் டி. பி. சீனிவாசனுக்கும் திருநெல்விக் காவல் மிராசுதார் திரு கே. நடராஜ பிள்ளையின் சகோதரி செல்வி ரங்க நாயகிக்கும் மாயூரம் மணமகள் இல்லத்தில் மார்ச் 15ல் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. உள்ளூர்ப் பிரமுகர்களும், சங்கீத வித்வான்களும் வந்திருந்து திருமணத்தைச் சிறப்பித்தனர். வாழ்க மணமக்கள் !



# ஆற்றங்கரையினிலே

பேராசிரியர் ரா.பி.சேதுப்பிள்ளை

## 15. மதுரைமா நகரம் (தொடர்ச்சி)

மதுரைமா நகரின் அணிகலனாக விளங்குவது இறைவன் திருக்கோயில். 'ஆலவாய்' என்னும் பெயருடைய அவ் ஆலயத்தின் அம்பலத்திலே ஈசன் ஆனந்த நடனம் புரிந்தான்; மணிவாசகரின் திருவாசகத்தைக் கேட்டு மனமகிழ்ந்தான். சங்கப் புலவரின் அறிவினுக்கு அறிவாய் நின்று செந்தமிழ் மொழியைச் சீராக வளர்த்தான். பழந்தமிழைப் பசுந்தமிழாக்கினான். இதனாலேயே,

"கண்ணு தற்பெருங் கடவுளும்
கழகமோடு அமர்ந்து
பண்ணு றத்தெரிந்து
ஆய்ந்தஇப் பசுந்தமிழ் ஏனை
மண்ணி டைச்சில இலக்கண
வரம்பிலா மொழிபோல்
எண்ணி டைப்படக் கிடந்ததா
எண்ணவும் படுமோ."

என்று பாடினார் பரஞ்சோதி முனிவர்.

ஆலவாயில் அமைந்த அருந் தமிழ்ச் சங்கத்தின் தலைவராக வீற்றிருந்தார் நக்கீரர் என்ற நற்றமிழ்ப் புலவர். அவர் அஞ்சாத நெஞ்சினர். செஞ்சடைக் கடவுளே முன்னின்று நெற்றிக் கண்ணைக் காட்டினும் சற்றும் கலங்காத மனத் திண்மை வாய்ந்தவர். முத்தமிழால் வைதாரையும் வாழ்விக்கும் முருகவேள் கோயில் கொண்டு அருள் புரியும் படை வீடுகளின் பெருமையைத் தமிழகத்தார் அறிந்து உய்யுமாறு திருமுருகாற்றுப் படை பாடினார் இப்புலவர் பெருமான்.

பொய்யறியாப் புலவர் என்று புகழ்ப் பெற்ற சங்கப் புலவர்கள் மதுரைமா நகரின் அமைப்பையும் சிறப்பையும் அழகாகப் பாடியுள்ளார்கள். செந்தாமரை மலர் போன்றது அந்நகரம் என்றார் ஒரு கவிஞர். தாமரையின் பொகுட்டுப் போல் அமைந்தது திரு ஆலவாய் என்னும் கோயில்; அதைச் சுற்றி அடுக்கடுக்காக உள்ள நகர வீதிகள் தாமரையின் அழகிய இதழ் போன்றன. அம் மா நகரில் மனையறம் புரிந்த மக்கள் தாமரைப் பூவின் மகரந்தம் போன்றனர். மகரந்தத்தை நாடி வரும் வண்டினம் போல் மதுர கீதம் பாடி வந்து மதுரையாரிடம் பரிசு பெற்றனர் இரவலர் என்று ஒரு பரிபாடல் கூறுகின்றது.

இத்தகைய மதுரையம்பதியில் சில காலம் அமைச்சராயிருந்து பாண்டிய மன்னருக்குப் பணிசெய்தார் மாணிக்கவாசகர். அவர் கலை ஞானமும் சிவ ஞானமும் பெற்ற சீலர். மன்னன் குதிரை வாங்கக் கொடுத்த பொருளைக் கொண்டு கோயில் கட்டினார். அதை அறிந்த அரசன் சீற்றம் கொண்டான். தவறிழைத்த அமைச்சரைச் சிறைக் கோட்டத்தில் அடைத்தான். பலவாறு துன்புறுத்தினான். தனக்குவமையில்லாத் தலைவனைத் தஞ்சம் அடைந்த மாணிக்கவாசகர் மனக்கவலையற்றுச் செஞ்சொற் கவி பாடிச் சிறையிருந்தார்.

" அன்றே என்றன் ஆவியும்
உடலும் உடைமை எல்லாமும்
குன்றே அனையாய் என்னை ஆட்
கொண்ட போதே கொண்டிலையோ
இன்றோர் இடையூறு எனக்குண்டோ
எண்தோள் முக்கண் எம்மானே
நன்றே செய்வாய் பிழை செய்வாய்
நானோ இதற்கு நாயகமே "

என்று பாடி நெக்கு நெக்குருகினார். அவர் பொருட்டு ஈசன் ஒரு திருவிளையாடல் புரிந்தான். காட்டு நரிகளைக் குதிரைகளாக்கிப் பாண்டியனிடம் சேர்த்தான். இவ் அற்புதத்தைக் கண்டு ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார் மாணிக்க வாசகர்.

" ஒருங்குதிரை உலவுசடை
உடையானே நரிகளெல்லாம்
பெருங்குதிரை ஆக்கியவாறு
அன்றேஉன் பேரருளே "

என்று பாடிப் பரவசம் உற்றார்.

தமிழ் நாட்டில் மணிவாசகர் அருளிய திருவாசகம் பொன்னே போல் போற்றப் படுகின்றது. " திருவாசகத்துக்கு உருகாதார் ஒரு வாசகத்துக்கும் உருகார் " என்ற பழமொழியும் உண்டு. இத்தகைய பெருமை சான்ற மாணிக்கவாசகரை அமைச்சராகப் பெற்றிருந்த மதுரையம் பதியின் பெருமை அளவிடற்கு எளிதோ?

திருஞானசம்பந்தர் மதுரைக்கு எழுந்தருளிய பொழுது பாண்டிய நாட்டின் நல்லமைச்சராய் விளங்கினார் குலச்சிறையார் என்னும் பெரியார். பாண்டிய மன்னன் சமண முனிவரது போதனையைக் கேட்டுச் சமண சமயத்தைச் சார்ந்த போது அவன் கருத்திற்கு மாறாகச் சைவ நெறியை அழுத்தமாகப் பற்றி நின்றார் குலச் சிறையார்; மெய்ப்பொருள் அறிந்து மன்னன் மீண்டும் சிவநெறி சேர்வான் என்று உணர்ந்து பொறுத்திருந்தார். சிவனடியார் திருக்கூட்டத்தை ஆதரித்தார். தனியாக வரும் அடியாரையும் முக மலர்ந்து உபசரித்தார். இவற்றை மன்னன் வெறுப்பானே என்று எண்ணிச் சிறிதும் சஞ்சலமுற்றார் அல்லர். இவ்வமைச்சரைக் கண்குளிரக் கண்டார் திருஞான சம்பந்தர். இவர் சேவையைச் செஞ்சொற்களால் போற்றினார்.

" கணங்களாய் வரினும் தமியராய் வரினும்
அடியவர் தங்களைக் கண்டால்
குணங்கொடு பணியும் குலச்சிறை பரவும்
கோபுரம் சூழ்மணிக் கோயில். "

என்று ஞானசம்பந்தர் பாடியருளிய தேவாரத் திருப்பாசுரத்தில் குலச்சிறையாரின் பணிவும் பண்பாடும் இனிது விளங்குகின்றன. இத்தகைய மனத்திண்மையும் மதி நலமும் வாய்ந்த அமைச்சரின் பெரு முயற்சியாலேயே திருஞான சம்பந்தர் மதுரைக்கு எழுந்தருளினார்; சிவநெறியின் பெருமையை உலகறியக் காட்டினார். மன்னன் மனம் திரும்பினான்; ஆலவாயான் திருநீற்றை அகமகிழ்ந்து அணிந்தான். மன்னனைப் பின்பற்றிய மக்களும் நெற்றியிலே திருநீற்றை நிறையப் பூசினர்.

" தென்னவன் தனக்கு நீறு
சிவபுரச் செல்வர் தந்தார்
முன்னவன் பணிந்து கொண்டு
முழுவதும் அணிந்து நின்றான்
மன்னவன் நீறணிந்தான் என்று
மற்றவன் மதுரை வாழ்வார்
துன்னி நின்றார்கள் எல்லாம்
தூயநீறு அணிந்து கொண்டார். "

என்று திருத்தொண்டர் புராணம் தெரிவிக்கின்றது.

ஆலவாயில் உள்ள வெள்ளியம்பலம் தமிழ் நாட்டார் போற்றும் பஞ்ச சபைகளில் ஒன்றாகும். அம் மன்றத்திலே இறைவன் ஆடிய திருக்கூத்தின் அழகைக் கண்டு ஆனந்த பரவசமுற்ற அடியார் ஒருவர் " கால் மாறி ஆடிய கற்பகமே! யான் உன்னை விடுவேன் அல்லேன் " என்று கதறினார்.

இவ்வாறு ஆலவாயில் அங்கயற்கண்ணியோடு அமர்ந்து அருள் புரியும் ஈசன் பெருமையை அடியார் அடிக்கடி சொல்லக் கேட்டு மதுரையில் வாழும் கிளிகளும் மதுர மொழியால் திருவிளையாடல்களை எடுத்துரைக்கும் என்று பாடினார் ஒரு கவிஞர்.

" ஆடல் புரியும் அரனென்றும் மூவர்தமிழ்ப்
பாடல் புரியும் பரனென்றும் — கூடலிலே
நன்னரி வாசிக்கு நடைபயிற்றி னோனென்றும்
கின்னரி வாசிக்கும் கிளி "

என்ற அருமையான பாட்டிலே ஆலவாயான் பெருமை அழகாக விளங்குகின்றது. " ஆடல் புரிவான் எங்கள் அரன் " என்று பேசும் கிளி; " தேவாரப் பாடல் கேட்பான் எங்கள் பரன் " என்று தித்திக்கப் பேசும் மற்றொரு கிளி. " நரியைப் பரியாக்கி நடையும் பயிற்றுவான். எங்கள் நாதன் " என்று நவிலும் இன்னொரு கிளி. இவ் வண்ணம் ஈசன் புகழைப் பேசிய கிளிக்குலம் இன்றும் திரு ஆலவாயில் வாழ்கின்றது. கிளி மண்டபத்தில் உள்ள பச்சைக் கிளிகளும், பஞ்சவர்ணக் கிளிகளும், வெள்ளைக் கிளிகளும், மற்றுமுள்ள கிள்ளைகளும் மீனாட்சியம்மையின் திருப்பெயரை இசையினும் இனிய மழலை மொழியால் பேசும் பொழுது அன்பர் செவிகளில் இன்பத் தேன் வந்து பாய்கின்றதன்றோ?

# பூரியில் சர்வோதய விழா

டி. டி. திருமலை

சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனையடையும் போது மணி 7-50 ஆகிவிட்டது. இரவு எட்டு மணிக்குக் கல்கத்தா மெயில் புறப்படுகிறது. தொங்கல் பையுடனும், படுக்கையுடனும் பிளாட்பாரத்தில் வெகு வேகமாகப் போய்க் கொண்டிருந்தேன். ரிசர்வ்டு வண்டியை எட்டியபோது என்னைக் கூப்பிட்டது ஒரு குரல். திரும்பியதுதான் எனக்குத் தெரியும். எப்படியோ என்னை இழுத்துப் பெட்டிக்குள் போட்டுக் கொண்டு விட்டார் அவர்.

எத்தனையோ ஆண்டுகளுக்குப் பின் அவரைச் சந்திக்கிறேன். அந்த ஆனந்தத்தில் எல்லா அலுப்பும் தீர்ந்தது. "நீயும் பூரிக்குத்தான் வருகிறாயா!" என்று க்ஷேம லாபங்களை விசாரிக்கலானார் ஸ்ரீ ஹரிஹர சர்மா அவர்கள்.

"பூரியில் என்ன, க்ஷேத்திராடனமா!" என்று எதிரே பெஞ்சியில் அமர்ந்திருந்த அன்பர் வினவினார்.

"சர்வோதய சம்மேளனத்துக்குப் போகிறோம்" என்றார் சர்மாஜி.

"புதிதாக இருக்கிறதே, அதென்ன ஐயா அது!" என்று கேட்டார் அந்தக் கல்கத்தா செல்லும் பிரயாணி.

நாலு பேர் கூடும் நாற்சந்தியிலும் பிரசங்கம் செய்யத் தயங்காத எனது நா சும்மா இருக்குமா! ஆரம்பித்து விட்டேன்.

"மகாத்மா காந்தி மறைந்தபின் அன்னாருக்கு நினைவுச் சின்னம் எழுப்பும் நோக்கத்துடனே ஸ்ரீஜவாஹர்லால்நேரு, ஸ்ரீ ராஜேந்திர பிரசாத், ஆசார்ய வினோபாபாவே, மேலும் நிர்மாண ஊழியர்கள் பலருமாகச் சேவாக்கிராமத்தில் கூடினார்கள். இதுவரை உலகம் கண்டிராத ஒரு முடிவை அவர்கள் செய்தார்கள். உலகின் பல பாகங்களிலிருந்தும் ஆயிரக்கணக்கான யோசனைகள் வந்து குவிந்திருந்தன. அவை யாவும் நிராகரிக்கப்பட்டன. காந்திஜியின் ஞாபகச் சின்னத்துக்கு அவர் பெயரே கூடாது என்பதுதான் அந்த முடிவு.

"காந்திஜி வாழும்போதே நாமெல்லாம் காந்தி ஜயந்தி கொண்டாடி வந்தோம். 'என்னுடைய பிறந்த தினத்தை காந்தி ஜயந்தி என்று அழைக்கக் கூடாது. சர்க்கா ஜயந்தி என்றே கொண்டாட வேண்டும்' என்று அண்ணல் உத்தரவு பிறப்பித்திருந்தது யாவர்க்கும் தெரியும். இதை ஞாபகத்தில் கொண்டே மேற்சொன்ன முடிவுக்கு வந்தனர் தலைவர்கள். தம் பெயரைவிடத் தாம் உயிருக்கு மேலாகக் கருதி வந்த கொள்கைகள்தான் என்றென்றைக்கும் மக்களுக்கு உதவ வேண்டும் என்பது மகாத்மாவின் விருப்பம். அவைகள் அத்தனைக்கும் சூத்திரமாக 'சர்வோதயம்' என்ற பெயரை அவர் சூட்டியிருந்தார். ஆகவே 'சர்வோதய சமாஜம்' நிறுவப்பட்டது. சந்தாத் தொகை மற்ற ஸ்தாபன ரீதியான கட்டுப்பாடு எதுவும் இதற்குக் கிடையாது. நிர்மாணத் திட்டத்தில் தொண்டாற்றி வருபவர், சர்வோதயத்தில் நம்பிக்கை கொண்டவர் யாவரும் இந்தச் சமாஜத்தில் சேர்ந்து கொள்ளலாம். சர்வோதய ஊழியர்கள் அனைவரும் ஓர் இனம் என்ற உணர்ச்சியுடன் தங்கள் தங்கள் வேலையில் ஈடுபட இது உதவும். சர்வோதய சமாஜத்துக்குக் காரியதரிசி ஒருவர் மட்டும் உண்டு. இதற்கென இருக்கும் கமிட்டியின் உதவியால் இவர் ஆண்டுதோறும் 'சர்வோதய சம்மேளன'த்தை அதாவது மகாநாட்டைக் கூட்டுவிப்பார். ஊழியர்கள் அவரவர்களின் கருத்தையும், அனுபவத்தையும் பரிமாறிக் கொள்ளவே இம்மகாநாடு கூட்டப்படுகிறது" என்று ஒரு சொற்பொழிவே ஆற்றி விட்டேன்.

"என்ன தூங்க வேண்டாமா!" என்று சர்மாஜி குறுக்கிடாவிட்டால் எனது பேச்சு இரவு பூராவுமே நீண்டு விட்டிருக்கும்.

மார்ச்சு 26வ. காலை மகாநாடு ஆரம்பமல்லவா! போய்ச் சேர்ந்த அரை மணிக்கெல்லாம் நடவடிக்கைகளில் கலந்து கொள்ளத் தயாரானேன். 250 அடி சதுக்கத்தில் பந்தல் அமைத்திருந்தார்கள். பந்தலில் வேய்ந்திருந்த பனை ஓலைகள் பல உள்ளே எங்கு பார்த்தாலும் நீட்டிக் கொண்டிருந்தன. அவைகள்தான் தோரணங்களுக்குப் பதிலாக அமைந்து பந்தலை அழகு செய்தன என்றால் மிகையல்ல. மேலக் கடைசியில் ஆறு அடி உயரமுள்ள மேடை மீது அமர்ந்திருந்த தலைவர்கள் தவிர வேறு அலங்காரம் அதற்கு என்னத்துக்கு வேண்டும்! என் கண்ணில் முதலில் பட்டவர் ஒரிஸ்ஸா கவர்னர் ஸ்ரீ பி. எஸ். குமாரசாமி ராஜாதான். அவர் பக்கத்தில் ஜனாதிபதி ஸ்ரீஜத் ராஜேந்திர பிரசாத், ஒரிஸ்ஸா பிரதமர், ஸ்ரீ ஜயப்பிரகாஷ் நாராயண், ஸ்ரீ சங்கர் ராவ் தேவ் மற்றும் பலர் வீற்றிருந்தார்கள். உடல் முழுதும் தூய வெள்ளைக் கதராடையால் போர்த்திக் கொண்டு சாந்தமே உருவான வினோபா அடிகள் அமர்ந்திருந்த காட்சியைக் காணக் கண் கோடி வேண்டும்.

நூற்பு யக்ஞம் முடிந்ததும் ஸ்ரீ ரவி சங்கர் மகராஜ் தலைமையில் சம்மேளனம் ஆரம்பமாயிற்று. ஒரிஸ்ஸாவைச் சேர்ந்த ஸ்ரீ ஹரிஹர தாஸ் ஆறாயிரத்துக்கு மேற்பட்ட பிரதிநிதிகளை வரவேற்று உபசார மொழியுரைத்தார். என்றுமே கண்டிராதபடி முகத்தில் ஒளி வீச ஆசார்ய வினோபாஜி தமது தொடக்க உரையை ஆரம்பித்தார். "நமது பாரத சமுதாயத்தை உலகத்துக்கு வழிகாட்டும் அந்தஸ்துக்கு உயர்த்த வேண்டாமா! இதை யார் சாதிக்க வல்லவர்கள் என்பதே இன்றையப் பிரச்னை. நாட்டிலே செல்வாக்கு வாய்ந்த மகத்தான ஸ்தாபனமான காங்கிரஸ் மகா சபையால் இதைச் சாதிக்க இயலுமா! இயலாது. ஏனென்றால் காங்கிரஸ்காரர்கள் சதா சர்வகாலமும் தேர்தலைப் பற்றியே கவலைப் பட்டுக் கொண்டிருக்கிறார்கள். எல்லா அரசியல்



சர்வோதய மகாநாட்டை யொட்டி நடந்த குடிசைத்தொழில் கண்காட்சி வாசலையும், மகாநாட்டில் கலந்து கொண்ட ஜனாதிபதி ராஜேந்திரபிரசாத், ஜயப்பிரகாஷ் நாராயணன் அவர்களையும், பூமிதான இயக்கத்தின் தந்தையான ஸ்ரீ விநோபா அடிகளையும் காணலாம்.

கட்சிகளும் இதையே நினைக்கின்றன. இவைகளால் வருங்கால பாரதத்தை நல்லமுறையில் உருவாக்க முடியாது. சத்தியத்தையும், அஹிம்சையையும் அடித்தளமாகக் கொண்ட சர்வோதய சமுதாயமே நமது நாட்டில் உருப்பெற வேண்டும். சட்டசபை அங்கத்தினர்களுக்கு எஜமானர்களான பொது மக்களைச் சர்வோதய ஊழியர்களான நாம் அணுகி அவர்களிடையே மனமாற்றத்தை உண்டு பண்ண வேண்டும். இதற்குச் சிறந்த மார்க்கம் பூதான யக்ஞ இயக்கமே'' என்று தெள்ளத் தெளிவாக எடுத்துரைத்தார் விநோபாஜி. அன்று ஒன்றே முக்கால் மணி நேரம் விநோபாஜி பேசினார்கள் என்பதைப் பந்தலை விட்டு எழுந்த பிறகுதான் உணர்ந்தோம்.

பிற்பகல் 2-30 மணிக்கு மீண்டும் கூடியது மகாநாடு. ஸ்ரீஜத் ஜயப்பிரகாஷ் நாராயண் அவர்கள் விநோபாஜியின் கருத்தையே தமக்கு உரிய முறையில் விளக்கம் கூறி, பூதான இயக்கத்தின் புரட்சித்தன்மையை எடுத்துக் காட்டினார். பூதான இயக்கம் ஆரம்பித்த போது அதுவும் நிர்மாணத் திட்டத்தின் புதியதொரு அம்சமெனவும், மற்ற அம்சங்கள் எப்படி சமுதாயத்தில் எந்தவித மாறுதலையும் ஏற்படுத்த வில்லையோ அதே போல இதுவும் பயனற்றதாக கழிந்து விடும் என்று முதலில் கருதியதாகவும், இவ்வியக்கத்தின் வளர்ச்சியையும் போக்கையும் நேருக்கு நேர் இருந்து கவனித்த போது இது மகத்தான புரட்சி சாதனம் என்று பின்னால் உணர்ந்தவுடன் முழுமூச்சாக இதில் தாம் இறங்கி விட்டதாகவும் கூறினார்.

அடுத்தாற் போல் பேசிய ஸ்ரீ காகா கலேல்கர் ஜாதிமதபேதமற்ற சமுதாயம் உருவாக அனைவரும் அல்லும் பகலும் உழைக்க வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார். காங்கிரஸ் மகாசபைத் தலைவர் ஸ்ரீ தேபர் நிலச் சீர்திருத்தம் செய்வதென்பது எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தது என்பதையும், மந்திரி ஸ்தானம் வகிக்கும் போது இந்த முனையில் தாம் பட்ட பாட்டையும் அனுபவ ரீதியாக எடுத்துச் சொன்னார். எல்லாவற்றையும் விட பூதான யக்ஞமே அந்தக் காரியத்தை எளிதில் சாதிக்க வல்லது. ஆகையால் காங்கிரஸ் மகாசபை உறுதுணையாக நின்று இதற்கு ஆதரவு காட்டி வரும் என்று உறுதிமொழி கூறினார்.

காந்திஜியைப் பின்பற்றிச் சுதந்திரம் பெற்ற இந்த நாட்டில் ராணுவச் செலவைக் குறைக்க இயலவில்லை; பூரண அஹிம்சா மார்க்கத்தைக் கடைப் பிடிக்க முடியவில்லை என்பதை ஒப்புக் கொண்டே ஆகவேண்டும். ஆனால் சர்வோதயமே நமது நாட்டுக்கு உகந்த வழிகாட்டியாகும். அதில் நம்பிக்கை வைத்து நாமெல்லாரும் சளியாமல் உழைக்க வேண்டுமென்று உருக்கமாகப் பேசி வேண்டிக் கொண்டார் நமது ஜனாதிபதி ராஜேந்திர பிரஸாத்.

* * *

சர்வோதய சம்மேளனத்தை யொட்டி ஒரு பொருட்காட்சி ஏற்பாடு செய்திருந்தார்கள். அதைப் பார்க்கச் சென்றோம். அங்கே ஆயிரக்கணக்கான மக்கள் சாரி சாரியாகப் பார்த்துச் சென்ற வண்ணமாக இருந்தார்கள். குடிசைத் தொழில் காட்சியைத்தான் எத்தனை கச்சிதமாகக் கலையுணர்ச்சியுடன் அமைத்திருந்தார்கள். காட்சிச் சாலைகளைப் பார்த்துப் பார்த்து அனுபவித்தோம். வழக்கம் போல் இருந்த சாமான்களுடன், ஒரு வகை மஞ்சள் நிறமுள்ள மரத்தில் செய்த பாத்திரங்கள், விளையாட்டுச் சாமான்கள் கண்களைக் கவர்ந்தன. பாம்பு, புலி, மான் இவைகளின் தோலால் செய்யப்பட்ட செருப்பு, பெல்ட், பெட்டிகள் அனைத்தும் ஒரிஸ்ஸாவில் ஏராளமாக உற்பத்தியாகின்றன என்பதை அறிந்தேன்.

கடைசி நாள் கூட்டத்தில் பெண்கள் ஒவ்வொருவராக எழுந்து மேடைக்குச் சென்று தங்கள் நகைகளைக் கழற்றி ஸ்ரீமதி ஜானகி

பஜாஜ் அம்மையாரிடம் கொடுத்துக்கொண்டிருந்தார்கள். இது என்ன என்று விசாரித்ததும் அந்த அம்மையாரின் வேண்டுகோளுக்கிணங்கிப் பெண்கள் சம்பத்து தானம் வழங்குகிறார்கள் என்று அறிந்தோம்.

சரித்திரப் பிரசித்தி பெறப் போகும் பிரசங்கத்தை ஆசார்ய வினோபா நிகழ்த்தினார். இம்மாதிரியான சொற்பொழிவை இதுவரை கேட்டதே இல்லை என்று எல்லோரும் வியந்தார்கள். "ராஜாஜி ஒரு ராஜரிஷி. நமது பிரதம மந்திரி ஜவாஹர்லாலும் அவரும் உலக சமாதானத்தையே சதா சர்வகாலமும் மனத்தில் ஸ்மரிக்கிறார்கள். அணு ஆயுதங்களைச் சமுத்திரத்தில் எறியச் சொன்னார் ராஜாஜி அவர்கள். உலகம் அஹிம்சையைப் பின்பற்றப் பல்லாயிரக் கணக்கான ஆண்டுகள் கழிய வேண்டுமென்று முன்பெல்லாம் நான் நினைத்ததுண்டு. ஆனால் அந்தக் காலம் வெகு சமீபத்தில் வந்து விட்டதென இன்று நான் உணர்கிறேன். அதுவும் 1957ம் ஆண்டுக்குள் சித்தியாகப் போகிறது என்பது எனக்கு நன்றாகப் புலனாகிறது. இது வறட்டுக் கற்பனையல்ல. உலகம் முன்னேறிக் கொண்டே வருவதைத் தவிர பின் நோக்கிச் செல்லவில்லை என்பதை நான் காணுகிறேன். பலாத்காரப் பாதையை அது அறவே விட்டொழிக்க வேண்டிய காலம் நெருங்கி விட்டது. பலாத்காரத்தின் எல்லையை உலகம் கண்டு விட்டது. இனி அதற்கு எதிரான அஹிம்சைதான் வழி காட்ட வேண்டும். ஹனுமான் இலங்கைக்குப் பறந்து செல்லும் போது ஒரு ராட்சஸி அவரை விழுங்குவதற்கு வாயைத் திறந்தான். இவர் தமது உருவத்தைப் பெரிதாக்கிக் கொண்டார். அவளும் தன் உருவத்தைப் பெரிதாக்கிக் கொண்டான். இப்படியாக இருவரும் தங்கள் தங்கள் உருவங்களைப் போட்டி போட்டுப் பெரிதாக்கிக் கொண்டே போனார்கள். இறுதியில் ஹனுமான் யோசித்தார். இதுதான் தக்க தருணம் என்று திடீரெனத் தம் உருவைக் கட்டை விரல் அளவுக்குச் சிறிதாக்கிக் கொண்டு அந்த அரக்கியின் உடலுள் புகுந்து அப்பால் சென்றார். அதே போல இன்றைய உலகில் ராணுவம் வளர்ந்து கொண்டே வந்திருக்கிறது. இதற்கு மாற்று அணுவிலும் நுணுக்கமான ஆத்ம சக்தியேயாகும். அதுதான் அஹிம்சையும் சத்தியமும். இதனை அடிப்படையாகக் கொண்ட சர்வோதய சமுதாயம் 1957க்குள் உருவாகப் போகிறது. பூதானயக்ஞம் இதனைச் சாதிக்கும்" என்று வினோபாஜி பேசி முடித்ததும் கூட்டத்திலுள்ள அனைவரின் முகங்களிலும் உறுதியும், தெம்பும் பிரகாசித்தன.

* * *

தமிழ் நாட்டிலிருந்து நூறு பேர்கள் பிரதிநிதிகளாக வந்திருந்தார்கள். கடைசி நாள் இரவு தமிழ் நாட்டுப் பிரதிநிதிகள் கூட்டம் ஒன்று நடந்தது. மகாநாட்டு நடவடிக்கைகளை அனுசரித்து, வரும் ஆண்டுகளில் நாம் செய்ய வேண்டியவைகளைப் பற்றி விரிவாக விவாதிக்கப்பட்டது. இவ்விவாதத்தின் பயனாகத் தமிழ் நாடு இப்பூதானத் துறையிலும் முன்னணியில் நிற்கும் என்று திட நம்பிக்கை ஏற்பட்டது. அவ்வுணர்ச்சியுடன் ஊர் திரும்பினேன்.

# டுமெக்ஸ்

# பால் உணவு

# எளிதில் கரையக்

# கூடியதா?

ஆமாம். டுமெக்ஸ் பால் உணவு சுலப
மாக எளிதில் தண்ணீரில் கட்டிதட்டாமல்
கரைவதை நீங்களே காணலாம்.
ஏனெனில் இது வெகு சன்னமான
பவுடராக தயாரிக்கப்பட்டிருப்பதால்
உங்கள் குழந்தை இதை வெகு சுலபமாக
ஜீரணித்துக்கொள்ளும். இதனல்
குழந்தையின் வயிற்றில் புளிப்பு தட்டு
வதில்லே. குழந்தையும் டுமெக்ஸ் பால்
உணவை சாப்பிடுவதில் பிடிவாதமின்றி
விரும்பி சாப்பிடுகிறது.

# டுமெக்ஸ்
## பால் உணவு

உங்கள் குழந்தைகளுக்கு டுமெக்ஸ் பால் உணவைக்
கொடுத்து அவர்களது வளர்ச்சியைக் கவனியுங்கள்

கல்கியின்

# அமரதாரா

### அத்தியாயம் 7

## தந்தையின் கோரிக்கை

**ப**த்மநாபன் அன்று பேசியதை வேறு யாராகிலும் கேட்டிருந்தால் என் நன்மைக்காகவே அவர் சொல்லுகிறார் என்று கருதி யிருப்பார்கள். பேச்சு அவ்வளவு கனிவாகவும் நயமாகவும் இருந்தது.

நானோ, 'அப்பா இருந்திருந்தால் இன்று இவர் சொல்லப் போகும் விஷயத்தை எதிர்நோக்கித் திகிலுடன் காத்துக்கொண்டிருக்க வேண்டாமே?' என்று எண்ணிக் கொண்டிருந்தேன்.

அவர் தொடர்ந்து, "உனக்கு அப்பாவைப் பற்றிச் சொல்லி வருத்தப்பட வைக்க வேண்டுமென்று நான் நினைக்கவில்லை. இருந்தாலும் அவர் என்னிடம் ஒரு பெரிய பொறுப்பை ஒப்படைத்திருக்கிறார். அவருக்கு நான் கொடுத்த வாக்குறுதியின்படி நடக்க நான் விரும்புகிறேன். அதைப் பற்றிச் சொல்லத்தான் உன்னைக் கூப்பிட்டேன். உன் தந்தை என்னிடம் உன்னைப் பாதுகாக்கச் சொல்லிக் கேட்டுக் கொண்டாரென்பது உனக்குத் தெரியுமல்லவா? அவரே சொல்லியிருப்பாரே" என்றார்.

"ஆமாம், சொன்னார்!"

ஆனந்தி

"நான்தான் சொல்லச் சொன்னேன். அவருக்கு உடம்பு ரொம்பப் பலஹீனமாகி விட்டது என்று டாக்டர் கூறியதும் எனக்கு மிகவும் கவலையாக இருந்தது. உன்னைப் பற்றித்தான் எனக்கு மிகுந்த கவலையாக இருந்தது. தாய் தந்தை அற்ற சிறுமி ஆயிற்றே? இவருக்கும் ஏதாவது நேர்ந்து விட்டால் உன்னுடைய கதி என்ன ஆகும் என்று எண்ணி, டாக்டரிடம் 'நிச்சயமாகப் பிழைத்து விடுவாரா?' என்று கேட்டேன்.

"'இனிமேல் நாள் கணக்குத்தான்' என்று டாக்டர் கூறிவிட்டார். அப்பாவுக்கும் அது தெரிந்துவிட்டது. 'இந்துமதி விஷயமாக ஏற்பாடுகள் செய்துவிட வேண்டும்' என்று அவர் சொன்னவுடனேயே நான் அதற்கு இணங்கி விட்டேன். அப்போதே ஏற்பாடுகள் செய்து விட்டேன். ஆனால் அவர் என்னிடம் என்ன கூறினார் தெரியுமா?"

"சொல்லுங்கள்" என்றேன்.

"'இந்த மாதிரி எழுதி வைப்பதிலெல்லாம் எனக்கு ஒன்றும் பிரமாத நம்பிக்கையில்லை. உங்களிடம் நான் இந்துமதியை ஒப்படைக்கிறேன். உயிலிடம் ஒப்படைக்க முடியாதல்லவா? நீங்கள்தான் அவளைக் காப்பாற்ற வேண்டும். அவளுடைய மனத்துக்குப் பிடித்த ரங்கதுரை என்னும் மாணவன் இங்கிலாந்து சென்றிருக்கிறான். அவன் திரும்பி வந்து அவளைக் கல்யாணம் பண்ணிக் கொள்வானோ மாட்டானோ தெரியாது. சந்திரமணி - காசிலிங்கத்தைப் பற்றி உலகத்தில் ஏகப்பட்ட வதந்திகள் இருக்கின்றன. அவற்றுக்கெல்லாம் துணிந்து இந்துமதியைக் கல்யாணம் செய்து கொள்ள ஒரு ஐ.ஸி.எஸ். படித்தவன் ஒப்புக் கொள்வானோ, என்னவோ தெரியவில்லை. ஆகவே இந்துமதியைக் கல்யாணம் செய்து




கொடுக்கும் பொறுப்பை உங்களிடம் ஒப்படைக்கிறேன். தயவு செய்து அவள் சந்தோஷத்துடன் இருக்கும்படி நீங்கள் பார்த்துக் கொள்ள வேண்டும். இந்துமதி உலகம் தெரியாத குழந்தை. நன்மை, தீமை அறியாதவள். அவளுக்கு நீங்கள்தான் புத்தி சொல்ல வேண்டும். யோசனை சொல்ல வேண்டும். உங்களை என்னுடைய கூடப் பிறந்தவராக எண்ணிக் கொண்டு சொல்கிறேன்' என்று கூறினர். நானும், 'நீங்கள் கொஞ்சங்கூடக் கவலைப்பட வேண்டாம். சுலோசனு வேறு, இந்து வேறு என்று நான் நினைக்கமாட்டேன். என் பெண்ணைப்போல் பார்த்துக் கொள்கிறேன். அவளுக்குத் தகுந்த இடமாகப் பார்த்து விவாகம் செய்து வைக்கிறேன்' என்று வாக்குறுதி அளித்தேன். அதை நான் நிறைவேற்ற வேண்டுமல்லவா?'' என்று புன்னகையுடன் கேட்டார்.

நான் பதில் பேசாமலிருக்கவே, "நீயும் ஒத்துழைத்தால் தானே நான் அதை நிறைவேற்ற முடியும்? பேசாமல் இருந்தால் என்ன நினைப்பது?'' என்று கேட்டார்.

"நீங்கள் உள்ளன்போடு என்னுடைய நன்மைக்காகவே ஒரு விஷயத்தைச் சொன்னுல் நான் ஒத்துழைக்காமல் இருப்பேனு? நீங்கள் விஷயமே ஒன்றும் சொல்லவில்லையே! சொன்னுல் பிறகு என் அபிப்பிராயத்தைக் கூறுவேன்'' என்று வார்த்தைகளை மிகவும் ஜாக்கிரதையாக உபயோகித்துப் பேசினேன்.

அவர் பேசிய விதம் எனக்குச் சற்றுத் தைரியமளித்தது. அவருக்கு விஷயத்தை நேரே ஆரம்பித்துச் சொல்லத் துணிவு வரவில்லை. அதுவே அவர் சற்று மனச்சாட்சிக்குப் பயப்படுகிருர் என்பதை எனக்கு உணர்த்தியது. என்னிடம் விஷயத்தைப் பளிச்சென்று சொல்லி 'நீ கல்யாணம் பண்ணிக் கொள்ளத்தான் வேண்டும்'

என்று சொல்ல எப்போது தைரியம் இல்லையோ, அதனால் தம்முடைய பலவீனத்தை அவர் அறிந்திருக்கிறார் என்றே அர்த்தம். 'சாமர்த்தியமாகப் பேசினால் அவரே உண்மையை உணர்ந்து விடும்படி செய்யலாம்' என்று எண்ணினேன். அவர் சந்தர்ப்பங்களுக்கு அடிமையாகி விடும் மனிதர். தமக்கென்று ஒரு அழியாத இலட்சியத்தைப் பிடித்துக் கொண்டு முன்னேறும் மனிதரல்ல. சந்தர்ப்பங்களுக்கும், உணர்ச்சிகளுக்கும் அவர் அடிமைதான். அவர் முன்னுக்கு வந்து பெயரும் புகழும் பெற்றதுகூட சந்தர்ப்பத்தினால்தான்; திறமையினால் அல்ல. அவருடைய செல்வாக்கு நிலைத்திருப்பதற்குக் கூடத் திறமை காரணமில்லை. அதுவும் ஒரு சந்தர்ப்பத்தினால் ஏற்பட்டதுதான். அவர் என்ன செய்வார் பாவம்? அப்பாவி மனிதர்!

நான் இப்படியெல்லாம் எண்ணிக் கொண்டிருக்கும்போது அவர் எங்கேயோ பார்த்துக் கொண்டிருந்தார். மறுபடியும் அவர் என்னைப் பார்த்தபோது முகத்தில் ஒரு உறுதி தெரிந்தது. மறுபடியும் என் உடல் ஒரு கணம் நடுங்கியது.



பத்மநாபன் ஆரம்பித்தார்: "இந்து! நான் உன் தந்தையின் ஸ்தானத்தில் இருந்து உனக்கு நன்மை செய்ய வேண்டியவன். ஆகவே நான் சொல்வதைக் கவனமாகக் கேள். ஈசுவர மூர்த்தி இருக்கிறாரே, அவருக்கு நிறைய செல்வம் இருக்கிறது. ரொக்கமாகப் பாங்கில் ஒன்றரை லட்சம் இருக்கிறது. நிலமாகவும், புலமாகவும் வேறே இன்னும் இருக்கிறது. நல்ல மனிதர். நயந்த சுபாவம். குழந்தை குட்டி கிடையாது. சம்சாரத்திலேயே இதுவரை ஈடுபடவில்லை. இப்போது உன்னை மணந்து கொள்வதாகக் கூறுகிறார். நீ இதைச் சரியாகப் புரிந்து கொள்ள வேண்டும். உனக்காகவே உன்னைக் கல்யாணம் செய்து கொள்வதாகக் கூறுகிறார். இதில் சுயநல எண்ணத்துக்கே இடமில்லை. நீ அவரைக் கல்யாணம் பண்ணிக் கொண்டு விட்டால் சௌக்கியமாக ஒருகுறைவுமில்லாமல், ராணி மாதிரி வாழலாம்" என்று கூறினார்.

"ராணி மாதிரி வாழ நான் ஆசைப்படவில்லை. நான் உழைப்பவர் வம்சத்தில் பிறந்தவள். உழைத்துப் பாடுபடுவதைத்தான் விரும்புவேன். வீண் படாடோபங்களாலும் சோம்பேறி வாழ்க்கையாலும் என்ன சுகத்தை அடைய முடியும்? உழைப்பதே எனக்குச் சுகம், இன்பம், எல்லாம்" என்று கூறிச் சற்று நிறுத்தினேன்.

"இந்துமதி! நீ உடனே பதில் சொல்ல வேண்டுமென்று நான் சொல்லவில்லை. விஷயத்தைச் சொல்லி விடுகிறேன். நீ நன்றாக யோசித்துப் பார்த்துச் சொன்னால் போதும். அவசரம் ஒன்றுமில்லை. அதனால் ஏற்படக் கூடிய நன்மைகளைச் சொல்வது என் கடமை. ஆகையால் சொல்லி முடித்து விடுகிறேன். இப்போது பேசாமல் கேட்டாயானால் போதும்" என்று சொன்னார்.

நான் மௌனம் சாதித்தேன்.

"ரங்கதுரையை நீ நினைத்துக் கொண்டு இப்படிப் பேசுகிறாய். ரங்கதுரை சீமைக்குப் போயிருக்கிறான். அவன் திரும்பி வரும்போது, உன்னைத் தேடி வருவான் என்பது நிச்சயமில்லை. நிச்சயமில்லை என்ன? ஒரு நாளும் உன்



னைத் தேடப் போவதில்லை. ஐ.ஸி.எஸ். படித்த பையனுக்குப் பெரிய பணக்கார இடங்களில் பெண் கொடுக்க விரும்புவார்கள். அதை யெல்லாம் விட்டு விட்டு உன்னை அவன் தேடிக் கல்யாணம் செய்து கொள்ளவே மாட்டான். அதை நீ நம்பிக் கொண்டு இப்போது வாழ்க்கையைக் கெடுத்துக் கொண்டு விடாதே" என்றார்.

இதை யெல்லாம் முதல் தடவை நான் கேட்டிருந்தால் என்ன செய்திருப்பேனோ தெரியாது. ஆனால் முன்பாகவே எதிர்பார்த்திருந்தபடியால் அமைதியாக இருந்தேன்.

"நீங்கள் இப்படிச் சொல்கிறீர்கள். அவர் ஒரு வேளை திரும்பி வந்த பிறகு என்னைத் தேடினால் என்ன செய்வது?" என்று கேட்டேன்.

"இந்து! நீ உலகம் தெரியாத குழந்தை. அதனால் இப்படிப் பேசுகிறாய். உன் மனத்தில் அவனைப் பற்றி இத்தனை திடமான நம்பிக்கை இருப்பதைப் பார்த்தால் எனக்கு ஒரு பக்கம் மகிழ்ச்சியாகவும் இருக்கிறது. ஒரு பக்கம் வருத்தமாகவும் இருக்கிறது. அவன் ஒரு கடிதம் கூடப் போடாமல் இருக்கிறான். இருக்கும் இடமும் தெரியவில்லை. அப்படி இருந்தும் அவன் மேல் உனக்குத் திடமான நம்பிக்கை இருக்கிறதே என்று நினைத்தாலே எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. உன்னுடைய அன்புக்கு அவன் லாயக்கில்லாதவன். அது கிடக்கட்டும். அவன் உன்னைப் பற்றி ஏதோ கேள்விப் பட்டிருக்கிறான். ஆகவே ஒரு ஐ.ஸி.எஸ். காரன் மனைவி அப்படிப்பட்ட பழிகளைக் கொண்டிருப்பது மிக அவமானகரமான விஷயம் என்று பட்டிருக்கும். ஆகவே உன்னை மறந்து விட வேண்டும் என்று தீர்மானித்திருக்கிறான். அதனால்தான் கடிதமே போடவில்லை. நீயும் அவனை மறந்து விடுவாய் என்றே நம்பியிருக்கிறான். ஆனால் நீ பாவம்! அதை உள்ளத்திலேயே வைத்துக் கொண்டு உருகிப் போகிறாய். அதனால் என்ன பயன்?" என்றார் பத்மநாபன்.

என் நெஞ்சம் கொந்தளித்தது. "அவர் சொல்வது உண்மையாக இருந்து விட்டால்?" என்ற எண்ணம் தோன்றி என்னை வதைத்தது. கண்ணீர் பொங்கி வந்து கண்களின் ஓரங்களில் தேங்கியது. சிரமப்பட்டுக் கண்ணீரை அடக்கிக் கொண்டு, "எப்படி இருந்தாலும் நான் இன்னும் இரண்டு வருஷங்களுக்குக் கல்யாணம் செய்து கொள்ளப் போவதில்லை. இது நிச்சயம்!" என்றேன்.

வக்கீல் புன்னகையுடன், "எல்லோரும் அப்படித்தான் சொல்லுவார்கள். கல்யாணம் என்ற உடனே சரியென் பார்களா? நீ சாவதானமாக யோசித்துச் சொல்லம்மா. உன் அறைக்குப் போகலாம்" என்றார்.

நான் எழுந்து என்னுடைய அறைக்குச் சென்றேன்.

மறுநாள்தான் சுலோசனாவுடன் பேசுவதற்கு எனக்கு அவகாசம் கிடைத்தது. அவளிடம் எல்லா விவரங்களையும் கூறினேன். "சுலோசனா! நான் பேசியதில் ஒன்றும் தவறில்லையே?" என்று கேட்டேன்.

"இல்லவே இல்லை" என்றாள்.

"ஏன் சுலோ! அப்பா சொல்வது உண்மையாக இருக்குமா? ரங்கதுரை என்னை மறந்துவிட வேண்டுமென்று நினைத்திருப்பாரா?" என்று கேட்டேன். நம் மனம்தான் என்ன பேதை மனம்? 'உன்னை ரங்கதுரை ஒருநாளும் மறந்திருக்க மாட்டார்' என்று சுலோசனா சொல்ல வேண்டுமென்று நெஞ்சம் விரும்பியது.

"உன்மேல் இருக்கும் பழியைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கலாம்

என்று அப்பா சொன்னதாகச் சொன்னாயே. உன் தந்தை காசிலிங்கம், சந்திரமணி இவர்கள் விஷயம்தானே?" என்று கேட்டாள் சுலோசனா.

"இல்லை, சுலோ! அப்பா அம்மா மேல் இருப்பது போதாதென்று, என் மேல் வேறு ஒரு அநியாயமான பழி இருக்கிறது" என்று மிகுந்த துயரத்துடன் கூறினேன்.

**பி**றகுதான் அவளிடம் சொக்கையாவின் மரணம் பற்றிய முழு விவரங்களையும் கூறினேன். சுலோவுக்கு ஒரே அதிசயமாகப் போய் விட்டது. மீண்டும் மீண்டும் அதைச் சொல்லச் சொல்லிக் கேட்டாள்.

"சுலோ! ரங்கதுரைக்கு இது தெரிந்தால் என்னை மணக்க விரும்ப மாட்டார் என்று நீ நினைக்கிறாயா?" என்று துயரத்துடன் கேட்டேன்.

"இந்து! நீ நிரபராதி என்பதை நான் நன்றாக உணர்கிறேன். ஆனால் இப்படி ஒரு விஷயத்தில் நீ சம்பந்தப் பட்டிருப்பது ரொம்ப வருத்தப்பட வேண்டிய விஷயம் தான். அவர் ஐ. ஏ. எஸ். படித்து விட்டு கலெக்டராக இருக்கிறார் என்று வைத்துக் கொள்வோம். அல்லது ஒரு மாஜிஸ்ட்ரேட்டாக வருகிறாரென்றால் அவருடைய மனைவியின் பேரில் இப்படி ஒரு அவச் சொல் இருப்பதை விரும்ப முடியாதல்லவா? குற்றம் நிரூபிக்கப்படவே வேண்டாம். இப்படி ஒரு விஷயத்தில் தன் மனைவி சம்பந்தப் பட்டிருக்கிறாள் என்பதே அவருடைய கௌரவத்துக்குப் பங்கம் விளைவிப்பதாக அவர் நினைக்கலாம். இதையெல்லாம் மீறி உன்னை மணந்து கொள்ள அவர் விரும்பினால் அவருக்கு ஒரு கோயில் கட்டலாம்."

"என்னை என்ன செய்யச் சொல்கிறாய், சுலோ! அப்பா நானேக்குக் கேட்டால் என்ன சொல்வது? அது தான் கவலையாக இருக்கிறது."

"ரங்கதுரை விஷயம் எப்படி இருந்தாலும், இந்தக் கிழவனுக்கு நீ வாழ்க்கைப்படுவது என்பது நினைக்க முடியாத விஷயம். இதற்கு மாத்திரம் நீ சம்மதிக்கவே கூடாது. எதற்கும் நீ கவலைப்படாதே. எல்லாம் சரியாக நடக்கும்" என்று சொல்லி விட்டுப் போய் விட்டாள்.

அவள் கூறியபின் என் மனம் சமாதானமடைந்தது. எனக்காகவே அவள் பேசுவதைப் பார்க்கும்போது உள்ளம் கனிந்தது. சுலோசனாவுக்கு நான் கடமைப் பட்டிருப்பது போல் யாருக்கும் கடமைப்படவில்லை.

### அத்தியாயம் 8

## இருள் கவிந்தது

**மீ**ரா, பாலு, நான் மூவரும் தோட்டத்தில் நின்று கொண்டிருந்தோம். மீரா கதை சொல்லும்படி என்னை நச்சரித்துக் கொண்டே இருந்தாள். புல் தரையில் மடியில் பாலுவைப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தேன். மீராவும் அருகில் உட்கார்ந்தாள். நூற்று எட்டாவது தடவையாக, மீரா என்னிடம் "கதை சொல்லு, அக்கா" என்றாள்.

நான் கதை சொல்லும் மனோ நிலையில் இல்லை. பத்மநாபன் கூறிய விஷயம் என் மனத்தை ஒரேயடியாகக் கலக்கி விட்டிருந்தது. எப்படியிருந்தாலும் இதற்குப் பதில் சொல்லியாக வேண்டும். எத்தனை நாள் தப்பித்துக் கொள்ள முடியும்? விடை என்னமோ தயார்தான். ஆனால் அதைச் சொல்லும் விதத்தில் அவர் மனத்தைச் சிறிதும் நோகச் செய்யக் கூடாது. நான் சொல்வதுதான் நியாயம் என்று தோன்றும்படி பணிவாகவும், ஆணித்தரமாகவும் சொல்லிவிட வேண்டும். நான் பதில் சொல்வதை ஒத்திப் போட்டுக் கொண்டே போகும் வரையில் சாதகமான பதிலையே எதிர் பார்த்துக் கொண்டிருப்பார். சீக்கிரம் சொல்லி விடுவதுதான் நல்லது.

மீரா நூற்று ஒன்பதாவது தடவையாக "இந்து அக்கா! கதை சொல்லேன்" என்றாள்.

அந்த சமயத்தில் இரண்டு சின்னஞ் சிறு தேன் சிட்டுகள் பறந்து வந்தன. அவைகளை மீராவுக்குக் காட்டினேன். "அந்தத் தேன் சிட்டைப் பார்த்துக் கொண்டே இரு. அது பறந்து போன

# முக்கியமான

## சைக்கிள் வியாபாரிகள், சைக்கிள் வாங்குபவர் களுக்கு நல்ல செய்தி !

### இந்தியத் தயாரிப்பின் உயர்ந்த தன்மைக்குத் தகுந்த பாராட்டு !



னிமேல், அம்பத்தூர் பாக்டரியில் தயாராகும் சைக்கிள்களும், சைக்கிள் பாகங்களும், உலகப் பிரசித்திப்பெற்ற

# ஹெர்குலிஸ்

டிரேட் மார்க்கையும், பெயரையும் தாங்கி வரும்.



ர்மிங்ஹாம், ஹெர்குலிஸ் சைக்கிள் & மோட்டார் கம்பெனி லிமிடெட் ஏற்படுத்தியுள்ள கண்டிப்பான "பிரிட்டிஷ் ஸ்டாண்டர்ட்" டெக்னிக்கல் விதிகளுக்கு ஏற்ப, அம்பத்தூர் தயாரிப்புகள் தரத்திலும் அமைப்பு முறையிலும் சிறந்து விளங்குவது தான் இந்த மாறுதலுக்கு காரணம்.




**டி. ஐ. சைக்கிள்ஸ் ஆப் இந்தியா லிமிடெட், மதராஸ்.**

# அறிவிப்பு



**தி ஹெர்குலிஸ் சைக்கிள் அண்டு மோட்டார் கம்பெனி லிமிடெட்.**

ராக்கிலேன்,
ஆஸ்டன்,
பர்மிங்ஹாம்
23 மார்ச், 1955.

மெஸர்ஸ் டி. ஐ. சைக்கிள்ஸ் ஆப் இந்தியா லிமிடெட்.

மதராஸ்.

சமீபத்தில் அம்பத்தூர் பாக்டரியைப் பார்த்துவிட்டுத் திரும்பி வந்திருக்கும் எமது இன்ஜினீயர்களும், டெக்னிக்கல் நிபுணர்களும் தந்த விவரங்கள் பாராட்டத் தகுந்தவை.

உங்கள் பாக்டரி தயாரிப்புகளின் சிறந்த தன்மை, நுணுக்கமான தயாரிப்பு விதிகளுக்குத் தகுந்த முறையில் அவை அமைந்திருக்கும் நேர்த்தி, எல்லாம் எனக்கு முழு திருப்தி அளிக்கிறது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

தரம் உயர்ந்ததாக அமைய வேண்டும் என்பதற்காக நாங்கள் ஏற்படுத்தியுள்ள விதிகள் மிகவும் கண்டிப்பானவை. அவற்றின்படி நீங்கள் மிகவும் கவனமாகத் தயாரிக்கிறீர்கள். எனவே நமது தயாரிப்புகள் எப்பொழுதும் குற்றமற்றவையாயிருக்கின்றன.

ஆகையால், நமது தயாரிப்புகளை "ஹெர்குலிஸ்" டிரேட் மார்க்கில் மார்க்கெட்டிற்கு விற்பனைக்கு அனுப்புவதற்கு இது சரியான சந்தர்ப்பம் என நினைக்கிறேன். அம்பத்தூர் பாக்டரியில் தயாராகும் சைக்கிள்கள் பிரசித்தி பெற்ற அந்தப் பெயருக்கு மேலும் புகழ் சேர்க்கும் என்ற திடமான நம்பிக்கை தான் இந்தத் தீர்மானத்திற்குக் காரணம்.

ஆர்தர் சேம்பர்லேன்
மானேஜிங் டைரக்டர்

TIC 6 EP

வுடன் கதை சொல்கிறேன்'' என்றேன். வயிற்றில் பசுமையான மஞ்சளும், முதுகில் வெல்வெட்டைப் போன்ற கறுப்பு நிறமுடைய அந்தச் சின்னஞ் சிறு பறவை அலமண்டால் கொடியில் பெரிதாகப் பூத்திருந்த ஒரு புஷ்பத்திலிருந்து தேன் குடித்த அழகைக் கண்டு வியந்து போனேன்.

"பாரு, மீரா! அது தன் சிறகுகளால் பறந்து கொண்டே எத்தனை அழகாகத் தேன் குடிக்கிறது, பார்த்தாயா? அதனுடைய மூக்கைப் பார். ஊசிமாதிரி எத்தனை நீளமாக இருக்கிறது!'' என்றேன்.

"சுவாமிதான் அதற்கு இப்படித் தேன் குடிக்கிறதுக்குச் சௌகரியமா மூக்குப் பண்ணிக் கொடுத்திருக்காரா?'' என்று மீரா கேட்டாள்.

"ஆமாண்டி, கண்ணு! சுவாமிதான் கொடுத்திருக்கார். உனக்கு யாரும்மா அதைச் சொன்னு?''

"எங்க டீச்சர் சொன்னு, அக்கா. எல்லாருக்கும் அவாவாளைக் காப்பாத்திக்கிறதுக்கு எது அவசியமோ அதை சுவாமி கொடுத்திருக்கிறாராம்.''

எனக்கும் அவளுடைய வார்த்தைகள் தென்பை அளித்தன. அவரவர்களைக் காப்பாற்றிக் கொள்வதற்கு எது அவசியமோ, அதை இறைவன் கொடுத்திருக்கிறார் என்றுளே. என்ன உண்மை! எனக்குப் புதிய தைரியம் பிறந்தது.

மடியில் இருந்த பாலு களுக்கென்று சிரித்தான். "உனக்குக் கூடப் புரிந்து விட்டதாடா கண்ணு?'' என்று அவனை அணைத்துக் கொண்டேன்.

தேன் சிட்டு இங்குமங்கும் பறந்தது. பல்வேறு புஷ்பங்களினின்றும் தேன் குடித்தது. அதைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தாள் மீரா.

நான் மாட்டேனென்று சொல்லி விடலாம். ஆனுல், வக்கீல் என்னை வற்புறுத்துவாரா? ஈசுவர மூர்த்தியைக் கல்யாணம் செய்து கொள்ள



நான் கனவில்கூட விரும்ப முடியாதே. இதை ஏன் பத்மநாபன் புரிந்து கொள்ள மாட்டேனென்கிறார்? அவரை நான் கல்யாணம் பண்ணிக் கொண்டுதான் ஆகவேண்டும் என்று வற்புறுத்தினால் என்ன செய்வது? மிக ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். எந்த நிமிஷம் வேண்டுமானாலும் வீட்டை விட்டு வெளியேறி விடுவதற்குத் தயாராக இருக்க வேண்டும்.

ஆனால் வெளியேறி விடுவது என்பது வார்த்தையளவில் சுலபமாகத்தான் இருக்கிறது. எனக்கு என்ன தெரியும்? குங்குமத் துறையைத் தவிர வேறு இடம் எதையும் கண் களால் கூடப் பார்த்ததில்லை நான். உலக அனுபவமே இல்லாதவள். இந்த வீட்டை விட்டுப் போய் விட்டால் போதுமா? குங்குமத் துறைக்கு மீண்டும் போக முடியாது. தெரிந்தவர்களோ யாரும் கிடையாது. அப்படித் தெரிந்த ஒன்றிரண்டு பேர் எச்சில் கையால் காக்கை ஓட்டாத தர்ம சீலர்கள். ஏன், அத்தையிடம் சென்றால் என்ன? அவருக்கு ஏற்கெனவேயே அப்பா தனக்கு ஒன்றும் சொத்து எழுதி வைக்கவில்லை என்று ஆத்திரமிருக்கிறது. எனக்காக அப்பா எழுதி வைத்திருக்கும் ஆருயிர ரூபாயை அவருக்கே கொடுத்து விடுவதாகச் சொன்னால் அவரிடம் இருக்கலாம். ரங்கதுரை வரும் வரையில் தானே? அதன் பிறகு நான் யாரையும் இலட்சியம் செய்ய வேண்டியதே இல்லை அல்லவா?

சே! என்ன குருட்டு யோசனை! அத்தை இனி என்னை ஏறிட்டுக் கூடப் பார்க்க மாட்டார். என் அன்னையை அவர் சொல்லியிருக்கிற சொற்களுக்கு நான் அந்த வீட்டு வாசற்படியைக்கூட மிதிக்கக்கூடாது.

எப்படியிருந்தாலும் இன்று பத்மநாபனிடம் உடைத்துச் சொல்லி விடுகிறேன். வருவது வரட்டும். கோமளவல்லி அம்மாளுக்கு விஷயம் தெரியுமோ தெரியாதோ?

என்ன விசித்திரப் பிறவி அவர். கலாவுடன் நான் பேசினால் பிடிப்பதில்லை. வேலைக்காரியிடம் "இவளால் என் குழந்தைகளும் கெட்டுப் போகிறார்கள்" என்றாராம்.



இப்படி எத்தனை குற்றங்கள் சொல்கிறார்? தினமும் ஏதாவதொன்று காதில் விழாமல் போவதில்லை. "சொல்லாதேடி" என்று சொன்னால் வேலைக்காரி கேட்பதில்லை. கர்ம சிரத்தையாக ஒவ்வொன்றையும் வந்து என்னிடம் சொல்லிவிட்டுப் போகிறாள். பாவம்! அன்புக்கு ஏங்குகிறது அவளுடைய நெஞ்சம்.

இருந்தாலும் இப்படி மணி மணியாகக் குழந்தைகளைப் பெற்ற கோமளவல்லி அம்மாள் இப்படி இருக்க வேண்டாம். எல்லோரிடமும் அன்பாக இருக்கக் கூடாதா? அதில் என்ன குறைந்து போய் விடும்?

இருள் கவிந்து கொண்டு வந்தது. வான முகப்பைப் பார்த்தேன். மேற்குத் திக்கில் கரிய மேகங்கள் படர்ந்திருந்தன. ஜில்லென்று காற்றடிக்க ஆரம்பித்தது.

"மீரா! மழை வரும் போலிருக்கிறது. உள்ளே போய்க் கதை சொல்கிறேன், வா" என்றேன்.

குழந்தையைத் தூக்கிக் கொண்டேன். சுலோசனா சைக்கிளில் வேகமாக வந்தாள்.

"எங்கே சுலோ போயிருந்தாய்? காரில் போவதுதானே? எதற்கு சைக்கிளில் போனாய்?" என்று கேட்டேன்.

"கார் இருந்தால் காரில் போயிருக்க மாட்டேனா? இன்று மாலதியின் வீட்டில் டீபார்ட்டி. அதற்குப் போயிருந்தேன். காரை ரமேஷ் எடுத்துக் கொண்டு எங்கேயோ தொலைந்து போய் விட்டான். 'என்னைக் கொண்டு விட்டு விட்டுப் போ!' என்று சொல்லியிருந்தேன். மறந்து விட்டான் போலிருக்கிறது" என்றாள்.

"பார்ட்டி ஜோராக நடந்ததா?"

"அதற்கென்ன? எல்லாப் பார்ட்டியையும் போலத்தான் இருந்தது. அது கிடக்கட்டும். உன்னை அப்பா ஏதாவது கேட்டாரா?"

"இதுவரையில் இல்லை. ஏன் சுலோ! அம்மாவுக்கு இதைப் பற்றித் தெரியுமா?" என்று கேட்டேன்.

"என்னிடம் ஒன்றும் அம்மா கேட்கவில்லை. ஆனால் தெரிந்திருக்கும் என்று தான் நினைக்கிறேன்."

"நீ மறுபடியும் வெளியில் போகப் போகிறாயா?" என்று கேட்டேன்.

"ஆமாம், லேடீஸ் கிளப் வருஷாந்திர விழா வருகிறது. அதற்குத் தலைமை வகிக்க யாரைக் கூப்பிடுவது என்று நிச்சயிப்பதற்காக இன்று மீட்டிங் நடக்கிறது. அதற்குப் போக வேண்டும். எதற்காகக் கேட்கிறாய்?"

"ஒன்றும் இல்லை. மறுபடியும் இதைப் பற்றிச் சிறிது நேரம் உன்னுடன் பேசலாமென்பதற்காகத் தான் கேட்டேன்."

"இதைப்பற்றிப் பேச இனிமேல் என்ன இருக்கிறது? ஈசுவர மூர்த்தியை நீ கல்யாணம் செய்து கொள்ளப் பிரியப்படவில்லை. ரங்கதுரை விஷயம் எப்படியிருந்தாலும் அக்கறையில்லை. அவர் திரும்பி வருவாரா? உன்னைக் கல்யாணம் செய்து கொள்வாரா, மாட்டாரா? இவற்றுக்கெல்லாம் இங்கு இடமேயில்லை. ஆனால் அப்பாவின் மனம் புண்படாதபடி நயமாகச் சொல்லு. அவ்வளவுதான்."

அதற்குள் ரமேஷ் வந்தார். அண்ணனும் தங்கையும் சண்டை பிடித்துக் கொண்டார்கள். ரமேஷ் தணிந்து போனார். லேடீஸ் கிளப்பில் அவளைக் கொண்டு போய் விடுவதாகக் கூறினார். சுலோசனா உடை மாற்றிக் கொள்ள வீட்டினுள்ளே ஓடினாள்.

சுலோசனாவும் ரமேஷும் வெளியில் சென்று விட்டார்கள். பாலு கண்மணி தூங்கி விட்டான். மீரா மறுபடியும் கதை சொல்லச் சொல்லிக் கேட்டாள்.

அவளுக்கு 'ட்ராயிங் ரூமில்' உட்கார்ந்து நரகாசுரன் கதை சொல்ல ஆரம்பித்தேன். சத்தியபாமா எப்படி கிருஷ்ணனுக்கு உதவியாக ரதத்தை ஓட்டினாள் என்றும், நரகாசுரனை சம்ஹரித்தாள் என்றும் சொன்னேன். தீமைகள் விலகுவதைப் பற்றிச் சொன்னாலே தைரியம் உண்டாகும் என்று அந்தக் கதையைச் சொன்னேன். மீரா மிக உற்சாகமாகக் கேட்டுக் கொண்டிருந்தாள். சத்தியபாமா ரதம் ஓட்டியதை நான் விவரித்துச் சொன்னபோது அவளுக்கு ஒரே குதூகலமாக இருந்தது. உலக மாதாவான தேவியைமனத்தில்நினைத்துக்கொண்டு என் துயரங்கள் தீரவேண்டும் என்று பிரார்த்தித்தேன். (தொடரும்)

T.H. 8963.





# பரம்பரை குணமேன்மை



முதியவர்களிடமிருந்து சிறந்தவை களையே உபயோகிக்கும் குணம் நமக்குக் கிடைத்திருக்கிறது. டாம்கோ பரிமள கூந்தல் தேங்காய் எண்ணெ கூந்தலை மிருதுவாயும் பளபளப்பாயும் வைத்துக் கொள்வ தற்கு இன்றியமையாதது.

## டாம்கோ




## பரிமள கூந்தல் தேங்காய் எண்ணெயும் ஷாம்பூவும்

டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி, லிமிடெட்

**இந்திய மூலதனத்தைக் கொண்டு, இந்திய நிர்வாகத்தில், இந்தியாவிலேயே தயாரிக்கப்படுவது**

# பற்களைப் பரிசுத்தமாக்கும் மக்ளீன்ஸ்!

இம் மூன்று கோப்பைகளைப் பற்கள் என பாவனை செய்வீர்களானல் இவைகளின் வெளிப்புறம் மற்றும் உட்புறத்தைத் தவிர, ஊத்தை சேர்ந்து அபாயகரமான கிருமிகள் வசிக்கும் இடுக்குகளை சுத்தம் செய்வது மிகக் கடினம்.



மக்ளீன்ஸ் பற்களுக்கு இடையிலுள்ள சந்துகளை துப்புரவாக சுத்தம் செய்து

## ஊத்தையை அகற்ற சிறந்த சாதனம்

பற்களின் மேல் படிந்திருக்கும் பாசியில் லிப்பாயிட்ஸ் என்று சொல்லப்படும் அசுத்தம் கலந்துள்ளது. லிப்பாயிட்டை எளிதில் சுத்தம் செய்யமுடியாது. இவை தவருமல் சுத்தம் செய்யப்பட வேண்டும். இல்லையேல் இவைகளின் உட்புறத்தில் தங்கும் திராவகச்சத்து பற்களை அரித்தே விடுகின்றது. இத்தகைய லிப்பாயிட்ஸை அறவே அகற்ற ஒரே வழிதான் உண்டு. அதாவது இதை கரையச் செய்யவேண்டும். லிப்பாயிட்ஸை கரைக்கக்கூடிய விசேஷமான திரவம் மக்ளீன்ஸில் இருப்பதால், வாயில் நுரை கூட்டாமல் மக்ளீன்ஸ் லிப்பாயிட்ஸை லகுவாக ஜாக்கிரதையுடன் துரிதமாக கரையச்செய்கின்றது. பற்களின் சிதைவைத் தவிர்க்க இது மிகவும் முக்கியம்.

மக்ளீன்ஸ் பற்பசையை தினந்தோறும் இரு முறை உபயோகியுங்கள். பற்கள் வெண்மையாகவும், ஆரோக்கியத்துடனும் விளங்கும்.

க்ளோரோபில் சேர்ந்த வகையும் கிடைக்கும்




MTY-41 TAM



# தயநாதம்

டி.எஸ்.கோதண்டராமன்

அதிகாலையில் ஐந்து மணிக்கு வீசிய இளந் தென்றலில் வேய்ங்குழலின் நாதமும் மிதந்து வந்தது. மாடியிலிருந்த என் அறையில் அரைத் தூக்கத்தில் ஆழ்ந்திருந்த நான் திடீரென்று கண்விழித்துக் கொண்டேன். மெல்லிய இழைகளாகப் பரவத் தொடங்கிய புல்லாங்குழலின் ஒலி, கனத்துப் பேச ஆரம்பித்தது. பூபாளத்தில் ஒரு பாட்டு, தேனொழுக்கைப் போல் குழலிலிருந்து நழுவத் தொடங்கிற்று.

படுக்கையில் எழுந்து உட்கார்ந்து, கண்களைக் கசக்கி, சோம்பல் முறித்து, என்னைச் சுறுசுறுப் பாக்கிக் கொண்டேன். ஜன்னலிலிருந்து உள்ளே புகுந்த இனிய காற்று பூபாளத்தைத் தாங்கி வந்தது.

இந்த நேரத்தில் புல்லாங்குழல் நாதம் எங்கிருந்து கிளம்புகிறது!

ரேடியோவா!

இருக்க முடியாது என்று எண்ணியபடியே ஜன்னலருகே சென்று இரும்புக் கம்பிகளைப் பிடித்துக்கொண்டு உன்னிப்பாகக் கேட்டேன். பக்கத்து வீட்டில் யாரோ புல்லாங்குழல் வாசிக்கிறார்கள் என்பது தெளிவாகப் புரிந்தது.

பூபாளம் முடிவுற்று ஹம்ஸத்வனி ஆரம்பமாகியது. ஹம்ஸத்வனியின் அனாயாசமான 'எடுப்பு' என்னை அயர்ந்து போகச் செய்தது. இவ்வளவு லாகவமாக எடுப்பு எடுக்கும் புல்லாங்குழல்காரர் நிச்சயம் சாதகம் செய்பவராக இருக்க முடியாது. கைதேர்ந்த வித்துவானாகத்தான் இருக்க வேண்டும்.

"ஏன் மீனா, அதற்குள் எழுந்து விட்டாய்!" —அறையின் வாயிற்படியருகே வந்து நின்ற மன்னி சிரித்தபடியே கேட்டாள்.

"இப்போது எழுந்திருக்காமல் பின் எப்போது எழுந்திருப்பதாம்!"

"வழக்கப்படி ஆறரை மணிக்கு!...பக்கத்து வீட்டுப் புல்லாங்குழல் அப்படியே உன்னை ஈர்த்து இழுத்து விட்டதாக்கும்!..."

"ஆமாம் மன்னி, பக்கத்து வீட்டுக்கு யாரேனும் புதிதாகக் குடி வந்திருக்கிறார்களா!"

"ஆமாம்."

"புல்லாங்குழல் வித்வானா!"

"வித்துவானுமில்லை, ஒருவனுமில்லை. ஒரு வயதான அம்மாளுடன் ஒரு பையன் இருக்கிறான். அவன்தான் ஊதித் தள்ளுகிறான்!"

எனக்குக் கோபம் பொங்கிக் கொண்டு வந்தது. ஊதித் தள்ளுகிறானாம், அவன்! எவ்வளவு இனிமையாக வாசிக்கிறான்!

மன்னிக்கு சங்கீதத்தில் அவ்வளவாகப் பரிச்சயமில்லை. சுமாராகப் பாடுவாள். வீட்டில் கல்யாணம், கார்த்திகை என்றால் வீட்டின் முதல் நாட்டுப் பெண்ணாக லட்சணமாக இரண்டு பாட்டுகள் பாடுவதோடு சரி.

ஆனால், எனக்குப் பாட்டு, சங்கீதம் என்றால் உயிர்! இல்லாவிட்டால், ஆறாவது பாரம் படித்து முடித்த பின்னும் இசைக் கல்லூரியில் சேர வேண்டும் என்பதற்காகச் சிதம்பரத்துக்கு வந்திருப்பேனா!

அப்பா, எவ்வளவோ சொல்லிப் பார்த்தார். அம்மாவும் பாடமாகப் படித்துப் பார்த்தாள். ஆனால், நான் ஒன்றுக்காவது மசியவில்லை.

எனக்கு இயற்கையிலேயே சங்கீத ஞானம் இருக்கிறதாம். என் வாழ்க்கைக்கு அது போதுமானதுதானாம். நான் கச்சேரி செய்து வயிறு வளர்க்க வேண்டிய அவசியம் இல்லையாம்!

பாவம், பெற்றோர்கள்! கிராமவாசிகளான அவர்கள் சங்கீதத்தைப் பற்றி அறிந்தது அவ்வளவுதான்.

நல்ல வேளையாக, சிதம்பரத்தில் வேலை பார்த்துக் கொண்டிருந்த அண்ணா வந்தான், எனக்கு ஆதரவு அளிக்க. விடுமுறை முடிந்து அண்ணா புறப்பட்டபோது எங்களூர்ப் புகை வண்டி நிலையத்தில் சிதம்பரத்துக்கு மூன்று டிக்கட்டுகள் வாங்கினான்—அண்ணா, மன்னி, நான் ஆகிய மூவருக்குமாக.

"மீனா! இன்னும் நீ பல் விளக்கவில்லையா!... புல்லாங்குழல் நின்று கால் மணி நேரத்துக்கு மேலாகிறதே!......"

சிந்தனைக்கு முற்றுப்புள்ளி வைத்து விட்டு ஜன்னலிலிருந்து நகர்ந்து வந்து மன்னியைக் கவனித்தேன். ஸ்நானம் செய்து விட்டு மடிப் புடவை உடுத்தியிருந்தாள். தலையில் இருந்த கேசம், பளீரிடும் மைசூர் கறுப்பு ஸில்க்கைப் போலத் தலையின் பின்னே பரந்து, அடியில்

குறுகி யிருந்தது. நெற்றியில் நாகரிகம் அனுமதிக்கும் அளவுக்குக் குங்குமப் பொட்டு. மன்னி, நல்ல அழகிதான்.

"இதோ, வந்து விடுகிறேன், மன்னி......புல்லாங்குழல் நின்றது எனக்கும் தெரியும்! ஏதேதோ சிந்தனைகள்......"

கையில் பிரஷ்ஷையும் பற்பசையையும் எடுத்துச் செல்லும் என்னை நிறைமனத்துடன் மன்னி பார்த்துக் கொண்டிருந்தாள். நான் துள்ளிக் கொண்டே மாடிப் படிகளில் இறங்கியபோது அவள் வதனத்தில் குறுநகை பூத்து நின்றதையும் நான் கவனிக்கத் தவறவில்லை.

மன்னி, பெயரளவுக்குத்தான் மன்னி! உண்மையில், அவள் என் அந்தரங்கத் தோழி!

என்னைவிட இரண்டு வயது அதிகமிருக்கும், அவளுக்கு. எனக்குப் பிடித்தமான சுபாவம் கொண்டவள். நல்ல பண்பாடுடைய பரம்பரையில் உதித்தவள். பிறரிடம் உள்ள நற்குணங்களைப் போற்றும் தன்மையும் அவளிடம் இருந்தது. இவை போதாதா, நானும் மன்னியும் அளவிலா அன்புடன் பழகுவதற்கு!

*　　　*　　　*

மறுநாள் காலை ஐந்து மணிக்கு எனக்குத் தானாகவே விழிப்பு வந்து விட்டது. நான் வெகு ஆவலுடன் எதிர் பார்த்ததைப்போலவே, சிறிது நேரத்தில் புல்லாங்குழலின் நாதமும் அடுத்த வீட்டிலிருந்து பரவத் தொடங்கியது.



முன் தினம் பாடிய இரண்டொரு ராகங்கள் முதலில் பாடப்பட்டன. பின், திடீரென்று ஒரு திருப்பம். 'இது இன்ன ராகம்' என்று பெயரிட்டழைக்க முடியாதபடி, சங்கீத வரம்புகளுக்கு உட்படாத ஒலி அலைகள் குழலிலிருந்து வெளிக் கிளம்பின. ஆகா, அந்தப்பெயர்கொடுக்க முடியாத ராகங்களின் அமைப்பிலே, வாசிப்பிலேதான் என்ன துள்ளல்! எவ்வளவு அபூர்வமான 'பிடி'கள்! எவ்வளவு நயமான 'குதிப்பு'கள்!

அன்றைய தினம் காலை, ஒன்பதரை மணி. அண்ணா அலுவலகத்துக்குக் கிளம்பினான். மன்னியும் நானும் வாசல் வரை சென்று வழியனுப்பி விட்டு வருவது வழக்கம். ஆனால், அன்றைய தினம் மன்னி உடன் வரவில்லை. கொல்லைப்புறத்தில் வேலைக்காரிக்கு உத்தரவு இட்டுக் கொண்டிருந்தாள்.

"வரட்டுமா, மீனா!"

அண்ணாவின் பேச்சுக்குப் பதிலாகத் தலையசைத்து விட்டு வாசலில் சிறிது நேரம் தயங்கி நின்றேன்.

ஒரு வாலிபர் நின்று கொண்டிருந்தார்! இருபத்து நான்கு, இருபத்தைந்து வயதிருக்கும். சந்தனக் கலர்த் துணியில் கோட்டும் முழுக் கால் சட்டையும் அணிந்திருந்தார். சிவப்பு, மஞ்சள் நிறப் பூக்களிட்ட கரு நீல 'டை' கழுத்தை அலங்கரித்துக் கொண்டிருந்தது. படியப்படிய வாரி விடப்பட்ட கிராப்புத் தலை. காலில் பளபளக்கும் பூட்ஸ்கள். கையில், கையடங்கும் அளவுக்கு ஒரு புத்தகம்.

இந்தப் 'பையன்' தானா, புல்லாங்குழல் வாசிப்பவர்! இவரைப் பார்த்தால் சங்கீத வித்வானைத் தோன்றவும் இல்லை. எந்த அலுவலகத்தில் வேலை பார்க்கிறாரோ!

தெருக்கோடியில் அவர் உருவம் மறைந்ததும் மெல்ல நடந்து வீட்டுக்குள் வந்தேன்.

*　　　*　　　*

ஒரு வாரம் சென்று, ஒரு நாள் மாலை. அலுவலகத்திலிருந்து திரும்பி வருவதற்குச் சற்று நேரமாகும் என்று சொல்லியிருந்தான், அண்ணா. ஆகவே, நானும் மன்னியும் கோவிலுக்குச் சென்று நடராஜரைத் தரிசித்து விட்டுத் திரும்பினோம். அடுத்த வீட்டைக் கடந்துதான் எங்கள் வீட்டுக்கு வரவேண்டும். அடுத்த வீடு வந்ததும் என் உள்ளத்தில் ஒரு உணர்ச்சி சட்டென்று திரும்பிப் பார்த்தேன். வாசலில் ஒருவரும் காணப்படவில்லை. ஆனால், மின் விளக்கின் ஒளியில், வாசலின் முன்புறத்தில் மாட்டப்பட்டிருந்த 'பெயர்ப் பலகை' கண்களில் பட்டது. கண்கள் தாமாகவே பெயரைப் பார்த்து வாசித்துக் கொண்டன.

"கே. எம். சுந்தரராமன் பி.ஏ. (ஆனர்ஸ்)" என் மனம், பெயரைத் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டது. எவ்வளவு அழகான பெயர்! பெயரைப் போலவே தோற்றம்! தோற்றத்தைப் போலவே சங்கீதம்!......

"மீனா, எங்கே ஞாபகம் உனக்கு! வீடு வந்து விட்டதைக் கூடக் கவனிக்காமல் போய்க் கொண்டே இருக்கிறாயே!"...மன்னியின் வார்த்தைகள் என்னைத் தடுத்து நிறுத்தி வீட்டுக்கு அழைத்தன! ஆழ்ந்த சிந்தனையில் மிதக்கும் எனக்கு எங்கள் வீடு வந்து விட்டது கூடத்தெரியாததில் வியப்பு என்ன இருக்கிறது!

*　　　*　　　*

"ஏன் அண்ணா, அடுத்த வீட்டில் ஒரு 'பையன்' புல்லாங்குழல் வாசிக்கிறானே......" என்று, வேண்டுமென்றே ஏக வசனத்தில் ஒரு நாள் ஆரம்பித்தேன்.

"பையனா!... அவர் காதில் விழுந்தால் சண்டைக்கு வந்து விடுவார்! இங்கேயுள்ள கல்லூரியில் தத்துவத்துறை விரிவுரையாளரல்லவா, அவர்!" என்றான் அண்ணா.

என் நெஞ்சம் புளகித்தது. சுந்தரராமன், பி. ஏ. (ஆனர்ஸ்!)... அவர் தத்துவத்துறை விரிவுரையாளர்!......

"என்ன பலத்த யோசனையில் ஆழ்ந்து விட்டாய், மீனா!"

"ஒன்றுமில்லை, அண்ணா! அவர்......"

மன்னி இடையில் புகுந்தாள். "ஏன் மீனா, மறைக்கிறாய்? ... உண்மையை மறைக்காமல் சொல்லி விடட்டுமா!" என்று சிரிப்புடன் வார்த்தைகளைக் கலந்து பேசினாள்.

"சொல்லேன்! எனக்கு என்ன அண்ணாவிடம் பயமா!...... அவர் புல்லாங்குழல் வாசிப்பது ரொம்பப் பிரமாதமாக இருக்கிறது என்று சொல்லத்தான் ஆரம்பித்தேன்..."

"தப்பித்துக் கொள்ளப் பார்க்கிறாயே!" என்று என்னைப் பார்த்துக் கூறி விட்டு, அண்ணாவை நோக்கி மன்னி சொன்னாள்: "அவர் இன்னும் கிருஹஸ்தராக மாறவில்லை போலிருக்கிறதே!"

அண்ணா சிரித்தான். "ஓஹோ, அதனால்தான் அவ்வளவு கவலையுடன் மீனா விசாரித்தாளா!"

"போ, அண்ணா, மன்னி ஏதோ கதை அளக்கிறாள். அதை நம்புகிறாயே, நீ!..."

"மீனா! எனக்குத் தெரியாதா உன் உள்ளம்!" என்று ஆரம்பித்தாள் மன்னி.

"எதைக் கண்டு விட்டாய், மன்னி!" என்று கேட்டேன்.

"எதையா! உன் கண்ணும் கருத்தும் அடுத்த வீட்டுப் 'பையனை', இல்லை, இல்லை தத்துவ விரிவுரையாளரைச் சுற்றிச் சுற்றி வருவதை!"



ஏப்ரல் 10உ கோயமுத்தூர். ஆர். எஸ். புரம் ஸ்ரீ குருகுஹகான சபையின் ஆதரவில் குமாரிகள் சசி-கலா குழுவினரின் பரதநாட்டியம் சிறப்பாக நடைபெற்றது. குமாரிகளுக்கு நல்ல முறையில் பரதநாட்டியம் பயிற்றுவித்த சென்னை, திருவல்லிக்கேணி பரதகலா நிலையத்தின் தலைவி ஸ்ரீமதி எம். கே. செல்வமணியையும், குமாரிகள் சசி-கலா ஆகியவர்களையும் மேலே படத்தில் காணலாம்.

நான் பதில் ஏதும் பேசவில்லை. மன்னியின் கேலிச் சிரிப்பு இன்னும் ஓயவில்லை. கோபத்தையும் வெட்கத்தையும் அடக்கிக் கொண்டு கிளம்பிய மகிழ்ச்சி, என்னுடைய வாயைத் திறக்க முடியாமல் பூட்டி விட்டது!

* * *

இப்போதெல்லாம் காலையில் ஐந்து மணிக்கே படுக்கையிலிருந்து எழுந்து விடுகிறேன் நான். எழுந்ததும், அறையின் ஜன்னலருகே வந்து நிற்பேன். அடுத்த வீட்டிலிருந்து புல்லாங்குழலின் நாதம்—திருவாளர் கே. எம். சுந்தரராமன் பி. ஏ. (ஆனர்ஸ்) அவர்கள் வாசிக்கும் புல்லாங்குழலின் நாதம்—என்னை முகமன் கூறி வரவேற்கும்!

என் இனிய குரலை அடுத்த வீட்டு வேய்ங்குழலுடன் இணைய விடுவேன். அந்த நாத இழையிலேதான் என்ன குளுமை! என்ன அபாரக் கவர்ச்சி!

சங்கீதத்தைப் போலவே வாழ்க்கையிலும் நானும் அவரும் இணைந்து, இழைந்து...

இதற்கு மேல் நினைப்பதற்குள் எனக்கு வெட்கம் வந்து விடும்! என் காரணமற்ற வெட்கத்தை உணர்ந்து நானே இலேசாகச் சிரித்துக் கொள்ளுவேன்!

ஆனால், அன்று......!

அன்றைய தினம் புது மாதிரியான அனுபவம் கிட்டுமென்று நான் எதிர்பார்க்கவேயில்லை. வழக்கமாக வாசிக்கும் சில ராகங்களை அவர் வாசித்தார். பின்னர், புரிபடாத மனங்கவரும் ராகங்களும் வழக்கம் போலவே வெளிவந்தன. கடைசியாக, ஹிந்தோளத்தில் 'பஜரே கோபாலம்' ஆரம்பித்த போது என் உள்ளத்தில் ஆனந்தம் வழிந்தோடியது. கடந்த ஒரு மாதமாக நானும் அவர் சங்கீதத்தைப் பருகிக் கொண்டுதான் வருகிறேன். ஆனால் ஹிந்தோளத்தைச் சுவைக்கும் பாக்கியம் மட்டும் எனக்குக் கிடைத்ததேயில்லை.

பாட்டு முடிந்ததும், "சபாஷ்!" என்ற வார்த்தை என்னையறியாமலே என்னிடமிருந்து வெளிப்பட்டது.

"என்ன சபாஷ்!" என்று கேட்டுக் கொண்டே மன்னி வந்தாள்.

"மன்னி, இன்றைய தினம் அவருடைய வாசிப்பு பிரமாதம், போங்கள்! இவ்வளவு அருமையான சங்கீதத்தை வைத்துக் கொண்டு குடத்து விளக்குப் போல, ஏன் வீட்டுக்குள்ளேயே அடைந்து கிடக்கிறார்!"

"எனக்கு எப்படித் தெரிய முடியும், மீனா!... அவரையே போய்க் கேட்டுவிட்டு வா!"

மன்னி அங்கிருந்து போய் விட்டாள். சிந்தனையில் ஆழ்ந்தபடியே நானும் மாடியிலிருந்து கீழே இறங்கி வந்தேன்.

* * *

என் அலங்காரம் எனக்கு அவ்வளவாகத் திருப்தியளிக்க வில்லை. இருந்த போதிலும், 'இது போதும்' என்றே எனக்குத் தோன்றியது. அடுத்த வீட்டுக்குப் போய், "ஸார், இன்றைய தினம் உங்கள் ஹிந்தோள ராகம்—முதல் தரம், அபாரம், பிரமாதம்!" என்று கூறி விட்டு வருவதற்கு இதைவிட என்ன அலங்காரம் வேண்டிக் கிடக்கிறது!

எங்கள் வீட்டு வாசல் வரும் வரை நான் வெகு தீர்மானமாகத்தான் இருந்தேன். அவர் நிறையப் படித்தவர். நானும் படித்த பெண். அவரிடம் சென்று ஒரு வார்த்தை பேசிவிட்டு வரக் கூடவா எனக்குத் தைரியமில்லை! அப்படி



"இந்தப் பலூனை வாங்காட்டிப் போங்க; அதன் மகிமை வெடிச்சாத் தான் தெரியும்."
"என்ன?"
"வெடிச்சா அந்த மாதிரி சத்தம் நீங்க எங்கேயும் கேட்டிருக்க மாட்டீங்க!"

---

என்ன, எவரும் செய்யக் கூடாத காரியத்தை நான் செய்கிறேன்!

ஆனால், அடுத்த வீட்டுப் பக்கம் காலடி எடுத்து வைக்க ஆரம்பித்த போது என் நடையின் வேகம் திடீரென்று குறைந்தது. என்னுடைய தைரியத்தை எல்லாம் ஒன்று திரட்டி, விடுவிடென்று அடுத்த வீட்டுக்குள் நுழைந்து விட்டேன். ரொம்பவும் மீறிப் போனால், அந்த வீட்டு அம்மாளைப் பார்த்துச் சிநேகம் பிடித்துக் கொள்வதற்காக வந்ததாகச் சொன்னால் போயிற்று!...

"யாரைப் பார்க்க வேண்டும்!" — முன் அறையிலிருந்து ஒரு ஆண் குரல் கேட்டது. அவர்தான் சுந்தரராமன்!

"......ம்! நான் பக்கத்து வீட்டிலிருக்கிறேன்..." என்றேன் தயங்கியபடியே.

"தெரியுமே! நானும் பல தடவைகள் கவனித்திருக்கிறேன்..."

பொங்கி எழுந்த நாணத்தைச் சமாளித்துக் கொண்டு பேசினேன்.

"தினந்தோறும் புல்லாங்குழல் வாசிப்பைக் கேட்டுக் கொண்டு வருகிறேன். மிகுந்த அனுபவசாலியின் வாசிப்பைப் போல அமைதியாக அபாரமாக இருக்கின்றதேயன்றி..."

"...முறைப்படி பயிற்சி பெறுதவனின் வாசிப்பு என்று எவருமே சொல்ல முடியாது! நின்று கொண்டிருக்கிறீர்களே! இதில் உட்காரலாமே!......"

அறையில், அவர் நாற்காலிக்கு எதிரே இருந்த நாற்காலியைக் காண்பித்தார். நான் அமர்ந்து கொண்டேன்.

"வெகு நாட்களாகவே சொந்த முறையில் பயிற்சி நடைபெற்று வருகிறது என்று நினைக்கிறேன்!" என்றேன்.

"ஆமாம், பிறவியிலேயே சங்கீதத்தில் எனக்கு ஒரு மோகம்..."

நான் ஏதோ சொல்ல வாயெடுக்கு முன் 'சுந்தரம்' என்று அழைத்துக் கொண்டே அவருடைய தாயார் வந்தார். வந்தவர், என்னை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தார்.

"என்ன அம்மா, இது! வீட்டுக்கு வந்தவரை 'வா' என்று அழைக்காமல் இப்படிப் பார்க்கிறாய்! அடுத்த வீட்டுப் பெண்ணம்மா!"

"மேலண்டை வீட்டுப் பெண்ணா! வாம்மா. வா! ரொம்ப நன்றாகப் பாடுகிறாயே, நீ...நீ... உன் மாடி அறையிலிருந்து பாடுவது எங்கள் காதில் விழும்..."

"பாட்டு என்றால் எப்படிப்பட்ட பாட்டு! ஆகா!" என்று பரவசத்துடன் கூறினார், சுந்தரராமன்.

"ஆமாம், அடிக்கடி இவன் சொல்லுவான், அபூர்வமாக உனக்குக் குரல் அமைந்திருக்கிறது என்று!"

நான் திக்கு முக்காடிப் போனேன். என்னை அவரும் கவனித்துக் கொண்டேயிருந்திருக்கிறார்! அவருடைய அன்னையும் என்னைப் பற்றிப் பெருமையாகப் பேசுகிறார்!

"ஏது, என்னால் தாங்க முடியாத அளவுக்கு எனக்குப் புகழ்மாலை சூட்டி விடுவீர்கள்போலிருக்கிறதே! நான் கேட்க வந்ததை மறந்தே விட்டேன். உங்கள் பிள்ளை ஏன் தன் திறமையை வெளி உலகுக்குக் கொண்டு வராமல் மூடி வைத்திருக்கிறார்!"

பெரிய அம்மாளிடமிருந்து துக்கத்தைச் சுமந்து, கனத்த பெருமூச்சு வெளிவந்தது.

நான் சுந்தரராமனை நோக்கிக் கூறினேன். "பார்த்தீர்களா, உங்கள் தாயார் எவ்வளவு வருத்தப்படுகிறார் என்பதை! இனியாவது உங்கள் திறமையை......"

"என் திறமையையா! நானா! மன்னிக்க வேண்டும். உங்களுக்கு உண்மை தெரிந்திருக்குமென்று நினைத்தேன். புல்லாங்குழல் வாசிப்பது நானல்ல; என் தம்பி!"

"உங்கள் தம்பியா! இந்த வீட்டில் உங்கள் தாயாரையும் உங்களையும்தானே நான் கண்டிருக்கிறேன்" என்றேன்.

"அவன் வெளியே கிளம்புவதில்லை. அதோ, அந்த மூலையில் உட்கார்ந்திருக்கிறான் பாருங்கள்!" என்றார்.

பதினைந்து வயதுப் பையன் ஒருவன், கூடத்தின் ஒரு மூலையில் எங்கோ பார்த்தபடி ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருந்தான்.

"அவர் ஏன் வெளியே கிளம்புவதில்லை!"

"அவன்...அவன்...பிறவிக் குருடு..."

என் இதயம் இருண்டது. நெஞ்சில் வலி தாங்க முடியவில்லை.

சே, இயற்கைதான் எத்தனை விசித்திரமானது! அருமையான சங்கீதத்தைக் கொண்டு போய் எங்கே வைத்திருக்கிறது!...

என் இதயத்தில் இன்ப மயமான அமர நாதத்தைப் பொங்கி எழச் செய்து கொண்டிருந்த என் ஆசை, மங்கி மடிந்து அடங்கிய போது உண்டான சோகம், ஒரு ஆழ்ந்த பெருமூச்சாகப் பரிணமித்தது.

"நான் வருகிறேன்..."

சுந்தரராமனின் மௌனமான தலையசைப்பு எனக்கு விடையளித்தது.

# படித்துப்பாருங்கள்

## கந்தக் கதம்பம் (பலர் பாடியது)

முருகப் பெருமானின் தோத்திர நூல்களுள் மிகத் தொன்மையானது திருமுருகாற்றுப் படை. அடுத்து, திருப்புகழ், கந்தரலங்காரம், கந்தரநுபூதி முதலியவற்றைக் கூறலாம். மேற்கூறிய நூல்களில் உள்ள தமிழ்ப் பாடல்கள் பக்திச் சுவையில் சிறந்து நிற்பவை. பாடுவோரையும் கேட்போரையும் முருகனடியார்களாக்கும் தன்மை வாய்ந்தவை. அத்தகைய தோத்திர நூல்கள் பலவற்றின் தொகுப்பே இந்நூல்.

பாடல்களின் பொருள் நன்கு விளங்குமாறு பதம்பிரித்து, அழகாக, பிழையின்றி வெளியிட்டிருப்பது இந்நூலின் தனிச் சிறப்பாகும். பகழிக் கூத்தர், ஸ்ரீ தண்டபாணி சுவாமிகள், மகாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை, அந்தகக் கவி முதலிய மூது பெரும் புலவர்கள் இயற்றிய பிள்ளைத் தமிழ்ப் பாடல்களும், மற்றும் பல புலவர்களின் பிள்ளைத் தமிழ்க் கவிதைத் தொகுப்புகளும் இந் நூலில் சேர்க்கப்பட்டிருப்பது பாராட்டுக்குரிய அம்சம். பல தல புராணங்களிலிருந்து முருகன் துதிப் பாடல்களைத் திரட்டி இந் நூல்களில் சேர்த்திருக்கிறார்கள். பாடும் பணியே பணியாகக் கொண்டு பக்திப் பெருக்கில் அகங்கனிந்து ஈடுபட விரும்புவோர்க்கு இந் நூல் மிகவும் இன்றியமையாததாகும். ஆறு படை வீட்டின் திருப்புகழ்ப் பாடல்களும் இதில் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

பிரசுரம்: அமிர்தவசனி பிரசுராலயம், 54, பந்தர் தெரு, சென்னை-1; விலை: ரூ. 1-0-0

## கதிர்காம யாத்திரைப் பாராயணப் பிரபந்தம்

முத்தமிழால் வைதாரையும் வாழ வைக்கும் முருகப் பெருமானுடைய வழிபாடு கடல் கடந்த பிரதேசங்களுக்கும் பரவிப் பல்லாண்டுகளாகச் செழித்து வந்திருக்கிறது. கடல் கடந்து தொலை தூரத்தில், கனுந்தகாரமான வனாந்தரத்தில், கதிர் காம க்ஷேத்திரம் இருக்கிறது. அங்கு குன்று தோறும் குமரன் கோயில் கொண்டெழுந்தருளியுள்ளான். கலியுக வரதனாகிய கந்தன் கழலிணையின் பெருமையை அறியாதார் யார்! யாழ்ப்பாணத்துத் தமிழன்பர் திரு சின்னையா அவர்கள் சுவை மிகு தீந்தமிழில் கதிர்காமத்தில் உறையும் வடிவேற் பெருமானுக்குப் பாமாலை புனைந்துள்ளார். பாமாலையில்,

> ''காடுசூழ் கதிர் காமத்திற் காவடி
> ஆடுவோர்களும் ஆடி அவன் புகழ்
> பாடுவோர்களும் பாடி அவன் கழல்
> சூடுவோர்களும் எண்ணில் தொகையரே''

என்னும் இது போன்ற பல சுவை மிகு தமிழ்ப் பாடல்கள் நிறைந்திருக்கின்றன.

இயற்றியவர்: சின்னையா, கச்சாய், கொடிகாமம், யாழ்ப்பாணம்; (இலவச வெளியீடு.)

## ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம் கிஷ்கிந்தா காண்டம்

மகா காவியமான வால்மீகி ராமாயணத்தில், நாலாவது காண்டமாகிய இப்பிரிவு, பதியைப் பிரிந்து பகைவன் நாட்டில் சிறை வைக்கப்பட்ட பத்தினியின் துயரத்துக்கு ஓர் எல்லையைக் காண்பிக்கிறது; நட்பின் துணையைக் கொண்டு நாயகியைத் தேடும் நல்ல வாய்ப்பை ஸ்ரீ ராமனுக்குக் கிடைக்கச் செய்கிறது; துஷ்டனான வாலியை வதைக்கச் செய்து, சுக்கிரீவனின் நீண்ட நாள் பீதியைப் போக்கச் செய்கிறது. வாயு புத்திரனும் மகா புத்திமானும், வானரர்களுக்குள் சிறந்தவனும், பகைவன் நாட்டுக்குச் சென்று சீதா தேவியைக் கண்டு அவள் துயரந் துடைத்து லங்காபுரியைக் கொளுத்தி விட்டுத் திரும்பிய மகாவீரனுமான அநுமானைப் பற்றிய வரலாறு இந்தக் காண்டத்தில் சொல்லப்படுகிறது.

வால்மீகி ராமாயணத்தின் ஏனைய காண்டங்களை நல்ல தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டு உதவியிருக்கும் ஸ்ரீ டி. எஸ். ராகவன் அவர்கள்தான் இக் காண்டத்தையும் மொழிபெயர்த்திருக்கிறார். வாலி வதத்தைப் பற்றிய சம்வாத விஷயங்களைத் தெளிவாக எழுதி விளக்கியிருக்கிறார். வடமொழியில் பரிச்சயம் இல்லாதவர்கள் இம் மொழிபெயர்ப்பைப் படித்தால் அந்தக் குறை அடியுடன் நீங்கி விட்டதாக உணருவார்கள்.

துணைநலம் ஆக்கம் தரும், நட்பின் அறைகூவல், பிழை பொறுக்கா உடன் பிறந்தான், புல்லறிவாளன் புறங்கூவல், அறவுரையும் அறிவுரையும்—முதலிய இக்காண்டத்தின் உட்பிரிவுகள் ஆசிரியருக்குள்ள தமிழ் ஆர்வத்தையும் தேர்ச்சியையும் சிறப்பாக எடுத்துக் காட்டுகின்றன.

மொழி பெயர்த்தவர்: டி. எஸ். ராகவன்; கிடைக்கும் இடம்: 21, மந்தை வெளித்தெரு, சென்னை—28; விலை: ரூ. 2—8—0.

## பாரத் கணித பஞ்சாங்கம் (மன்மத வருஷம்)

வருஷப் பிறப்பு பலன், கிரஹ சஞ்சார பலன், கிரஹணங்கள், பஞ்சாங்க விளக்கம், 12 மாதப் பஞ்சாங்கம், சுப முகூர்த்தங்கள், விவாகப் பொருத்தங்கள், 12 ராசிகளின் நக்ஷத்திர நிலை முதலிய சகல விவரங்களும் கொண்டு இந்தப் பஞ்சாங்கம், சென்னை, புரசை பிரஹத் ஜோதிஷ நிலையத்தைச் சேர்ந்த ஸ்ரீ எல். வி. எஸ். மணி, ஜோதிஷபானு பண்டிட் இ. எஸ். கே. சுவாமி இவர்களால் கணிக்கப்பட்டுப் பிரசுரிக்கப் பட்டிருக்கிறது. காமகோடி பீடம் சங்கராச்சாரிய ஸ்வாமிகள் இப் பஞ்சாங்கத்தை அங்கீகரித்திருக்கிறார்கள்.

கிடைக்குமிடம்: பிரஹத் ஜோதிஷ நிலையம், 71, அக்ரஹாரம், புரசைவாக்கம், சென்னை-7. பஞ்சாங்கத்தின் விலை: அணா ஆறு.

# ஆரோக்கிய வாழ்வு

ஸீதாலக்ஷ்மி குமாரசாமி

## 16. விஞ்ஞானிகளின் தீர்ப்பு

நாம் சாப்பிடும் பொழுது வாய்க்கு ருசி ஒன்றைத்தான் பிரதானமாகக் கருதுகிறோம். நாம் சாப்பிடும் ஆகாரங்களினால் ஏதாவது பலன் உண்டா என்று நாம் சிந்தித்துப் பார்ப்பதில்லை. அப்படிச் சிந்தித்துப் பார்ப்பதற்கு வேண்டிய அறிவும் நம்மிடம் இல்லை. இதற்கெல்லாம் காரணம் இந்தக் காலத்து நாகரிகமும், கல்வி முறையும்தான்.

நம்முடைய கல்வி முறையில் ஆகாரத்தைப் பற்றியும் அதை எப்படிச் சாப்பிட வேண்டும் என்பதைப் பற்றியும் மக்களுக்கு எடுத்துச் சொல்லும் நல்ல புத்தகங்கள் இல்லை. அப்படி இருக்கும் புத்தகங்களும் வெறும் ஏட்டுச்சுரைக்காயாகவே இருக்கின்றன. ஆகவே பெற்றோர்கள்தான் பிள்ளைகளுக்குச் சத்துள்ள ஆகாரத்தைப் பற்றிச் சொல்லிக் கொடுக்க வேண்டும். சக்கையில்தான் சத்து இருக்கிறது என்பதைத் தெளிவாக விளக்கிக் கூற வேண்டும்.



எதையும் வேக வைத்துச் சாப்பிடுவதை விடப் பச்சையாகச் சாப்பிட்டால் ஏராளமான வைட்டமின் சத்துக்கள் கிடைக்கும். இதைப் பல விஞ்ஞானிகள் பல ஆராய்ச்சிகள் மூலமாக நிரூபித்துக் காட்டியிருக்கிறார்கள்.

எல்லாவற்றையும் வேக வைத்துச் சாப்பிட்டுப் பழகிப் போன நமக்குப் பச்சையாகச் சாப்பிடப் பிடிப்பதில்லை. பழக்கம்தான் இதற்கெல்லாம் காரணம். நம்முடைய ஆகாரங்களுடன் சில தானியங்களைப் பச்சையாகச் சாப்பிடப் பழக்கிக் கொண்டோமானால் பிறகு அதுவே ருசியாக இருக்கும். சக்கை என்று சொல்லித் தானியங்களின் தோல்களைத் தள்ள முடியாமல் இருப்பதற்கும் இதனால் ஒரு சந்தர்ப்பம் கிடைக்கும். பச்சையாகச் சாப்பிட்டால் போதும் என்று சொல்லித் தானியங்களின் தோல்களை நீக்கிவிடக் கூடாது. தானியங்களிலும், பழ வகைகளிலும் அதன் தோலில்தான் அதிக சத்துக்கள் இருக்கின்றன.

பசு, ஆடு, எருமை, குதிரை இவைகளைக் கவனியுங்கள். இவைகளுக்கெல்லாம் முழுத் தானியங்களும், தானியத் தோல்களுந்தானே நாம் தீவனமாகக் கொடுக்கிறோம். ஆனால் அப்பிராணிகள் அச் சக்கைகளையே சாப்பிட்டு எவ்வளவு ஆரோக்கியமாய், பலமாய் இருக்கின்றன. நாம் சக்கை என்று நினைப்பது உண்மையில் சக்கையல்ல. நார் சத்து, மாச் சத்து முதலியவைகளைக் கொண்ட சிறந்த புஷ்டியுள்ள ஆகாரங்கள்.

இவைகளையெல்லாம் நாம் சாப்பிட மறந்த நிலையிலேயே பல நோய்களுக்கு ஆளாகின்றோம். கடைசியில் மிருகங்களைப் போல் சாப்பிடச் சொல்லத்தான் இவ்வளவு உபதேசம் போலும் என்று சொல்லலாம். நான் சொல்லவில்லை, விஞ்ஞானிகள் சொல்லுகின்றனர். பல ஆராய்ச்சிகளைச் செய்து ஸ்தாபித்திருக்கின்றனர். நம்முடைய பல நாளைய ஒரு தப்பபிப்பிராயத்திலேயே நாம் வாழ்ந்து வருகிறோம். எதை எடுத்தாலும் வேக வைக்க வேண்டும்; அப்பொழுதுதான் ஜீரணம் சுலபமாய் ஆகும் என்ற ஒரு அபிப்பிராயம் வெகு ஸ்திரமாய் நம் மூளையில் பல தலைமுறைகளாகப் பதிவாகிவிட்டிருக்கிறது. அதனால் நாம் சிறிது பச்சையாகச் சாப்பிட்டால் எங்கு அஜீரணம் உண்டாகிவிடுமோ என்று பயப்படுகிறோம். சிலருக்கு அவ்வாறு ஆகவும் செய்கிறது. இந்த மன நிலை மாற வேண்டும். படிப்படியாகத்தான் மாற்ற வேண்டும். ஒரே தடவையில் ஒரே நாளில் மாற்ற முடியாது.

இதோ காணுங்கள் விஞ்ஞானிகளின் தீர்ப்பு. நம்மில் மாமிசம் சமைத்தே உண்ணவேண்டும்; இல்லையானால் அஜீரணம் உண்டாகி விடும் என்ற நினைப்பு இருக்கிறதல்லவா! ஒரு விஞ்ஞானி, இதனைச் சரிவர உணர வேண்டுமென்று ஆவலுற்றார். குடலுக்கு எதைச் சீக்கிரம் ஜீரணம் செய்ய முடியும் என்பதை ஆராய முடிவு செய்தார். ஒரு கழுகு வளர்த்தார். அதற்கு எதைக் கொடுத்தாலும் விழுங்கிவிடும் பழக்கமிருந்தது. ஒரு கோலி அளவு இரும்புக் குப்பியைச் செய்து, அதில் பல துவாரங்கள் இட்டுப் பச்சை மாமிசத் துண்டை அடைத்து மூடி அதை நீளமான ஒரு கயிற்றில் கட்டி வைத்துக் கொண்டார். கழுகை அக்குண்டை விழுங்கச் செய்தார். அதனைச் சில மணி நேரம் பொறுத்து வெளியில் இழுத்து எடுத்தார். எல்லா மாமிசமும் கரைந்து விட்டிருந்தது. அவ்வாறே சமைத்த மாமிசத் துண்டை வைத்து விழுங்கச் செய்தார். முன்னிருந்த மணி நேரப்படியே வைத்திருந்து, பின் வெளியில் எடுத்துப் பார்த்தார். மாமிசத் துண்டு சரிவரக் கரையாமல் ஒன்றும் பாதியுமாய் இருந்தது.



பின் பலவகை ஆகாரப் பொருள்களை இவ்வாறே வெந்ததும், பச்சையாகவும் கொடுத்துப் பரிசோதித்துப் பார்த்தார். வெந்த ஆகாரப் பொருளைவிட, வேகாததே சீக்கிரமாக ஜீரணமாவதைக் கண்டார்.

கழுகுக்குத்தானே சோதனை நடந்தது. ஒருகால் அதன் ஆகாரப் பையில் அச் சக்தி இருந்திருக்கலாம் என்று நாம் சுலபமாகத் தட்டிக் கழித்து நம் பழைய வழியே செல்லுவோமென்று விஞ்ஞானிகளுக்கும் தெரியும். ஆகையால் ஆகாரப் பையிலுள்ள காஸ்டிரிக் ரஸத்தினால் பழுதேற்படாத நூலினாலான வலைப்பைகளைச் செய்து அதில் பலவித ஆகாரங்களைத் தனித்தனியாக இட்டு, அதனைக் கயிற்றைக் கட்டி வெளியில் வைத்துக்கொண்டு அவர்களே, அதனை விழுங்கிப் பார்த்திருக்கிறார்கள். குடலின் சுவர் எப்பொழுதும் தன்னிடம் வருவதை முன்னுக்கே தள்ளும் சுபாவமானதினால் இந்த வலைப் பையைக் கட்டி, ஆகாரப் பையிலிருந்து குடலுக்குச் சென்று விடாமல் இருக்கவும், வேண்டியபோது வெளியில் இழுக்கவும், தூண்டில் கயிறுபோல் கயிற்றை முடிந்து வைத்துக் கொண்டார்கள். இவ்வாறு பல சோதனைகளை நடத்தி எப்பொருள் எத்தனை மணிநேரம் ஆகிறது ஜீரணம் செய்வதற்கு என்று கணக்கெடுத்திருக்கிறார்கள். அவைகளில் அவர்கள் கண்ட உண்மை என்னவென்றால் சமைத்த உணவை விடச் சமையாத உணவே சீக்கிரம் ஜீரணமாகிறது என்பதுதான்.

எனவே, இந்தத் தீர்ப்பை நாம் பலமுறை சாப்பிடும்போதெல்லாம் நினைத்து மனத்தை ஸ்திரமாக்கி, நமது மூளையிலும் நுழைய விடுவோமேயானால், அது சில நாளுக்குள் மனத்திலும், மூளையிலும் பதிந்து நாம் சிறுகச் சிறுகச் சாப்பிடும் பச்சை உணவுகளை, சத்துள்ள உணவுகளை, ஜீரணம் செய்யத் தன் குடல்களுக்கு உத்தரவு கொடுக்கும். பின் எதைச் சாப்பிட்டாலும் ஜீரணமாய் விடும். மனிதன் தவிர வேறு எந்த ஜீவராசியாவது சமைத்துச் சாப்பிடுகின்றதா! முழுதும் இயற்கைக்கே திரும்பா விட்டாலும் சிறிதளவு ஆரோக்கியத்தைப் பாதுகாக்கும் அளவுக்காவது இயற்கை உணவுகளைச் சாப்பிடலாமல்லவா! (தொடரும்)

## டி.கே.சி.யின் கடிதங்கள்

வண்ணார்பேட்டை, திருநெல்வேலி
18—8—42

வாழ்க்கையில் எத்தனையோ துன்பங்கள் வந்து இதயத்தைத் தாக்குகின்றன. உண்மை எப்படி இருக்கிறதென்றாலோ, இதயம் மனசு என்கிற காரியம் ஒன்றும் கிடையாது. அந்தப் படலங்களுக்கும் (Film) பின்னால் நிரந்தரமாய் எங்குமாய் நிற்கும் இறைவனைத்தான் தாக்குகின்றன துன்பங்கள். கஷ்டப்பட வேண்டியது அவன்தானே. அவனுக்கு இதுவும் வேண்டும் இதற்கு மேலும் வேண்டும் என்று சிரித்துக் கொண்டிருக்க வேண்டியதுதானே நமக்கு உரிய செயல். பிறவி என்கிற உணர்ச்சியிலிருந்து தான் இந்தத் துன்பம் எல்லாம் — ஆகவே அந்த வேடிக்கைத் துன்பங்களையும், அவைகளை உண்டாக்கின ஆசாமியையும் (இறைவன்), அனுபவிக்கிற அதே ஆசாமியையும் பார்த்துச் சிரிக்காமல் என்ன செய்கிறது! **மாணிக்க வாசகர்** சொல்லுகிறார். பிறப்பையும் அந்த உணர்ச்சி காரணமாக ஏற்படும் துன்பங்களையும் என் அறிவைக் கொண்டு சிரிக்கச் செய்வேன்; பிறகு மிஞ்சுவது இறைவன் தானே. அவனுக்கே தொண்டாகும் என் வாழ்க்கை முழுவதும்;—என்கிறார்.

> **"சிரிப்பிப்பன் சீறும் பிறப்பை:**
> **தொழும்பையும் ஈசற்கென்று**
> **சிரிப்பிப்பன்"**

"இவ்வளவு திடமான உறுதி எனக்கு ஏற்பட்டிருக்கிறது. இதை அங்கீகரியாமல் அலக்ஷியம் செய்கிறாயே கடவுளே! இது தகாது எந்த விதத்திலும். அலக்ஷியம் செய்து என்னைக் காப்பாற்றாவிடில் என்ன செய்வேன், தெரியுமா! வைய ஆரம்பிக்க வேண்டியதுதான்.

> **"சிரிப்பிப்பன் சீறும் பிறப்பை:**
> **தொழும்பையும் ஈசற்கென்று**
>
> **விரிப்பிப்பன்: என்னை விடுதிகண்டாய்**
> **விடின் வெங்கரியின்**
>
> **உரிப்பிச்சன், தோலுடைப் பிச்சன்,**
> **நஞ்சூண்பிச்சன், ஊர்ச்சுடுகாட்(டு)**
> **எரிப்பிச்சன்"**

இந்த வசவோடு, கசந்த Irony யோடு

> **"என்னையும் ஆளுடைப்**
> **பிச்சன் என்று ஏசுவனே!"**

மெய்யில் (Reality) திளைத்த மாணிக்க வாசகர் வாழ்க்கை முழுவதையும் சிரிப்பில் போட்டு அப்படியும் இப்படியுமாகத் தாலாட்டுகிறார்.

எவ்வளவு உயர்ந்த லக்ஷியம்.

தாகூரும் இந்த நிலையில் நிற்கிறார். நிற்கவும் முடிகிறது அவருக்கு.

சிரிப்பை வாழ்க்கையின் அடிப்படையான தருமமாகக் கொள்ள மிகுந்த பாடு படவும் வேண்டியதில்லை.

# புதிய

# 'ASPRO'

REG. TRADE MARK

## 'ஆஸ்ப்ரோ'

## வலி மற்றும் ஜுரத்தை

# அதி துரிதமாக

## நிறுத்துகிறது!




## புதிய 'ஆஸ்ப்ரோ' ஒன்று தான் இந்த எல்லா அனுகூலங்களும் கூடியது.

✻ **உதிரி வில்லைகளே கிடையாது!** வில்லைகள் உதிரியாக இருந்தால் தூசியும் ஈரமும் அதை எளிதில் பாதித்து, அதன் விளைவாக வயிற்றுக்கு கோளாறு ஏற்படக் கூடும். புதிய 'ஆஸ்ப்ரோ' பரிபூரண பாதுகாப்புடையதாக இருப்பதற்கு காரணம் ஒவ்வொரு வில்லையும் தனித்தனியாக, காற்றுப்புகாத வகையில் விசேஷ முறையில் மூடி உறையிடப்பட்டுள்ளது.

✻ **பாதுகாப்பு!** 'ஆஸ்ப்ரோ' இருதயத்திற்கோ, வயிற்றுக்கோ கெடுதி விளைவிப்பதில்லை. துர்ப்பழக்கம் உண்டாக்கும் மருந்து எதுவும் இதில் சேர்க்கப்படவில்லை. புதிய 'ஆஸ்ப்ரோ'வை குழந்தைகள்கூட பயமின்றி உட்கொள்ளலாம்.

✻ **மதிப்பு:** இரண்டே அணா செலவில் உங்களுக்கு துரிதமாக வேலை செய்யும் மூன்று புதிய 'ஆஸ்ப்ரோ' வில்லைகள் கிடைக்கின்றன. எவ்வளவு மலிவு!

புதிய 'ஆஸ்ப்ரோ' ஒரு அற்புதமான புதிய முறையில் தயாரிக்கப்படுவதன் காரணமாக, அதை உட்கொண்டவுடன் மூன்று க்ஷணத்திற்குள்ளாகவே அதன் வேலையைத் தொடங்கி விடுகிறது. இப்பொழுது உங்களுடைய சகலவிதமான நோவுகள், தலைவலி, ஜலதோஷம் மற்றும் ஜுரத்தை வேறெந்த மருந்தைக் காட்டிலும் மிக துரிதமாக நிவர்த்தி செய்யக்கூடிய புதிய 'ஆஸ்ப்ரோ' கிடைக்கின்றது. 'ஆஸ்ப்ரோ' இருதயம் அல்லது வயிற்றுக்கு எவ்வித கெடுதியும் விளைவிக்காது.

276-TAM

✻ தாமதிக்காதீர் — இன்றே புதிய 'ஆஸ்ப்ரோ' கேட்டு வாங்குங்கள்




## பாதுகாக்க வேண்டும்

'வெள்ளையனே வெளியேறு' என்று சில காலத்துக்கு முன் நாம் சொன்ன சொல்லை இருநூறு ஆண்டுகளுக்கு முன்பே நம் சுதந்திர வீரன் வீரபாண்டிய கட்டபொம்மன் ஓர் வரம்புக்குள் செய்கையிலேயே செய்து காட்டினன் என்பதை நாம் இப்போதுதான் பூரணமாக உணர்கிறோம். 'வெள்ளையனே வெளியேறு. மானம் பொழியுது, பூமி விளையுது. அன்னிய நாட்டானுகிய உனக்கேது வரி!' என்று சொன்ன நம் சுதந்திர வீரனை அரசாங்கத்தார் மறந்து விட்டார்கள். ஆனல், மாதம் இரு முறையாவது நம் நாட்டுப் பள்ளி மாணவர்களும், அரசாங்க அலுவலகத்தார்களும், மற்றும் பலரும் பாஞ்சாலங் குறிச்சி என்ற கட்டபொம்மனின் கோட்டையைப் பார்த்து வருகிறார்கள்.

அங்கு வெள்ளையரால் தரை மட்டமாக்கப்பட்ட சுவரும், பாழடைந்த கட்டடங்களும், கல்லறைகளுமே காணப்படுகின்றன. இந்திய சரித ஏட்டிலே பொன்னெழுத்துக்களில் பொறிக்கப்பட வேண்டிய இடத்தைப் போய்ப் பார்ப்பவர்களுக்குத் தங்குவதற்கு இடமும் தண்ணீர் வசதியும் இல்லை. அதுதான் போகட்டும். அன்னாரின் ஞாபகச் சிலைகூட அங்கு இல்லை. இந்தியரால் கொல்லப்பட்ட வெள்ளையரின் கல்லறைகள் காணப்படுகின்றன. அவையும் மூலைக்கொன்றாகச் சிதறி யிருக்கின்றன. அவற்றிலுள்ள கல்லெழுத்துக்கள் பாதிக்கப்பட்டால், 'அவை கல்லறைகள் தானே!' எனச் சந்தேகிக்க வேண்டிய நிலைகூட ஏற்பட்டு விடும். அரசாங்கம் முன் வந்து இவற்றைப் புதுப்பித்துப் பாதுகாக்கா விட்டால் இவையும் கூடிய சீக்கிரம் மறைந்து விடக்கூடும். கட்டபொம்மன், ஊமைத்துரை, வெள்ளையத் தேவன், தானுபதிப் பிள்ளை முதலியவரின் உருவச் சிலைகள் அமைப்பது அவர்களின் சேவைக்கு நாம் செய்யும் அஞ்சலியாகும்.

தட்டப்பாறை
11—4—55

சி. என். துரைராஜ்

●

## "ஆற்றங்கரையினிலே!"

தமிழ்ப் பேரறிஞர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் எழுதும் 'ஆற்றங்கரையினிலே' கட்டுரைத் தொடர் என்னை மிக மிகக் கவர்ந்து விட்டது. இக்கட்டுரைத் தொடர் மூலம் கடல் கடந்து வாழும் தமிழர்கள் நல்ல பயனைப் பெறுகிறார்கள். தமிழ் நாட்டுத் தேவாலயங்களைப் பற்றியும், அவற்றுடன் சம்பந்தப்பட்ட சரித்திரக் கதைகளையும், பண்டைத் தமிழர்களுடைய உயர்ந்த நாகரிகத்தைப் பற்றியும் இலகுவாக அறிந்து கொள்ளுகிறார்கள். தமிழ் இலக்கியங்களை முறையாகப் படிக்கும் வாய்ப்புக் கிடைக்காத என் போன்ற எண்ணற்ற தமிழர்களுக்கு "ஆற்றங்கரையினிலே!" ஒரு அரிய தமிழ்க் களஞ்சியமாக இருக்கிறது. இந்தத் தொண்டைச் செய்யும் பேராசிரியர் திரு ரா. பி. சேதுப்பிள்ளை அவர்களுக்கு, கடல் கடந்து வாழும் தமிழர்களின் சார்பாக நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

யாழ்ப்பாணம்
11—4—55

கே. வி. துரைராசா

●

## இங்கிலாந்தில் 'கல்கி'

உலகின் எந்தக் கோடியில் இருந்தாலும் என் போன்றவர்களுக்கு, 'கல்கி' பத்திரிகை படிப்பதில் எவ்வளவு உற்சாகம் இருக்கிறது என்பதைத் தெரிவிக்கவே இந்தக் கடிதம் எழுதலானேன்.

இந்தத் தேசத்தில் பிரசுரிக்கப்பட்டு வரும் பல்வேறு பத்திரிகைகளையும் பார்த்து வரும் எனக்கு 'கல்கி'யில் வெளி வரும் தொடர் கதைகளும், சிறுகதைகளும், கட்டுரைகளும் ஈடு இணையற்றவை என்று தோன்றுகிறது.



நான் 'கல்கி' அவர்கள் பிறந்த தஞ்சை ஜில்லாவைச் சேர்ந்தவன் என்று சொல்லிக் கொள்ள மிகவும் பெருமைப்படுகிறேன். தற்சமயம் இங்கு ஸௌதாம்ப்டன் சர்வகலாசாலையில் மின்சார இன்ஜினீரிங்கில் ஆராய்ச்சி செய்து வருகிறேன். ஸௌதாம்ப்டன் சர்வகலாசாலையின் போஸ்ட் கிராஜுவேட் ஸ்காலர்ஷிப் (Post Graduate Scholarship) ஒன்றும் பெற்று வருகிறேன்.

இத்துடன் அனுப்பியிருக்கும் புகைப் படம் ஸௌதாம்ப்டன் சர்வகலாசாலை ஹாஸ்டல்களில் ஒன்றான 'க்ளென் அயர்' ஹாலில் என் அறையில் நான் 'கல்கி' படித்துக் கொண்டிருக்கும்போது என் ஆங்கில நண்பன் ஒருவன் எடுத்தது என்று நான் சொன்னல் நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள்! நவ நாகரிகம் நிறைந்த இங்கிலாந்தில் இருந்தாலும் நம் நாட்டு உடை அணிந்து கொண்டு 'கல்கி' படிப்பதில் தனி ஆனந்தம்தான் ஏற்படுகிறது!

மருந்துக்குக்கூடத் தமிழ் பேச முடியாமல் இங்கிலாந்தில் இருந்து வரும் எனக்கு, 'கல்கி' மிகவும் ஆறுதல் அளித்து வருகிறது.

இங்கிலாந்து
4—4—55

டி. ஆர். ராஜகோபாலன்



# சப் இன்ஸ்பெக்டர்

ஆசிரியர் : கே. ஏ. அப்பாஸ். தமிழாக்கம் : டி. ராஜன்

"இன்ஸ்பெக்டர் ஸார்!" போலீஸ் சேவகன் ஸலாம் செய்தான்.

"என்ன!"

"ஐயா! அந்த ஆஸாத் பயல் படுத்துகிற பாடு சொல்லி முடியாது! இது வரை அவன் தன் கூட்டாளிகளின் பெயரைச் சொல்லவே இல்லை. இன்னுமொரு முறை முயற்சி செய்யட்டுமா!" என்று கேட்டான் சேவகன்.

"ஊஹும், ஒரு மணி நேரத்தில் 'ஆஜர்' செய்!" என்று உத்தரவிட்டார் போலீஸ் இன்ஸ்பெக்டர். சேவகனும் சலாம் செய்துவிட்டுப் போய் விட்டான். இன்ஸ்பெக்டர் வெற்றிலைப் பெட்டியைத்திறந்து வெற்றிலையை எடுத்துப் போட்டுக் கொண்டே சிந்தனையில் ஆழ்ந்தார். இந்த ஒரு வாரத்துக்குள் ஆஸாத், அவருடைய உணவு, உறக்கம், அமைதி எல்லாவற்றையும் சிதைத்து விட்டான். இரவும் பகலும் அவருக்கு ஒரே கவலை! எல்லாவித உபாயங்களையும் கையாண்டு பார்த்தாகிவிட்டது. பலன் ஒன்றும் இல்லை.

மன்னித்து விடுவதாகவும், இனாம் கொடுப்பதாகவும் சொல்லிப் பார்த்தார். ஆனால் அந்த ஆஸாத் வாயைத் திறந்தால்தானே! ஸாம, தான, பேத, தண்டம் என்னும் எல்லா முறைகளும் செய்தாயிற்று. அவன் ஒன்றுக்கும் மசியவில்லை. அந்த இன்ஸ்பெக்டர் மிகவும் கண்டிப்பான பேர்வழி! அதட்டல், உருட்டல், மிரட்டலுக்கெல்லாம் அவருடைய மாவட்டத்திலேயே அவருக்கு இணை வேறு எந்த உத்தியோகஸ்தரும் கிடையாது. வேறு மாகாணங்களிலிருந்துகூடக் குற்றவாளிகளின் வாயைக் கிளற வேண்டிய உபாயங்களை அவரிடமிருந்து கேட்டுத் தெரிந்து கொள்வார்கள். பெருங் குற்றவாளிகளெல்லாம் அவருடைய பெயரைக் கேட்டு நடுங்குவார்கள். ஆனால் இந்த ஆஸாத் பெரும் பிடிவாதக்காரனாக இருந்தான்.

"ஆஸாதின் பிடிவாதத்தை எப்படித்தான் மாற்றுவது!" என்ற கேள்வி அவருடைய மூளையில் வட்டமிட்டுக் கொண்டிருந்தது. பார்ப்பதற்கென்னவோ ஆஸாத் ஒல்லியாக இருந்தான். ஆனால் அவன் மேல் சுமத்தப்பட்ட குற்றமோ மிகப் பெரியது.

அவனுடைய கூட்டாளிகளின் விவரம் மிகவும் அவசியம். வெகு நாட்களாகவே ஆஸாதைப் பற்றிப் புகார்கள் வந்து கொண்டிருந்தன. இந்த வழக்கை விசாரிக்கத் துப்புக் கிடைக்கா விட்டால் இன்ஸ்பெக்டருக்குக் கெட்ட பெயர்! ஆஸாதின் கூட்டாளிகளோ குடியானவர்களிடம் புரட்சி வெறி ஊட்டி வருகிறார்கள்.

ஆஸாத் ஒரு பல்கலைக் கழகப் பட்டதாரி. எனினும் அவன் கிராமத்தில் தான் வசிக்க விரும்பினான். அவன் மான்பூர் கிராமத்தில் வசித்து வந்தான். அது ஒரு சிறிய கிராமம். அங்கு படித்த மனிதன் ஆஸாத் ஒருவன் தான். ஆஸாத் அந்தக் கிராமத்தில் ஒரு பள்ளிக்கூடம் நிறுவினான். பகலில் குழந்தைகளுக்கும் இரவில் குடியானவர்களுக்கும் படிப்புச் சொல்லிக் கொடுத்து வந்தான். அவன் தன் நற்பண்புகளினால், கிராமத்து மக்களை வசீகரித்து விட்டான். கிராமத்தில் எவனுக்காவது ஏதாவது கடிதம் எழுத வேண்டுமானால் ஆஸாதிடம்தான் போவது வழக்கம். கிராமத்தில் யாருக்காவது காயம் பட்டால் ஆஸாத் மருந்துப் பெட்டியுடன் அங்கே சென்று உதவிகள் செய்வான்.

கிராமத்து மக்களிடம் சுகாதாரப் பயிற்சியைப் பற்றியும், உடற்பயிற்சியின் அவசியத்தைப் பற்றியும் பிரசாரம் செய்து வந்தான்.



ஆஸாதின் வேலைகளை எவரும் ஆட்சேபிக்கவில்லை. அப்படியிருந்தும் போலீஸ் ரிஜிஸ்தரில் ஆஸாதின் பெயர், குறிப்பிடப்பட்ட அரசியல் வேலைகளைச் செய்கிறவர்களின் வரிசையில் எப்படியோ ஏறிவிட்டது! கொஞ்ச நாட்களுக்குப் பிறகுதான் அவனைப் பற்றிய குற்றச்சாட்டுகள் வரத் தொடங்கின. கிராமத்து ஸேட் ராம்லாலுக்கு அவன் மேல் ஆரம்பத்திலிருந்தே ஆத்திரம்! குடியானவர்கள் படித்துக் குட்டிச்சுவராகி விட்டால் ஸேட்டின் பிழைப்பு எப்படி நடக்கும்? அதனால்தான்! ஆஸாத் 'குடியானவர்களைக் கடன் வாங்கக் கூடாது!' என்று உபதேசம் செய்ய ஆரம்பித்து விட்டான். அப்படி அவசியமாகக் கடன் வாங்க வேண்டியிருந்தால் குடியானவனுடன் ஆஸாதும் கூடச் சென்று முறைப்படி 'ரசீது' வாங்கி வருவான். முன்பெல்லாம் அப்படியில்லை. படிக்கத் தெரியாத குடியானவர்கள் ஸேட் எழுதித் தரும் ரசீதுகளில் கண்ணை மூடிக்கொண்டு 'கட்டை விரல் அடையாளம்' செய்வது வழக்கம். பிறகு வரவு வைத்த ரசீதுகளைப் பற்றிக் குடியானவர்களுக்கு ஒரு கவலையும் கிடையாது. ஆனால் ஆஸாத் குடியானவர்களுக்கு வட்டித் தொழில் செய்யும் பேர்வழிகளின் எல்லா அபாயங்களைப் பற்றியும் சொல்லி எச்சரிக்கை செய்து விட்டான். இதனால் ஸேட்டுக்கு முன்பிருந்த வரும்படி குறைந்து பாதியாகி விட்டது.

கிராமக் கணக்கன் பஷீர்கானுக்கும் அவனைக் கண்டால் பிடிக்காது. ஆஸாத் கிராம மக்களிடம் பழகியது முதல் நிலவரி, தண்ணீர் வரி, 'மகசூல்' முதலிய விஷயங்களில் லஞ்சம் வாங்க முடியாமல் போய் விட்டது! பஷீர்கான் இதுவரையில் இந்த மாதிரி வரும்படிகளைத் தன் பிறப்புரிமையாகக் கருதி வந்தவன்! கிராம ஜனங்களும், அவனைக் குஷிப்படுத்துவதில் தான் தமக்கு நன்மை யிருக்கிறது என்று எண்ணியதுண்டு. ஆனால், அது அந்தக் காலம்! இப்பொழுது, குடியானவர்கள் அவனிடம் நடந்த மாதிரியே வேறு!

பண்டித சிவப்பிரஸாத் கிராமக் கோவிலின் பிரதம குரு. அவருக்குக்கூட ஆஸாத் அந்தக் கிராமத்துக்கு வந்ததில் திருப்தி கிடையாது. இந்த இளைஞன் சமூகத்துக்கு விரோதமாகத் தீண்டாதவர்களைக் கிளப்பி விடுவதாக அவர் குறை கூறி வந்தார்.

மவுலா பக்ஷ் என்பவன் கிராமத்து மசூதியில் ஒரு முட்டாள் முல்லா. அவன் படிப்பில்லாதவன். அவனுக்கும் கிராம குருவுக்கும், அவ்வளவாகப் பிடிக்காது. அதனால் அவர்கள் இருவரும் கிராமத்து ஹிந்து முஸ்லிம்களை மோத விட்டுத் தம்முடைய காரியங்களைச் சுலபமாகச் சாதித்து வந்தனர்!

ஆஸாதைப் பொறுத்த வரையில் மவுலா பக்ஷுக்கும் பண்டித சிவப்பிரஸாத்துக்கும், ஒரே கருத்து ஒற்றுமை! அவன் கிராமத்தில் இருப்பதால் அவர்களுக்கு நஷ்டமாம்! ''ஆஸாத் குடியானவர்களுக்கும் குழந்தைகளுக்கும் படிப்புச் சொல்லிக் கொடுத்து அவர்களை நாஸ்திகர்களாக்கி விடுவான்'' என்பான் மவுலாபக்ஷ். ஹிந்துக் குழந்தைகளும் முஸ்லிம் குழந்தைகளும் சேர்ந்து படிப்பதில் அவனுக்கு என்றைக்கு இஷ்டமிருந்ததாம்! பெண்கள் படிப்பதைப் பற்றி அவன் கருத்து இதுதான். பெண்கள் படித்தால் அவர்கள் ஆசைக் காதலர்களுக்குக் காதல் கடிதங்கள் எழுதி விடுவார்களாம்! பூகோளம் படித்தால் பெண்கள் வீட்டை விட்டு ஓட வழி தெரிந்து கொண்டு விடுவார்களாம்!

பண்டிதசிவப்பிரஸாதோ 'அடுப்பூதும் பெண்களுக்குப் படிப்பெதற்கு! எல்லோரும் படித்து விட்டால் உலக நாசந்தான்!' என்று இன்னுமொரு படி மேலே போய் விடுவார். தாசில்தார் ஐயாவும் அவருடைய சிப்பந்திகளும் ஆஸாத் மான்பூர் கிராமத்திலிருந்தால் விபரீதம் நேர்ந்து விடுமென்று எண்ணினார்கள். அவர்களுக்கு அதிகாரமிருந்தால் அவன் கிராமத்தில் இருக்க முடியுமா, என்ன!

என்ன ஆச்சரியம்! தாசில்தார் கிராமத்தில் ''முகாம்'' செய்திருந்தபோது கிராம ஜனங்கள் இலவசமாக உணவுப் பண்டங்கள் கொடுக்க ஒரேயடியாக மறுத்து விட்டார்கள்! டிஸம்பர் மாதம். அவர் வந்திருந்தபோது ''ஐயாவுக்கு முட்டையோ காய்கறியோ நெய்யோ தேவையாக யிருந்தால் ரொக்கம் கொடுத்து வாங்கட்டுமே!'' என்று குடியானவர்கள் கூறி விட்டனர். இந்த சமயம் அவருக்கு ஏற்பட்ட மரியாதைக் குறைவைச் சொல்லி முடியாது!

அவர் வருகை புரிந்தபொழுது கிராமக்கணக்கன் பஷீர், சிவப்பிரஸாத், மவுலாபக்ஷ், சேட் ராம்லால் இவர்களைத் தவிர வேறு யாரும் அவரை வரவேற்கவில்லை. மோட்டார் 'ஹார்ன்' சத்தம் கிராம ஜனங்களிடம் எவ்விதமான சலசலப்பையும் உண்டாக்கவில்லை! குடியானவர் தத்தம் வேலைகளில் ஈடுபட்டிருந்தனர். பெண்களோ வயல்களில் வேலைசெய்யும் சுற்றத்தார்களுக்குக் கட்டுச் சோறு கொண்டு சென்றனர். மற்றும் சில பெண்கள் பஞ்சு பட்டை போட்டுக் கொண்டும் கைராட்டினங்களில் நூல் நூற்றவாறு, ''ஆடு ராட்டே! ஆடு ராட்டே! ஆனந்த சுதந்திரம் வந்ததென்று ஆடு ராட்டே!'' என்று ஆனந்தமாகப் பாடிக் கொண்டும் இருந்தனர். கிராமத்துக் குழந்தைகளோ, பள்ளிக்கூடத்துக்குச் சென்றுவிட்டன! இப்பொழுது கிராமத்தில் வேலையற்றவர்க

வில்லை. அந்த மக்கள் தன் மான – உணர்ச்சி பெற்றிருந்தனர். இதனால்தான் தமக்கு அவமரியாதை ஏற்பட்டதென்று தாசில்தார் நினைத்தார். அவர் வேறு எப்படி எண்ணியிருக்க முடியும்! கிராமத்துப் பெரும் புள்ளிகளான கணக்கன் பஷீர், பண்டித சிவப்பிரஸாத், மவுலாபக்ஷ், அநியாய வட்டிக்கார சேட் ராம் லால் எல்லோருமே சேர்ந்து ஆஸாதைப் பற்றிக் குற்றம் சாட்டினார்கள்.

சில நாட்களுக்குப் பிறகு, குடியானவர்களின் தலைவர்கள் "மகாநாடு" நடத்தப் போவதாகவும் மழையின்றி அதிக விளைச்சல் இல்லாதபடியால் இந்த ஆண்டு வரி செலுத்தப் போவதில்லை யென்றும் செய்தி வந்தது. போலீஸ் சரியாகக் கண்காணிப்புச் செய்து நன்றாக விசாரித்தும்கூட என்றைக்கு மகாநாடு நடக்கு மென்ற விவரம் கிடைக்கவில்லை. வெகு நாட்களுக்குப் பிறகு ஆஸாதின் வீட்டில் குடியானவர்களும் விவசாயிகளும் மகாநாடு நடத்துகிறார்களென்று ரகசிய போலீஸ் மூலம் தகவல் எட்டியது. போலீஸார் சோதனைக்கு முன்பு எப்படியோ ஆஸாதுக்குச் செய்தி எட்டி விட்டது. அவன் தோழர்களுடன் இருட்டில் ஓடி மறைந்து விட்டான்.

சற்று நேரத்துக்குப் பிறகு இன்ஸ்பெக்டர் தம் ஜவான்களுடன் வந்தார். அங்கு ஆஸாதைத் தவிர வேறு யாருமில்லை. இன்ஸ்பெக்டருக்கு உபயோகமாகக் காகிதங்கள் கிடைத்தன. 'வரி கொடா இயக்க'த்தைப் பற்றிய தீர்மானங்களும் கிடைத்தன. இதைத் தெரிந்து கொண்டு சர்க்கார் வெகு எளிதில் இயக்கத்தை நசுக்கியிருக்க முடியும். ஆனால் இயக்கம் நடத்துகிறவர்களைப் பற்றிய பெயர்களும் விவரங்களுந்தான் கிடைக்க வில்லை! ஆஸாதின்மீது 'சதி'க்குற்றம் வேறு சுமத்த வேண்டி யிருந்தது. இன்ஸ்பெக்டரும், மூலை முடுக்குக ளெல்லாம் தேடி விட்டார். ஆஸாதின் கூட்டாளிகளது விவரம் தெரியவில்லை.

பெரிய அதிகாரிகளின் ஆலோசனையின்படி இன்ஸ்பெக்டர் ஆஸாதைக் கைது செய்தார். அவனுடைய வாயைத் திறக்க எல்லாவித மான உபாயங்களையும் அவர் கையாண்டார். ஒன்றும் பலிக்கவில்லை. அவர் கவலையுற்றார்.

"சரி, இனிமேல் என்ன செய்யலாம்!" என்று யோசித்தவாறு இலேசாகக் கண்களை மூடினார்.

*　　　*　　　*

அன்று, அவர் மனைவி நன்றாகச் சமைத்திருந்தாள். தவிர வெய்யிற் காலம்! மத்தியான வேளை. ஒரு சேவகன் 'பங்கா' இழுத்துக்கொண்டிருந்தான். வெட்டிவேரில் செய்த பங்காவின் காற்று சுகமாக வீசியது. தூக்கம் வரத் தயங்குமா என்ன! அவர் உறங்கத் தொடங்கினார். ஏதோ சத்தம் கேட்டுக் கண்களைத் திறந்தார். அறைக் கதவுகள் எல்லாம் மூடியிருந்ததால் சற்று இருட்டாக யிருந்தது. தவிரவும் அவருக்குச் சற்று தூக்க வெறியும் மேலி யிருந்தது. அறையில் உள்ள பொருள்கள் யாவும் மங்கலாகத் தோன்றின. ஆனால் அவர் யாரை எதிர்பார்த்தாரோ, அந்த ஆளைப் புரிந்து கொண்டு விட்டார். ஆம்! அவன்தான் ஆஸாத்! கைகளில் விலங்கு போட்டிருந்தது. ஒரு சேவகன் கையில் கயிற்றைப் பிடித்துக் கொண்டிருந்தான். ஆஸாதின் சாந்தமான முகத்திலே அவன் ஒரு வாரமாக அனுபவித்த வேதனைகள் புலப்பட்டன. ஆனால் அவனுடைய புன்னகை என்றும் போலவே பொலிவுடன் விளங்கியது. அவனுடைய உறுதியையும் பிடிவாதத்தையுங் கண்டு வெறுப்படைந்தார். அவன்மேல் அதிகக் கோபங் கொள்ளக் காரணம் எப்பொழுதுமே அவனுடைய முகத்தில் காணப்பட்ட புன்னகைதான்! ஆம் அந்தப் புன்னகையிலே தன்னம்பிக்கையும், நெஞ்சுறுதியும் இன்ஸ்பெக்டரின் நடவடிக்கைகள்மீது வெறுப்படைந்த தோற்றமும் தெளிவாகப் பளிச்சிட்டன!



சேவகனைப் பார்த்து, "என்னடா! பார்த்துக் கொண்டிருக்கிறாய்! இவன் கூட்டாளிகளின் பெயர்களைச் சொல்லும் வரையில் அடித்துக் கொண்டே யிரு!" என்று இரைந்தார்.

சேவகன் நூல் கயிற்றை முறுக்கி இரட்டையாக மடித்து ஒரு சாட்டையைப் போலச் செய்தான். பிறகு ஒரு அடி தள்ளி நின்றான். ஆஸாதின் முதுகில் அடி சரியாக விழ வேணும் என்பதற்காகத்தான்!

சேவகன் சாட்டையின் அடியைப் பரிசோதிக்க ஆட்டிப் பார்த்தான். தனக்கும் ஆஸாதின் இடுப்புக்கும் நடுவே கைகளால் அளந்து பார்த்தான். தன் முழுப் பலத்தையும் காட்டி அவன் ஆஸாதை அடித்தான்.

இன்ஸ்பெக்டரின் வாயிலிருந்து ஒரு கூச்சல் வெளிப்பட்டது. சாட்டையடி அவருடைய முதுகில் விழுந்ததைப் போலிருந்தது.

பிட்டுக்காக மண் சுமந்தவன் முதுகில் விழுந்த அடி உலகத்தில் உள்ள ஜீவராசிகளின் முதுகி லெல்லாம் விழுந்ததாகத் திருவிளையாடல் புராணம் கூறுகிறது. ஆஸாதின் முதுகில் விழும் அடி இன்ஸ்பெக்டரின் முதுகில் விழுந்து உறைக்கவாவது! இது எங்கேயாவது நடக்கக் கூடிய காரியமா! வெறும் பிரமையாகத்தான் இருக்க வேண்டும். இருந்தாலும் வலி பொறுக்காதவர் போல் இன்ஸ்பெக்டர் தம் முதுகைத் தடவி விட்டுக் கொண்டார்.



பேராசிரியர் கல்கி அவர்கள் எழுதிய 'மகுடபதி' என்னும் கதையை நாடகமாக்கி ரிஸர்வ் பாங்கு ஊழியர்கள் ஏப்ரல் மாதம் மூன்றாந் தேதி வெகு சிறப்பாக நடித்தனர். நாடகத்துக்குத் தலைமை வகித்த ராஜா முத்தையா செட்டியார் நடிகர்களை மிகவும் பாராட்டிப் பேசினார். மகுடபதியை நாடகமாக்கித் தந்த திரு ஏ. டி. கிருஷ்ணசாமி அவர்களையும், நாடகத்தைப் பயிற்றுவித்த திரு என். எஸ். நடராஜன் அவர்களையும், மற்றும் நாடகத்தில் பங்கெடுத்துக் கொண்டு சிறப்பாக நடித்தவர்களையும் மேலே உள்ள படத்தில் காணலாம்.

---

ஆனால் ஆஸாத்!

பிட்டுக்கு மண் சுமந்து முதுகில் அடி வாங்கிக்கொண்ட சோமசுந்தரக் கடவுள் போல் அலட்சியமாகச் சிரித்துக் கொண்டிருந்தான்.

அவன் முகத்திலே அதே பழைய புன்னகை அரும்பிக் கொண்டிருந்தது.

சேவகன் குனிந்து தன் வேலையைச் செய்து கொண்டிருந்தான். 'சுளீர்! சுளீர்!!' என்று அவன் ஆஸாதின் முதுகில் தொடர்ந்து அடித்துக் கொண்டிருந்தான்.

இன்ஸ்பெக்டர் வேதனையுடன் கூச்சலிட்டுக் கொண்டிருந்தார்.

சேவகன் இன்னும் கொஞ்சம் வேகமாகச் சாட்டையடி கொடுத்தான். இன்ஸ்பெக்டரால் தாங்க முடியவில்லை! இன்னுமொரு அடி கொடுத்தால் அவருடைய பிராணனே போய் விடும் போலத் தோன்றியது

"போதும், போதும்! நிறுத்து!" என்று இன்ஸ்பெக்டர் அமைதி குலைந்து கூச்சலிட்டார். இதைக் கூறியதும் நாற்காலியிலிருந்து எழுந்திருக்க விரும்பினார். அவருடைய கண்களும் தூக்கத்திலிருந்து திறந்தன!

அறை முழுவதும் காலியாகத்தானிருந்தது. "அப்படியானால் நான் கனவா கண்டேன்!" என்று அவர் யோசித்தார். அவருடைய உடல் முழுவதும் ஒரே வியர்வை வெள்ளம். இடுப்பில்...!...காயம்பட்ட வேதனை இன்னும் இருந்து கொண்டு தானிருந்தது. வலி தாங்கவில்லை. ஸப் இன்ஸ்பெக்டர் வாட்டத்துடன் பின்னால் திரும்பினார். அவருடைய சிறிய பெண் குழந்தை அவரது இடுப்பிலும் முதுகிலும் தட்டிக் கொண்டிருந்தது. அப்பாவின் பயத்தைக் கண்டு அது 'கல கல' வென்று வாய் விட்டுச் சிரித்தது.

வராந்தாவில் காலடிச் சத்தம் கேட்டது. சேவகன், ஆஸாதுடன் ஆஜரானான். அந்தப் பழிகாரப் பயல் ஆஸாத் இப்பொழுதும் புன்னகை புரிந்து கொண்டுதானிருந்தான்!

"எஜமான் உத்தரவு" என்று சேவகன் பணிவுடன் நின்றான். இன்ஸ்பெக்டர் ஒரு கையால் இடுப்பைத் தடவிப் பார்த்தார்! இன்னொரு கையால் முகத்தைத் தடவிக் கொண்டார். கைக்குட்டையால் வியர்வையைத் துடைத்தார். அவருடைய வாட்டம் வெளியில் தெரியாமலிருக்கத்தான்! ஆனால் அவருடைய குரலும் அவர் வசத்தில் இல்லை.

"எ......எ......என்ன! எ......எ......யார்!" மாவட்டத்திலேயே மிகச் செல்வாக்குள்ள ஒரு இன்ஸ்பெக்டர் ஒரு குற்றவாளியின் முன் திக்கித் தடுமாறிக் கொண்டிருந்தார். "ஆம்... இவர்தான் ஆஸாத் ஸாஹப்...இவ...இவ... இவரை விடுதலை செய்து விடு! சதிக்குற்றத்துக்கு ஒரு ஆதாரமுங் கிடைக்கவில்லை" என்றார்.

ஆஸாத் இன்ஸ்பெக்டரின் மன வாட்டத்தைக் கண்டு அதன் காரணத்தைப் புரிந்து கொண்டவன் போலப் புன்னகை செய்தான்!

சேவகன் இன்ஸ்பெக்டரின் மூளையில் ஏதோ உஷ்ணக் கோளாறு தோன்றியிருக்கலாமென்று எண்ணினான். உத்தரவை நிறைவேற்ற ஆஸாதின் கைவிலங்கைக் கழற்றி விட்டு ஆஸாதுடன் வெளியே சென்றான்.

ஸப் இன்ஸ்பெக்டர் பின்னால் திரும்பிப் பார்த்தார். அவருடைய பெண் குழந்தை தன் சின்னஞ்சிறு கைகளால் அவருடைய முதுகில் தட்டிக் கொண்டிருந்தது. அது அவருடைய நல்ல காரியத்துக்கு 'ஷபாஷ்' கொடுப்பதைப் போலிருந்தது.

அந்த நாள் முதல் இன்ஸ்பெக்டரின் கம்பீரம் குறைந்து விட்டது. அவர் மாவட்டத்திலேயே உதவாக்கரை போலீஸ் அதிகாரிகளின் எண்ணிக்கையில் சேர்ந்து விட்டார்.




பேதம், தானம், யுத்தம் எதனாலும் தகர்க்க முடியாது போலிருக்கிறது. ஆயினும் சீதை உயிரோடிருக்கிறாளா, இல்லையா என்பதை முதலில் காண வேண்டும். பிறகு மற்ற யோசனையெல்லாம்! ராவணனால் காக்கப்படும் இந்த நகரத்துக்குள் நான் எவ்வாறு எப்போது பிரவேசித்தல் நலம்? ஓரிடம் விடாமல் தேடினால் அல்லவோ சீதையை மறைத்து வைத்திருக்கும் இடத்தைக் காண முடியும்? யோசனை செய்யாமல் தவறான முறையில் நான் ஏதேனும் இப்போது செய்து விட்டேனானால் முதல் பிழை முற்றும் பிழையாகிப் போய், ராம காரியம் என்னால் கெட்டுப் போனதாகும்.

## 65. எங்கும் தேடினான்

லங்கையில் ஹனுமான் இறங்கினான். மிக உற்சாகமாகவும் மகிழ்ச்சி கொண்டவனுமாக இறங்கினான். பிறகு நிதானமாக யோசிக்கலானான்.

"கடலைத் தாண்டி விட்டேன். உண்மைதான். ஆயினும் அதனால் வேலை முடிந்து போகவில்லை. திரிகூட மலை மேல் ராவணனுடைய பெரிய நகரம் ஆகாயத்தில் தொங்குவது போல் காணப்படுகிறது. ஆஹா! எவ்வளவு அழகு! எவ்வளவு செல்வம்! எவ்வளவு ஆயுதக் காப்பு! அமராவதி, போகவதி நகரங்களுக்குச் சமானமான நகரமும் கோட்டையுமாக இருக்கிறது. வனங்களின் வனப்பும் மாளிகைகளின் அழகும் மதிற் சுவர்கள், காவல் யந்திரங்கள், அகழிகள், இவற்றையெல்லாம் பார்க்கும் போது கவலையாக இருக்கிறது. இந்த ராவணனை எவ்வாறு எதிர்த்து ஜெயிப்போம்? நான் தாண்டிய கடலை நம்முடைய சேனை எப்படித் தாண்டி வர முடியும்? தாண்டி வந்தாலும் இந்தக் கோட்டையை எப்படித் தாக்கி வெற்றியடைவோம்? ஆயுதபாணிகளாக நிற்கும் அரக்கர்களால் காக்கப்படும் இந்த நகரத்தை சாமம்,

"பகலில் பிரவேசித்தால் இந்த அரக்கர்கள் எளிதில் என்னைக் கண்டுகொள்வார்கள். இரவிலேதான் நகரத்துக்குள் நான் புக வேண்டும். எந்த உருவத்தை எடுத்து நான் பிரவேசிக்கலாம்? அரக்கர்கள் என்னைக் கண்டு சந்தேகப்படாத மிகச் சிறிய அற்ப உருவம் எடுத்துச் செல்ல வேண்டும்."

இவ்வாறு யோசித்து ஒரு பூனையளவான சிறு குரங்கு உருவம் எடுத்துக் கொண்டான். நகரத்துக்குள்ளும் மாடமாளிகை உபவனம் முதலிய எல்லா இடங்களிலும் பிரவேசித்துத் தேடுவதற்கு அதுவே சவுகரியம் என்று தீர்மானித்தான். தீர்மானித்த உடனே வாயு புத்திரன் தன் இயற்கை உருவத்தைச் சுருக்கிக் கொண்டு விட்டான். பிரம்மாண்ட பெரிய வடிவமாகிக் கடலைத் தாண்டிய ஹனுமான் ஒரு சிறு குரங்கானதை யாராவது கண்டிருந்தால் மிக வியந்திருப்பார்கள்.

* * *

இப்படி ஆஞ்சநேயன் சிறுகுரங்கு வடிவம் எடுத்த சமயம் சூரியன் அஸ்தமித்து விட்டான். ஹனுமான் கோட்டை வாயில் நோக்கிச் சென்றான். அச்சமயத்தில் சந்திரன் தோன்றி

எங்கும் நிலா நிறைந்தது. தேடும் வேலைக்குச் சகாயமாகவே சந்திரன் தோன்றியிருக்கிறான் என்று எண்ணி, ஹனுமான் உற்சாகத்தோடு சென்றான்.

மதிலால் காக்கப்பட்ட ராவணனுடைய நகரத்தின் அழகும் செல்வமும் போகமும் தூரத்திலிருந்து பார்க்கும்போதே ஹனுமான் மிகவும் வியந்தான். வீதிகள், மாளிகைகள், தோரணங்கள், அலங்காரங்கள், கொடிகள் எல்லாம் பொன் வெள்ளி ரத்தின மயமாக ஜொலித்தன. சமுத்திரக் காற்று சுகமாக வீசிக் கொண்டிருந்தது. இந்திரனுடைய அமராவதியும் குபேரனுடைய அளகாபுரியும் போல் ராவணனுடைய நகரம் ஐசுவரியத்தின் உச்சியை அடைந்திருந்ததைக் கண்டான். வியப்பு ஒருபக்கம், மற்றொரு பக்கம் இவ்வளவு பலமாகக் காக்கப்பட்டு ஐசுவரியம் நிறைந்த இந்தக் கோட்டையையும் நகரத்தையும் இதைப் பரிபாலித்து வரும் அரக்கனையும் எவ்வாறு வெல்வது என்கிறகவலை ராம தூதனுக்கு வளர்ந்தது.

இப்படி வியந்தும் கவலை கொண்டும் பார்த்துக் கொண்டே சென்றபோது அந்த நகரத்து அதிதேவதை பயங்கர வடிவத்துடன் ஹனுமானுக்கு எதிரில் நின்று, "யார் நீ குரங்கு? இங்கே எவ்வாறு வந்தாய்? ஏன் வந்தாய்? உண்மையைச் சொல்" என்று அதட்டிக் கேட்டாள்.

"நான் குரங்குதான். இந்த அழகிய நகரத்தைப் பார்த்துப் போக வந்திருக்கிறேன். எல்லாம் சுற்றிப்பார்த்து என் ஆசையைத் தீர்த்துக்கொண்டு திரும்பிப் போவேன்" என்றான் ஹனுமான்.

லங்காதேவதை கோபங் கொண்டு "குரங்கே!" என்று ஹனுமானை ஒரு அறை அறைந்தாள்.

ஹனுமானும் தன் இடது கையால் லங்காதேவியை ஒரு குத்து குத்தினான். கோர வடிவம் கொண்ட தேவதை அந்தக் குத்தைத் தாங்க முடியாமல் கீழே சுருண்டு விழுந்தாள்.

விழுந்த லங்கா தேவதை எழுந்து "ஒரு வானரத்தால் அடிபட்டு எந்த நாளில் நீ தோற்றுக் கீழே விழுவாயோ அன்று உன் நகரத்துக்கு முடிவு என் கிற வாக்கு உண்மையாகும் போலிருக்கிறது. ராவணனுடைய பிழைகள் முற்றிப் போயிற்று. இனி லங்கை அழிய வேண்டிய காலம் வந்துவிட்டது. தேவர்கள் சொன்னது நிறைவேறப் போகிறது" என்று சொல்லிவிட்டு ஒதுங்கி நின்றாள்.

லங்கா தேவதை ராவணனுக்குக் கீழ்ப்படிந்த ஒரு ஆள் அல்ல. அந்த நகரத்தின் விதியே இந்தச் சொரூபம்.

குரங்காகிய ஹனுமான் மதில் ஏறி உள்ளே குதித்துப் பிரவேசித்தான். விரோதிகளுடைய கோட்டைகளுக்குள் சாதாரண வாயில் வழியாகச் செல்லல் ஆகாது, வழியில்லாத வழியில் செல்லவேண்டும் என்பது பழைய யுத்த நீதி சாஸ்திரம். அரக்கர்கள் அழிய வேண்டும் என்று சங்கற்பம் செய்து கொண்டு ஹனுமான் லங்கா நகரத்துக்குள் வலது காலை முன் வைத்துப் பிரவேசித்தான்.

* * *

அழகிய புஷ்பங்கள் உதிர்ந்து மிகப் பொலிவடைந்திருந்த ராஜவீதியில் சென்றான். மேகங்களுக்கு இடையில் மின்னல் வீசிப் பிரகாசிப்பது போல் பிரகாசித்துக் கொண்டிருந்தன மாட மாளிகைகளெல்லாம். அவற்றின்மேல் ஏறிச் சென்றான். மாளிகைகளின் சௌந்தரியத்தை அனுபவித்துக் கொண்டே சென்றான்.




சொல்லுக்கு அடங்காத அழகுடன் அரக்கர்களின் மாளிகைகளும் அலங்காரங்களும் தெருக்களும் பிரகாசித்தன. சங்கீத சாஸ்திரோக்தமாகப் பாடிய பாட்டுக்கள் கேட்டன. அழகிய பெண்டுகளும் அவர்கள் கால்களின் ஆபரணங்களுடைய சப்தமும் நிறைந்த மாளிகைகளைக் கண்டான். எங்கும் குதூகல ஆரவாரங்கள். சில வீடுகளில் மந்திரங்கள் ஜபித்துக் கொண்டிருப்பதைக் கேட்டான். சில வீடுகளில் அரக்கர்கள் வேதம் ஓதிக் கொண்டிருப்பதைக் கேட்டான். சில வீடுகளில் ராவணனை ஸ்துதி செய்து கொண்டிருக்கும் சப்தத்தைக் கேட்




டான். யுத்த வீரர்களும் சாரர்களும் நிறைந்திருந்த வீதிகளைப் பார்த்தான். வைதிக முறையில் விரதம் பூண்டிருந்த பலரையும் இன்னும் அநேக காட்சிகளையும் கண்டான். கோரமான வடிவங்களும் குரூர வடிவங்களும் கண்டான். வில்லும், கத்தியும், பெருந் தடிகளும், கல் வீசும் கவண்டையுறிகளும், சூலாயுதங்களும், எறியும் வேல்களும், இன்னும் பல யுத்தப் படைகள் வைத்துக் கொண்டு நிற்பவர்களைக் கண்டான். வீரர்கள் எல்லாரும் கவசங்கள் பூண்டிருந்தார்கள்.

சிலர் மிக அழகாக இருந்தார்கள். சிலர் மிக கோரமாக இருந்தார்கள். சிலர் வெளுப்பு, சிலர் மிகக் கருப்பு, சிலர் சிவப்பு, சிலர் சாதாரண வடிவம், சிலர் மிகக் குள்ளம், சிலர் மிக உயரம். இவ்வாறு நானாவித வடிவங் கொண்ட ஜனங்களைக் கண்டான்.

**மா**ளிகை மாளிகையாகப் பார்த்துக் கொண்டே ஹனுமான் சென்றான். மகோன்னத அழகைக் கொண்ட பல ஸ்திரீகளைக் கண்டான். நாயகர்களுடன் சந்தோஷமாக இருப்பவர்களைக் கண்டான். உருக்கி



விட்ட தங்கத்தைப் போன்ற நிறம் கொண்ட யௌவனப் பெண்மணிகள் பலரைக் கண்டான். சிலர் உப்பரிகையில் உட்கார்ந்திருந்தார்கள். சிலர் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். சிலர் விளையாடிக் கொண்டும் பாடிக் கொண்டுமிருந்தார்கள். இவ்வாறு கணக்கற்ற ஸ்திரீகளைக் கண்டான். ஆனால் துக்கப்பட்டு இளைத்துப் போய் ராமனையே தியானம் செய்து கொண்டிருக்கும் சீதையைக் காணவில்லை. சௌந்தரிய வடிவங்களையெல்லாம் கண்ட ஹனுமானுடைய உள்ளத்தில் துக்கமே நிறைந்து நின்றது.

பல அரக்க வீரர்களுடைய மாளிகைகளில் ஒவ்வொன்றாகப் பிரவேசித்துப் பார்த்தான். யுத்த யானைகளும் ஜாதிக் குதிரைகளும் தேர்களும் ஆயுதசாலைகளும் எங்கும் நிறைந்திருந்தன. எங்கும் வீரர்கள் ஆயுதபாணிகளாய் நின்றார்கள். ஸ்திரீகளும் விளையாட்டுக்களும் பாட்டும் சங்கீதவாத்திய முழக்கமுமாக ஆனந்த மயமாயிருந்த மாளிகை வரிசைகளையும் தோட்டங்களையும் பார்த்து விட்டுப் பிறகு மலை போல் உயர்ந்து நின்ற ஒரு மிகப் பெரிய அரமனையைக் கண்டான். அதன்முன் நின்ற யானை, குதிரை, காலாட்படைகளையும் அதைச் சுற்றியிருந்த மதிலையும் மாளிகையின் அபார அழகும் ஆபரண தோரணங்களும் பார்த்து இதுவே ராவணனுடைய அந்தப்புரம் என்று தெரிந்து கொண்டு செல்வ மயமான லங்கா நகரத்துக்கே ஒரு சுடர்விட்டு ஜொலிக்கும் ஆபரணம் போலிருந்த அந்த அரமனைக்குள் பிரவேசித்தான்.

பூவுலகத்தில் ஒரு சுவர்க்கம்போல் அந்த அரமனை விளங்கிற்று. ராவணனுடைய நிகரற்ற பராக்கிரமத்துக்கும் பலத்துக்கும் தகுந்த அரமனையாகவே இருந்தது. தோட்டமும்

தோட்டத்தில் சந்தோஷமாக விளையாடிக் கொண்டிருந்த பறவைகளும் அங்கங்கே மனத்தைக் கவரும் சித்திரங்களால் சித்திரிக்கப்பட்ட விஹார ஸ்தலங்களும் கண்டு ஹனுமான் ஆச்சரியத்தில் மூழ்கினன்.

'ஆகா! என்ன செல்வம்! என்ன அற்புத சுகம்!' என்று வியந்தான். உடனே வியப்புகலைந்து, 'ஜானகியைக் காணவில்லையே! வந்த காரியம் முடியவில்லையே! அற்புதங்களைக் கண்டு ஆச்சரியப்பட்டுப் போவதில் என்ன பயன்?' என்று ராம காரியக் கவலையில் மூழ்கினன்.

அந்த மாளிகைகளுக் இடையில் ராவணனுடைய பிரத்தியேக அரமனைக்குள் சென்று அங்கே எல்லா பாகங்களிலும் நுழைந்து பார்த்தான். 'இது சுவர்க்கமோ? இது தேவலோகமோ?' என்று ஆச்சரியமடையும்படியான அலங்காரங்களும் தங்கமும் வெள்ளியும் தந்தமும் ரத்தினங்களும் முத்தும் மிக நுண்ணிய சிற்ப வேலை செய்த கம்பங்களும் சித்திர வேலைப் பண்டங்களும் கண்டான். மத்தியில் புஷ்பக விமானத்தைப் பார்த்தான்.

அது பிரம்மாவிடம் குபேரன் அடைந்த அற்புத விமானம். குபேரனை ஜெயித்து ராவணன் அதை லங்கைக்குக் கொண்டு வந்து வைத்திருந்தான். வசிஷ்டருடைய பசுவைப் போல் எதை வேண்டினாலும் தரும் அந்த அற்புத விமானத்தைப் பார்த்தான்.

ராவணனுடைய அந்தப்புரத்தில் நுழைந்தான். அது ஒரு போக சமுத்திரமாகவே இருந்தது. எண்ணற்ற அழகிய ஸ்திரீகள் தூங்கிக் கொண்டிருந்த அந்த விஸ்தாரமான இடம் பல நிறப் பூங்கொடிகள் நிறைந்த வனம் போல் பிரகாசித்தது. வந்த காரியத்தை அனுசரித்து ஹனுமான் படுத்திருந்த ஸ்திரீகளை யெல்லாம் பார்த்தான். படுத்துத்தூங்கியிருந்த அவர்கள் ஒருவரைக் காட்டிலும் ஒருவர் சௌந்தரியமாகவும் காம மயக்கத்தில் ஈடுபட்டவர்களாகவும் காணப்பட்டார்கள். எல்லாருமே சந்தோஷமாகவும் சம்மதமாகவும் இருந்த காட்சியை மாருதி அங்கே பார்த்தான். ராவணனுடைய காமரூபச் சக்தியும் பௌருஷமும் அந்த திவ்விய சௌந்தரிய ஸ்திரீகளை முற்றிலும் வசப்படுத்தி யிருந்ததைக் கண்டான்.

"இந்த ஸ்திரீ கூட்டத்தில் சீதை இல்லை யென்பது நிச்சயம். அவள் ஒருநாளும் அரக்கனுக்கு வசப்பட்டிருக்க மாட்டாள் அல்லவோ? அவளை இங்கே நான் தேடுகிறேனே. நான் எவ்வளவு பைத்தியக்காரன்! சீதை இவர்களுக்குள் ஒருத்தியாக இருக்க முடியாது" என்று தீர்மானித்தான்.

பிறகு பார்த்துக் கொண்டே சென்றான். ஒரு அறையில் அநேக சிறந்த சயனாசனங்களைக் கண்டான். தந்தமும் தங்கமும் வைடூரியங்களும் இழைத்த பல அழகிய மஞ்சங்களுக்கிடையில் ஒரு மிகச் சிறந்த மஞ்சத்தைக் கண்டான். அதன்மேல் மேரு மலை படுத்துத் தூங்குவதைப்போல் படுத்திருந்தான் ராவணன். அந்த அரக்கனுடைய வடிவத்தின் கம்பீர அழகும் பொலிவும் ஹனுமானை ஒரு கணம் நடுங்கச் செய்தது.

ஒதுங்கி நின்று பார்த்தான். யானை துதிக்கைகளைப் போன்ற கைகளும், மார்பில் ஐராவத யானையின் தந்தத்தால் குத்துபட்ட காயக்குறியும் உடம்பில் இந்திரனுடைய வஜ்ராயுதத்தாலும் விஷ்ணு சக்கரத்தாலும் உண்டான வடுக்களும் பார்க்கப் பார்க்க அரக்கனுடைய கம்பீர அழகு மாருதியின் மனதைக் கவர்ந்தது.

அதன்மேல் அங்கே சுற்றிலும் படுத்துத் தூங்கும் பல ஸ்திரீகளைப் பார்த்தான். கீதம்பாடிக்கொண்டே தூங்கிப் போன பல ஸ்திரீகள் அவரவர்களுடைய வாத்தியச் சாமான்களைக் கட்டிக் கொண்டு அப்படியே கிடந்தார்கள்.

அப்பால் ஒரு திவ்விய மஞ்சத்தின் மேல் ஒரு ஸ்திரீ படுத்திருந்ததைக் கண்டான். அந்தப்புரத்துத் தலைவியாக விளங்கினள். அவளுடைய அவயவ அழகும் முக லக்ஷணமும் கண்டு இவளே சீதை என்று ஹனுமான் ஒரு கணம் சந்தேகித்தான். முகத்தில் உத்தமகுணங்களைக்கண்டான். 'கண்டு விட்டேன்' சீதையை என்று குதித்தான். அடுத்த கணம் "சீ! இது என்ன மடமை! சீதை இப்படி சுகமாகத் தூங்குவாளா? இப்படி ஆபர

ணங்கள் பூண்டு அன்னிய புருஷனுடைய அறையில் படுப்பாளா? இப்படி நான் எண்ணியது பெருங் குற்றம்'' என்று தனக்குள் சொல்லித் துயரத்தில் மூழ்கினான்.

பிறகு, "தனக்குச் சம்மதிக்காதபடியால் சீதையை இந்த அரக்கன் கொன்று விட்டே யிருப்பான், நான் தேடித் தேடிச் செல்வதில் என்ன பயன்?'' என்று எண்ணினான்.

* * *

ராவணனுடைய அந்தப்புரம் முழுதும் பார்த்து விட்டான். படுக்கும் இடம், சாப்பாட்டுச்சாலை, பானசாலை, சங்கீத சாலை, இன்னும் பல இடங்களும் நன்றாகத் தேடிப் பார்த்தாயிற்று. எங்கும் சீதையைக் காணவில்லை.

"சீதையைத் தேடிக் காண்பதற்காக நுழையக் கூடாத இடமெல்லாம் நுழைந்து பார்த்தேன். ஸ்திரிகள் படுத்திருக்குமிடம் புகுந்து தருமத்தைக் கூட ஓரளவு புறக்கணித்து விட்டேன். காரியம் சித்தியாகவில்லை'' யென்று துயரப்பட்டு பானசாலையை விட்டு வெளியே தோட்டத்துக்குள் சென்று அங்கே பற்பல கொடிகளால் பின்னப்பட்ட பந்தல்களிலும் கொட்டகைகளிலும் விஹார ஸ்தலங்களிலும் தேடினான். எங்கும் காணவில்லை.

"லங்கா நகரம் முழுதும் பார்த்தாய் விட்டது. ராவணன் அரமனை முழுதும் தேடியாய் விட்டது. இனி என்ன இருக்கிறது? சீதையைக் காணாமல் திரும்புவதா? இங்கேயே என் உயிரைத்தான் விடவேண்டும். அதுவே நான் செய்யக் கூடியது'' என்று தீராத துக்கத்தில் மூழ்கினான்.

* *

மறுபடியும் "சீ! சீ! இப்படி மனத் தாழ்ச்சி அடைய லாகாது. தீரனுக்கு இது தகுந்த லக்ஷணமல்ல'' என்று கிளம்பி மறுபடியும் ஒரு அங்குலம் மிச்சமின்றி எல்லா இடங்களையும் நன்றாகக் கவனித்துத் தேடிப் பார்த்தான். மூடியிருந்த கதவுகளையும் ஜன்னல்களையும் திறந்து பார்த்தான். கோர ரூபமான ராக்ஷஸப் பெண்களையும், மிக சவுந்தரியமான பல மானுடப் பெண்களையும் நாக கன்னிகைகளையும், அரக்கன் அபகரித்து வந்த பல அழகிகளையும் கண்டான். சீதையைக் காணவில்லை.

இன்னது செய்வது என்று தோன்றாமல் ஹனுமான் மனம் மிகத் தத்தளித்தது. "காரியம் கைகூடவில்லை யென்று கிஷ்கிந்தைக்குத் திரும்பினால், கேட்போருக்கு நான் என்ன சொல்லுவேன்? சீதையைப் பற்றி இனி ஆசையில்லை யென்றால் ராமன் கதியென்ன வாகும்? உயிரை விடுவான். அதற்குப் பிறகு மற்றவர்கள் கதியென்ன? என் முயற்சி வீணாயிற்று என்று சுக்ரீவனிடம் சொல்வதை விட இங்கேயே நான் காட்டிலும் சமுத்திரக் கரையிலும் வாழ்நாளைக் கழித்து விடுவது மேலாகும். அதுதான் ஏன்? தற்கொலை செய்துகொள்வதே நலம். சீதை லங்கையில் இருக்கிறாள் என்று சம்பாதி சொன்ன சொல் பொய்யா? அல்லது இவ்விடத்தில் இருந்தவள் துஷ்ட ராக்ஷசனால் கொல்லப்பட்டாளா? அவளை அரக்கிகள் தின்று விட்டு மிருக்கலாம். ஒன்றும் தோன்றவில்லையே. என்ன செய்வேன்!'' என்று இப்படி ஹனுமான் பலவாறாகச் சிந்தித்துச் சிந்தித்துக் கவலைக் கடலினின்று கரையேற வழி தெரியாம லிருந்தான். அச்சமயம் உயர்ந்த மதிலால் சூழப்பட்ட ஒரு விஹார வனத்தைக் கண்டான்.

"ஆஹா! இந்த இடம் நான் தேட வில்லை. இங்கே கட்டாயம் சீதையைக் காண்பேன்!'' என்று, வாயு புத்திரன் ராமன் லக்ஷ்மணன் சீதை சுக்ரீவன் இவர்களைத் தியானித்தான். ருத்ரன், இந்திரன், யமன், வாயு, சந்திரன், சூரியன், மருத்கணங்கள் இவர்களை மனதால் வணங்கி பிரார்த்தனை செய்தான்.

"இது ஒரு தனி நந்தவனமாக இருக்கிறது. நன்றாகக் காக்கப்பட்டு வருகிறது. இவ்விடத்திலே சீதை வைக்கப் பட்டிருக்கிறாள் என்பது நிச்சயம்'' என்று ஹனுமானுடைய உள்ளத்தில் ஒரு நம்பிக்கை தோன்றிற்று.

மறுபடியும் தேவர்களை யெல்லாம் நமஸ்கரித்து விட்டு அந்த அசோக வனத்துச் சுவர்மேல் குதித்து ஏறி நின்றான். மிக அழகிய ஒரு உத்தியான வனம் கண்டான்.

# கால்கேட்
# குளோரோபில் டூத்பவுடர்




## குளோரோபிலின் பூரண நன்மைகளை நீங்கள் உபயோகிக் கையில் தருகிறது!

## வீரிய குளோரோபில்தான் பலன் தரும்!

வீரிய குளோரோபிலின் நன்மைகளை எல்லாம் புதிய கால்கேட் குளோரோபில் டூத் பவுடர் தருகிறது வீரிய குளோரோபில் தான் வாய் நாற்றம், கிரிமிகளை நீக்கி ஈறுகளைப் பலப்படுத்துகிறது. கால்கேட் முறையில் குழந்தைகளுக்கு குளோரோபில் கவனிப்பை அளியுங்கள்—அரிய சந்தர்ப்பம்.



### வாய் நாற்றத்தை அழிக்கிறது

ஒரு விசேஷ சூத்திரம் காரணமாக கால்கேட் குளோரோபில் டூத்பவுடர் துரிதமாக, திருத்தமாக வேலை செய்கிறது. உங்கள் வாய் அதிகநேரம் புதுமை, இனிமையுடன் இருக்கிறது. அதன் வாசனை ஜோரானது!

### கிருமிகளை ஒழிக்கிறது



சாப்பிட்டவுடன் கால்கேட் குளோரோபில் டூத் பவுடரை உபயோகிப்பதால் பற்களைச் சிதைக்கும் அமிலங்கள் ஒழிகின்றன.



### ஈறுகளை பலப்படுத்துகிறது

ஈறுகளை குளோரோபில் பலப்படுத்துகிறது. தினசரி கால்கேட் குளோரோபில் டூத் பவுடரை உபயோகிப்பதால் குளோரோபிலின் பூரண நன்மைகளைப்பெற்று ஈறுகளைப் பாது காக்கலாம்.




CTPG/1

# ஹாஸ்யக் களஞ்சியம்

சாமா




"வீட்டுக்கு வீடு மீன் வளர்க்க ஆரம்பித்து விட்டார்களே! இதென்ன மீன்களைக் கூடு போட்டு மூடி யிருக்கிறீர்களே?"
"அது பறக்கும் மீன்கள். அதற்குத்தான்!"




"அட! பேரிச்சம்பழக்காரன் இரண்டு காசு சம்பாதித்துக் கார் வாங்கி விட்டானே!"
"போகட்டும்! அதற்கு ஏன் பொறாமைப் படறீங்க!"



"குஞ்சாலாடு செய்யப் போகிறேன். அப்புறம் வாய் கொள்ளவில்லை என்பீர்களே என்று, வாயை முன்னாலேயே அளவு எடுத்துக் கொள்கிறேன்!"



"வெய்யிலில் வந்து இருக்கிறீர்களே? ஐஸ் வாட்டர் வேணுமா? ஐஸ் மோர் வேணுமா? இல்லா விட்டால் பாதாம்கீர் வேணுமா?"
"எல்லாவற்றிலும் சத்யா இரண்டு, இரண்டு கொண்டு வரச் சொல்லு!"

"கண்ணாமூச்சிக்கு வரேன்! ஆனால் நீ எங்கே ஒளிந்து கொள்ளப் போகிறேன்னு சொன்னால்தான் நான் கண்ணைப் பொத்திக் கொள்வேன்!"








"இப்படியே அந்த அரசமரத்தைப் பிரதட்சண மாகப் போகலாமா?"
"ஐயையோ! வேண்டவே வேண்டாம்! அப் பிரதட்சணமாகப் போங்கோ!"



"கைதானே நீளமாகப் போச்சு! இதோ வெட்டி விடுகிறேன்!"
"ஐயையோ! வேண்டவே வேண்டாம். நீளமாகவே இருக்கட்டும்!"



"சாப்பாட்டுச் செலவையும் பார்த்துக் கொண்டு டாக்டர் பில்லும் கொடுக்க முடியவில்லை! எதை யாவது ஒன்றை நிறுத்த வேணும்!"
"சாப்பாட்டை நிறுத்திக் கொண்டு விடலாம்!"





"அம்மா! என் விஷமம் இன்றைக்கு உன்னாலே தாங்கவே முடியவில்லையோன்னோ? என்னை அந்தப் பட்சண அறையில் போட்டுப் பூட்டிவிடு!"

# சந்தர்ப்பம் எதுவாயினும் கோடக் ஸ்னப்ஷாட்டுக்கு அரிய வாய்ப்பு கிடைக்கும்



எவ்வளவு க்ஷணம் வருடங்கள் பறந்தோடுகின்றன! இன்னும் சில ஆண்டுகளில், நீங்கள் பார்த்திருக்கவே, உங்கள் சின்னப்பையன் வளர்ந்து பெரியவனுகிவிடுவான். இருந்தாலும், என்ன ஆச்சரியம், 'கோடக்' ஸ்னப்ஷாட்டுகள்மட்டும் எடுத்துவைத்திருந்தால் அவை அவனது குழந்தைப் பருவத்தின் அருமையான க்ஷணங்கள் ஒவ்வொன்றையும் உங்களுக்கு நினைப்பூட்டும் . . . . தவிர, 'கோடக்' பிலிம்களைக் கொண்டு சிறந்த படங்கள் எடுப்பதும் மிகச்சுலபமே.




வெரிக்ரோம்: வெளிக்காட்சிகளை, சகஜமான வெளிச்சத்தில் எந்த காமிராவைக் கொண்டும் எடுப்பதற்கு உகந்த பிலிம் இது.




ப்ளஸ் – X : விளக்கமான பெரிய என்லார்ஜ்மெண்டுகள் தரவல்ல தெளிவான படங்கள் எடுப்பதற்கு மிகச்சிறந்தது.




சூப்பர் – X X : துரிதமான செயல் காட்சிகளுக்கும், மங்கிய வெளிச்சத்தில் அல்லது வீட்டினுள் படம்பிடிக்கவும் இணையற்றது.

## ஒவ்வொரு வகைப் படத்திற்கும் உகந்த ஒரு 'கோடக்' பிலிம் கிடைக்கும்

கோடக் லிமிடெட்
(இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது)
பம்பாய் - கல்கத்தா - டில்லி
மதராஸ்

K. 9036




## 30. வீர சாகஸம்

"உமா, எதைக் கண்டும் பயப் படக்கூடாது. துணிந்து ஒரு காரியத்தில் இறங்கி விட்டோமானால் பயந்து பின் வாங்குவது தவறு. நாம் இந்தத் தங்க மாம்பழத்துடன் புறப் பட்டதிலிருந்து நமக்கு அடுத்து அடுத்து எத்தனை இடைஞ்சல்கள் வந்து கொண்டிருக்கின்றன! ஆனால் அத்தனை இடைஞ்சல்களி லிருந்தும் கடவுள் அருளால் நாம் தப்பித்துக் கொண்டே வந்திருக்கிறோமில்லையா?"

"அண்ணா, நீ காட்டில் சிங்கத்தைக் கொன்றது போல உன் வில்லின் உதவியால் ஒரே அம்பினால் அந்த நாயைக் கொன்றால் என்ன?" என்றாள் உமா.

அதற்குப் பிரபாகரன் சிரித்துக் கொண்டே, "அப்படி நடந்தால் காரியம் எல்லாம் சுலபமாக முடியும். அதற்குச் சந்தேகமில்லை சிங்கம் கொடிய மிருகமாக இருந்தாலும் அதை நாம் பார்த் தாலோ அல்லது அது நம்மைப் பார்த் தாலோ ஒரு ஆபத்தும் நேரிடாது. தைரியமாய் எதிர்த்துச் சண்டை செய்யலாம். ஆனால் இந்த நாயிடம் நம் முடைய சாமர்த்தியம் ஒன்றும் பலிக் காது என்று தோன்றுகிறது. நான் அதைப் பார்த்துக் குறி வைக்கும்போது அதன் விழிகளும் என் விழிகளும் எதிர்ப் பட்டால் உடனே நான் சிலையாக மாற வேண்டியதுதான்" என்றான்.

"ஆனால் எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது" என்றாள் உமா.

"என்ன? என்ன? சீக்கிரம் சொல்" என்று அவசரப்பட்டான் பிரபாகரன்.

"அது ஏமாந்து நிற்கும்பொழுது குறி வைத்து அடித்தால் அதைக் கொன்றுவிடலாம். அது ஏமாந்து இருப் பதற்கு ஏதாவது தின்பண்டங்களை வாங்கி அதன் எதிரில் விட்டெறிந்தால் தின்பண்டங்களை ஆவலாகத் தின்னும். அப்பொழுது அதன் மீது குறி வைத்து எளிதில் கொன்று விடலாம். எப்படி என் யோசனை?" என்றாள் உமா.

"உமா! அதனால் என்ன பிரயோஜனம்? துறவி சொன்னது உனக்கு ஞாபகமில்லையா?"

"என்ன அண்ணா சொன்னார்? எனக் குச்சட்டென்று ஞாபகம் வரவில்லையே?"

"கல்லறைத் தீவிலுள்ள நாய் காற் றைத் தவிர வேறு ஆகாரத்தைச் சாப் பிடாது. தண்ணீரையும் குடிக்காது என்று அவர் சொன்னது உனக்கு ஞாபகம் இல்லையா, உமா?"




அல்லிப் புஷ்பம் ஆடாக மாறும்.
திருப்பிப் பாருங்கள்.

"ஆமாம், அண்ணா! இப்பொழுது தான் எனக்கு ஞாபகம் வருகிறது. அப்படியானால் அந்த நாயை யாராலும் கொல்ல முடியாது போலிருக்கிறது. அப்படியானால் நம் கதி?"

"உமா, ஏன் பயப்படுகிறாய்? கல்லறைத் தீவுக்குப் போய்ப் பார்க்கலாம். இல்லாவிட்டால் இரண்டு பேரும் சிலையாக மாறி விடலாம்!"

"என்ன அண்ணா உளறுகிறாய்? எப்படி நாயினின்று தப்பித்துக் கொள்ளுவது? அதன் கழுத்தில் உள்ள சாவியைக் கொண்டு அல்லவா தங்க மந்திர மாம்பழத்தைத் திறக்க வேண்டும்? அந்த வயல் காட்டுக் கிழவி மிகவும் பொல்லாத கிழவிபோல இருக்கிறது. சாவியை வைப்பதற்கு இந்தப் பொல்லாத நாயின் கழுத்துத்தானா அகப்பட்டது?"

"இப்பொழுது அதை நினைத்துக் காலத்தை வீணாக்குவானேன்? சீக்கிரம் இந்தப் படகில் ஏறிக்கொள்" என்றான் பிரபாகரன். உடனே உமா படகில் ஏறிக் கொண்டாள்.

பிரபாகரன் படகை ஓட்டிக் கொண்டிருக்கும் சமயத்தில் உமா படகிற்குள் சென்றாள். படகில் பல நிலைக் கண்ணாடிகள் மாட்டப் பட்டிருந்தன.

கண்ணாடிகள் எல்லாம் படகுக்கு உள்புறம் மாட்டப்பட்டிருந்தன. ஒரு கண்ணாடியில் தன் அழகைப் பார்க்க ஆசை கொண்ட உமா தன் முகத்தைப் பார்த்தாள். பார்த்தவுடன் அவளுக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவள் முகம் பூதத்தைப் போலத் தெரிந்தது. உடனே பக்கத்தில் மாட்டியிருந்த மற்றொரு கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்தாள். அதிலேயும் அவள் முகம் பூதத்தின் முகத்தைப் போலத் தோன்றியது. 'அடாடா! இப்படித் திடீரென்று என் முகம் பூதத்தைப் போல மாறுவதற்கு என்ன காரணம்? எனக்குப் பயமாக இருக்கிறதே! கல்லறைத் தீவுக்குச் செல்லுவதற்கு முன்பாகவே என் முகம் பூதத்தின் முகம் போல மாறி விட்டதே! இனிமேல் அங்கு சென்றால் என்ன ஆகுமோ? இங்கே மந்திர சக்தி உள்ள பேய் பிசாசுகள் ஏதாவது இருந்து என் முகத்தை மாற்றி விட்டதா? என் முகம் பூதமாக இல்லாமல் என் இயல்பாக உள்ள முகத்தை எப்பொழுது நான் திரும்ப அடைவேனோ?' என்று கலங்கினாள்.

"அண்ணா அண்ணா! கல்லறைத் தீவுக்கு நீ படகை ஓட்டியது போதும். திரும்பி நாம் வந்த வழியே படகை விடு. நான் கல்லறைத் தீவுக்கு வரவே மாட்டேன்" என்று அழுது கொண்டே சொன்னாள் உமா.

உடனே பிரபாகரன், "என்ன உமா, திடீரென்று ஏன் அப்படிச் சொல்லுகிறாய்?" என்று கேட்டான்.

"ஏன் சொல்லுகிறேனா? என் முகத்தைப் பார்த்தால் உனக்குத் தெரியவில்லையா?" என்று கேட்டாள்.

பிரபாகரன், "உமா! எனக்கு ஒன்றும் தெரியவில்லையே! எப்பொழுதும் போலத்தானே உன் முகம் இருக்கிறது" என்று பதிலளித்தான்.

"என்னை ஏமாற்றுவதற்காக உண்மையை மறைத்துப் பேசாதே. என் முகம் பூதத்தைப் போலப் பெரிய முகமாக மாற வில்லையா? உண்மையைச் சொல், பிரபாகர்!" என்றாள் உமா.

பிரபாகரனுக்கு உமா திடீரென்று அப்படிச் சொல்லுவதன் காரணம் தெரியவில்லை. சற்று விழித்தான். பிறகு, "உன் முகம் பூதத்தைப் போல் தோற்றமளிக்கிறது என்று உன்னிடம் யார் சொன்னது?" என்று வியப்புடன் கேட்டான் பிரபாகரன்.

"அதோ படகுக்குள் மாட்டியிருக்கும் ஒரு கண்ணாடி அல்ல, எல்லாக் கண்ணாடிகளும் சொல்லுகின்றன. கண்ணாடி பொய் சொல்லாது அல்லவா?" என்று பதிலளித்தாள் உமா.

பிரபாகரனுக்கு விஷயம் புரிந்தது. "உமா, இந்தப் படகில் மாட்டியிருக்கும் கண்ணாடிகள் கட்டாயம் பொய் சொல்லும். அதை இப்பொழுது உனக்கு நிரூபித்துக் காட்டுகிறேன். அப்பொழுது தான் நீ நம்புவாய்" என்று சொல்லி உமாவை அழைத்துக் கொண்டு ஒரு கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்தான். அவனுடைய முகம் பூதத்தைப் போலப் பெரிதாகத் தெரிந்தது. உடனே உமாவையும் தன்



# கண்ணாடியில் உங்கள் உருவம்

உங்கள் சருமமும் மேனியும் ரக்ஷித்து போஷிக்கப்பட வேண்டியது அவசியம். சருமத்தை போஷிப்பதற்கு மார்க்கம் ஒன்றே என்று புத்திசாலியான பெண்கள் அறிவார்கள். தினம்தோறும் இவர்கள் ''ஹாஸலைன்' ஸ்னோ'' வை '' 'HAZELINE' SNOW'' தங்களுடைய மிருதுவான சருமத்தில் உபயோகித்து நெகிழச் செய்கிறார்கள். இது சருமத்தில் இயல்பாகப் பொருந்தி சருமத்திற்கு மிருதுத்தன்மை வெண்மை, காந்தி இவைகளை அளிக்கின்றது.




## "'HAZELINE' SNOW"

(TRADE MARK)

"' ஹாஸலைன்' ஸ்னோ" (டிரேட் மார்க்)



பர்ரோஸ் வெல்கம் அண்ட் கம்பெனி (இந்தியா) லிமிடெட், பம்பாய்.

## சிறுவர்கள் சித்திரப் போட்டி







னுடன்கூட அந்தக் கண்ணாடியைப் பார்க்கச் செய்தான்.

"உமா, உன் முகம்தான் பூதத்தைப் போலப் பெரியதாகத் தெரிகிறது என்று சொன்னாய். அதே கண்ணாடியில் என்னுடைய முகம் எப்படியிருக்கிறது, பார்த்துச் சொல், பார்ப்போம்" என்றான் பிரபாகரன்.

"அண்ணா, உன் முகமும் அதில் பூதத்தைப் போலத்தான் தோன்றுகிறது" என்றாள் உமா.

"அப்படியானால் கண்ணாடி பொய் சொல்லாது என்று சொன்னாயே. இப்பொழுது பார்த்தாயா?" என்றான் பிரபாகரன்.

உடனே உமா, "இப்பொழுது எனக்குப் புரிகிறது. இங்கே இருக்கும் கண்ணாடிகள் பொய்த் தோற்றத்தையே தான் காண்பிக்கின்றன. அதற்குச் சந்தேகமில்லை. ஆனால் எதற்காக அண்ணா இது மாதிரியான கண்ணாடிகளை இங்கு மாட்டியிருக்க வேண்டும்?" என்று கேட்டாள்.

"உமா, இந்தக் கண்ணாடிகள் வேணுமென்றேதான் இங்கு மாட்டப்பட்டிருக்கின்றன. கல்லறைத் தீவுக்குப் போகிறவர்களை ஏமாற்றி அவர்கள் பயம் கொள்ளும்படி செய்து, அவர்கள் வந்த வழியே திருப்பி அனுப்புவதற்காகச் செய்திருக்கும் ஏற்பாடு. இந்தப் பூதம் காட்டும் கண்ணாடிகளைப் பற்றித் துறவி கோவிலில் சொன்னது உனக்கு ஞாபகமில்லையா? அதனால்தான் நீ அந்தக் கண்ணாடிகளைப் பற்றி என்னிடம் பேசிய பொழுது நான் பயப்படவில்லை" என்று சொன்னான் பிரபாகரன்.

"ஆமாம், ஆமாம். துறவி சொன்னது இப்பொழுது எனக்கும் ஞாபகம் வருகிறது. இங்கு வந்தவுடன் நான் அடைந்த பயத்தினால் நான் முன்பு நடந்ததை மறந்து விட்டேன். இனிமேல் அந்தக் கண்ணாடிகளைப் பார்த்துப் பயப்பட மாட்டேன்" என்றாள் உமா.

பிரபாகரன் சிரித்துக் கொண்டே படகை அக்கரை சேர்த்தான். அங்கிருந்த மரத்தில் ஜாக்கிரதையாகப் படகைக் கட்டி வைத்தான். (தொடரும்)

1. டி. ராஜலக்ஷ்மி, வயது 11½, மயிலாப்பூர், சென்னை. 2. எம். நடராஜன், வயது 12, மாதுங்கா, பம்பாய். 3. ச. மனோகரன், வயது 11, மானிப்பாய், இலங்கை.

வசீகரமான

நீடித்து உழைக்கவல்ல

சொற்ப சிலவில்

# காங்கிரிட் வீடுகள்

உங்கள் காங்கிரிட் வீடுகளை எத்தகைய விசித்திர வேலைப்பாட்டி லும், சைசிலும், மாடிகளிலும் அமைக்கலாம். காங்கிரிட் வீட்டின் முதற்சிலவு நேர்மையானது. ஒரு ஆயுட்காலம் வரை உழைக்க வல்லது. அதன் செப்பனிடும் சிலவு மிகக் குறைவானது.

குறைந்த சிலவில் கட்டக்கூடிய வீடுகளின் பல விதமான பிளான் களையும், அமைப்பையும் சித்தரித் துக்காட்டும் 40 டிசைன்கள் கொண்ட புத்தகத்திற்கு தி காங்கிரிட் அசோசியேஷன் ஆப் இந்தியா, 9, மௌண்ட் ரோடு, மதராஸுக்கு எழுதுங்கள். விலை ரூ. 1-8-0 தபால் சிலவு அணா 0-10-0 பிரத்தியேகம்.




இந்த புகழ் பெற்ற ஏ சி சி சிமெண்ட்
ஊகமெனும் சோதனையில் தேறியது.






தி சிமெண்ட் மார்க்கெடிங் கம்பெனி ஆப் இந்தியா லிமிடெட்
9, மௌண்ட் ரோடு, மதராஸ். 4/12 ரேஸ் கோர்ஸ் ரோடு கோயம்பத்தூர்.
ஷுகர் கம்பெனி பில்டிங், பங்களூர்.

SISTA'S-CHI 188 TAM

○●○ இந்த ஆண்டில் விருது பெற்ற கலைஞர்களில் ஒருவரான நாட்டிய மணி ஸ்ரீமதி பாலஸரஸ்வதி, விருது பெற்ற மற்றொரு நாட்டியக் கலைஞரான ஸ்ரீ சம்பு மஹாராஜைப் பற்றி எழுதுகிறார்:—

# சம்பு மஹாராஜ்

டி. பாலசரஸ்வதி

**1934**-ம் ஆண்டில் உதய சங்கரின் அழைப்பை ஏற்றுக் கொண்டு காசியில் நடந்த சங்கீத மகாநாட்டுக்கு நான் சென்றபோது தான் முதன் முதலாக ஸ்ரீ சம்பு மஹாராஜின் நடனம் பார்க்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. தலைக்கு 10 அல்லது 15 நிமிஷங்கள் தான் மகாநாட்டில் வித்வான்கள் கலந்து கொள்ள முடிந்தது. கதக் நாட்டியத்துக்குப் பாட்டுக் கச்சேரிகளை விடக் கூடுதல் நேரம் கிட்டியது. அந்த நடனத்தின் சம்பிரதாயமே புதியதாக இருந்தது. கச்சேரியும் நீண்ட நேரம் நடைபெறவில்லை. எனக்கு அப்போது அநுபவ பூர்வமாக ரஸிக்கும் பிராயம் அல்ல. அன்றைய மேடையில் முதலில் ஆஷா ஓஜாவும் பிறகு சம்பு மஹாராஜும் ஆடினார்கள். நட்டுவனார் இல்லாத அரங்கே புதுமையாக இருந்தது எனக்கு. பின்பாட்டுக்கு ஆளைக் காணவில்லை. சொல்லுக் கட்டுகளைத் தானே பாடிக் கொண்டே ஆஷா ஓஜா ஆடத் தொடங்கினாள். சொல்களும் இசை, உணர்ச்சி, பாவம், பக்தி நிரம்பி இருந்தன. இதில் ''கணபதி, கணபதி; காளி, காளி'' என்ற சொற்கள் ஒலித்துக் கொண்டிருந்தன. மஹாராஜின் நடனம் மேலும் புதுமையாகக் காணப்பட்டது. மேடையில் புருஷர்கள் நடனம் ஆடுவதை நான் அதுவரை கண்டதே இல்லை. இரண்டொரு முறை உதய சங்கரின் நடனம் பார்த்திருந்தாலும், அதன் போக்கும் சூழ்நிலையும் தனிப்பட்டவை. மஹாராஜின் நாட்டியத்தில் திகைப்புத் தீருவதற்குள் ஆட்டம் முடிந்து விட்டது. மீண்டும் இவரது நடனத்தைப் பத்து வருஷம் கழித்துத்தான் பார்க்க முடிந்தது. விக்ரம விழாவின்போது பம்பாயில் ஆடினார். அரை மணி நேர நடனத்தின் ருசி கடை வாய்ப் பல்லுக்குக் கூடப் போதவில்லை. மீண்டுமொரு முறை இதைக் காண மற்றுமோர் பத்து ஆண்டுகள் பொறுக்க வேண்டியதாகி விட்டது. சென்ற மாதம் தில்லியில் ஜனாதிபதியிடம் விருது வாங்கும்போதுதான் கண்டேன்.

சம்பு மஹாராஜுக்கு வயது சுமார் ஐம்பது இருக்கும். ஆனால் நடனம் ஆடும் கால்களின் வயது என்றும் பதினாறு. கண் படைத்தவர்கள் அந்தக் கால்களில் பேசும் அடைவுகளை அவசியம் பார்க்க வேண்டும். பார்த்தாலொழிய ஏட்டுச் சுரைக்காய் போன்ற வர்ணனையால் அவற்றைத் தெரிந்து கொள்வது கடினம். ''மஹாராஜ் தம் கால்களில் ஒரு போட் மெயிலைக் கட்டிக் கொண்டிருக்கிறார்'' என்று ஒரு வகையில் சொல்லலாம். பின்னணியில் சாரங்கியும் தபேலாவும் முழங்க ''தத்தின் தின்னா, தத்தின் தின்னா'' என்ற சொல் மஹாராஜின் கால்களில் பேசத் தொடங்கின. கொஞ்சின என்று சொன்னால் கொஞ்சமும் மிகையில்லை. பின்னணியில் நட்டுவனார் தாளம் தட்டும் சம்பிரதாயம் இல்லை. ஆனால் தாளத்தின் எடுப்பை சமத்துக்குச் சமம் சாரங்கியில் வாசிக்க அநேகமாகத் தபேலாவில் ''தத்தின் தின்னா'' மட்டுமே ஒலித்தது. அன்று கையாளப்பட்ட த்ரு தாளத்தை (நம்முடைய ஆதி தாளத்துக்கு ஒப்பானது) தபேலா வித்வான் வின்யாசமும் செய்துவந்தார். போட் மெயில் ஸ்டேஷனை விட்டுப் புறப்படும்போது நிதானமாகப் புறப்படுவது போலத் தபேலாவிலும் நடனம் செய்யும் பாதங்களிலும் 'தத்தின் தின்னா' என்ற சொல் மெதுவாகத் தொடங்கியது. நிமிஷத்துக்கு நிமிஷம் போட் மெயிலின் வேகம் ஓங்குவதைப் போல் 'தத்தின் தின்னா'வும் துரிதமாகி வந்தது.

ராஷ்டிரபதியின் விருதுகள் பெற்ற கலைஞர்களான கோவிந்தராவ் பர்ஹாம்பூர்கர், ஆனந்த மனோஹர் ஜோஷி, சம்பு மஹாராஜ், ராஜரத்தினம் பிள்ளை, விசுவநாதய்யர், குப்பி வீரண்ணா, பால கந்தர்வா, ஸ்ரீமதி பாலசரஸ்வதி முதலியவர்களை இந்தப் படத்தில் காணலாம்.



அந்தத் துரித காலச் சொற்களைக் கொன்னக்கோல் செய்து பார்த்தால் கூட நாக்குப் பிரளவில்லை. அவ்வளவு வேகத்தில் நடனம் ஆடிக்கொண்டிருந்தார் மஹாராஜ். இடை இடையே அவர் சில தீர்மானங்களைச் சொல்லுவார். அதைத் தொடர்ந்து அந்தத் தீர்மானம் தபேலாவிலும் கால்களிலும் பேசும். தபேலா வித்வான் தொடர்ந்து ''தத்தின் தின்னு'' அமைத்துக் கொண்டிருக்கும்போது மஹாராஜ் தமது கால்களில் ''தின்னு தத்தின், தின்னு தத்தின்'' என்று மாற்றி, திகைக்கும் வண்ணம் ஆடினார். ''தத்தின் தத்தின் தத்தின்'' என்று ('தின்னு'வை விட்டு விட்டு) தபேலாவின் 'தத்தின் தின்னு'வுக்குக் குறுக்கே கால்கள் ஆடும்; அல்லது திச்ரமாக 'தகிட தகிட தகிட' என்று கொஞ்சும்.

லய வாத்தியங்களின் வின்யாசத்தை விரும்பும் ரசிகர்கள் கதக் நடன வின்யாசங்களைக் கண்டால் உள்ளத்தை அப்படியே பறிகொடுத்து விடுவார்கள். தென்னாட்டு வட நாட்டு சம்பிரதாயங்களின் ஒற்றுமை வேற்றுமைகள் எளிதில் விளங்கும்.

சம்பு மஹாராஜின் அபிநயம் பாவம் நிறைந்தது. ஹோலி பண்டிகையின்போது தில்லியில் அவர் நடன மாடினார்; பண்டிகைக்குப் பொருத்தமாக அவர் கிருஷ்ணபகவான் கோபிகளின் மீது சாயத்தை எறிந்து விளையாடும் லீலைகளைச் சித்திரித்துக் காட்டினார். ஐம்பது வயதுள்ள மஹாராஜை மிகவும் வசீகரமான தோற்றமுள்ளவர் என்று கூறவும் இயலாது. 'மேக் அப்' செய்து கொண்டு தமது நிஜ ஸ்வரூபத்தை அவர் மறைத்துக் கொள்ளவும் இல்லை. தினசரி வழக்கமாக உடுத்தும் ஒரு வெள்ளை பைஜாமா; வெள்ளை ஜிப்பா. காதில் கடுக்கன்; நெற்றியில் பொட்டு. முழங்கால் முதல் கணுக் கால் வரை சலங்கை; பெரிய பெரிய மாட்டுச் சலங்கை.

அபிநயத்தை ரஸிக்கும் முன்பு மஹாராஜ் சலங்கை கட்டி ஆடும் அழகைக் கவனிக்க வேண்டும். அவரது கட்டளைப்படி சலங்கைகள் பேசுகின்றன. சில போது எல்லாச் சலங்கை வரிசைகளும் ஒன்று சேர்ந்து கோஷம் செய்யும். சில அடைவுகளின் போது இரண்டொரு வரிசைகளின் ஒலிதான் கேட்கும். சில சமயம் ஒரே சலங்கைதான் பேசும். அவருடைய கட்டுப்பாட்டை ஒருபோதும் சலங்கைகள் மீறுவதே இல்லை. நம்ப முடியாத ஒரு விநோதம் இது.

கிருஷ்ணபகவான் கோபிகளின் மீது சாயம் அடித்து விளையாடும் காட்சி பலே தமாஷ். சாயத்தைப் பூசியதும் கோபிக்குக் கோபம்; அன்னிய புருஷன் தீண்டியபோது கோபிக்கு லஜ்ஜை; பிறகு சந்தோஷம். ஒவ்வொரு சந்தர்ப்பத்திற்கும் ஏற்றபடி முட்டாக்கு போட்டுக் கொள்வதும் ஒதுக்கி விடுதலும் லஜ்ஜையுடன் முட்டாக்கின் உட்புறமிருந்து ஓரைக் கண்ணால் பார்ப்பதும் மஹாராஜ் என்னும் புருஷன் அல்ல; நிஜமான ஒரு கோபி கன்னிகையேதான். நாட்டியத்திலும் லய வின்யாசத்திலும் பிரியம் உள்ளவர்கள் சம்பு மஹாராஜின் நாட்டியத்தைப் பார்க்க வேண்டியது அவசியம். இந்தத் தடவை தில்லிக்குப் போனதில், இதைப் பார்க்க நேர்ந்ததை நான் ஒரு பெரும் பாக்கியமாகவே கருதுகிறேன்.

# கணக்கற்ற ஜனங்கள் தினப்படி விரும்புவது
# ப்ரூக் பாண்ட் தேயிலை



யோசித்து வாங்குங்கள்!
செலவைக் குறையுங்கள்!

ப்ரூக் பாண்ட் தேயிலை உங்கள் பணத்திற்கு அதிகமான, நல்ல தேநீரை அளிக்கிறது.

அதற்குக் காரணம் தோட்டத்திலிருந்து கடைகளுக்கு அதிவேகமாக அனுப்பப்படும் ப்ருக் பாண்ட் தேயிலை நித்தமும் புத்தம் புதியதாக இருக்கிறது. மேலும் காற்று உட்புகாது பாக் செய்யும் முறை தேயிலையை மாசு மருவற்று, கலப்பற்று, களங்கமற்று விளங்கச் செய்கிறது.




## மற்றெந்த தேயிலையையும் விட
## ப்ரூக் பாண்ட் தேயிலையையே
## அதிகப்படியான ஜனங்கள் வாங்குகிறார்கள்!

BB 59 D




## 49. நல்ல செய்தி

நாத்பாபாவின் விசித்திர சுபாவங்களும், கட்டுக் கடங்காத கோபமும் அவருடைய பக்தர்கள் அனைவருக்கும் பழகிப் போயிருந்தன. அதனால் அவர்கள் பல்லைக் கடித்துக் கொண்டு பொறுத்துக் கொள்ளவும் அவருடைய காலடிகளில் தாசானுதாசர்களாகக் கிடக்கவும் தேர்ந்திருந்தார்கள். காரணம், அவர் பல தடவை தமது பக்தர்களைப் பற்பல விதமான அதிசயச் செயல்கள் மூலம் ஆட்கொண்டிருந்ததுதான்.

நாத்பாபாவை எல்லோருமே தரிசித்து விடுவது என்பது எளிய காரியம் இல்லை. சிற்சிலருக்குத்தான் அவரைக் கண்டு அவரது உபதேசங்களைப் பெறும் பேறு கிட்டும். அம்மாதிரி சந்தர்ப்பங்களில் அவர் மனம் இருந்து தமது கம்பீரமான வெண்கல நாதக் குரலில் அழகாக ஆங்கில மொழியில் பிரசங்கம் செய்ய ஆரம்பித்து விட்டாரானால், நாஸ்திகம் பேசுவதில் நாவலர்கள் என்று பட்டம் பெற்ற பெரும் புலிகள்கூட மூக்கில் விரலை வைத்து ஆச்சரியப்பட்டுப் போவார்கள். அன்றைக்கே, அதே நிமிஷத்திலேயே தங்கள் நாஸ்திக வாதத்துக்கு ஒரு முழுக்குப் போட்டுவிட்டு நாத்பாபாவின் ஆத்மிகத் துறை சிஷ்யர்களாக ஆகவும் முற்பட்டு விடுவார்கள்.

ஒருவரை ஆதரிப்பது, இன்னொருவரை நிராகரிப்பது என்ற பட்சபாதம் காட்டும் குணம் நாத்பாபாவிடத்தில் இம்மியளவு கூடக் கிடையாது. அவருடைய இப்பெருங் குணங்கள் காரணமாகத் தார்மிகத் துறையில் பற்றுக் கொண்டவர்களும், மறுமையில் நாட்டம் கொண்டவர்களும் அவரை வழிபட்டு வணங்கும் தெய்வமாகவே கருதி வந்தார்கள்.

அதேபோலப் பாவிகளும் தீய செயல்களில் சிந்தையைச் செலவிட்டுத் தீயமார்க்கத்தையே தங்கள் பற்றுக் கோடாகக் கொண்டிருப்பவர்களும் அவரிடம் தனியானதொரு சிரத்தையும் மரியாதையும் வைத்திருந்தார்கள். தேவைப் பட்டால் அவரை அண்டிப் பிழைக்கவும் அவர்கள் தயங்குவதில்லை. அவருடைய அந்தத் தங்கமான மனத்துக்குத் தகுந்த முறையில் நல்லோர்களும் தீயோர்களும் நடந்து கொள்ள முயன்றார்கள் என்றால், அது எதிர்பார்க்கக் கூடியதுதானே?

சாதாரண மக்கள் மட்டும் என்ன? சர்க்கார் உத்தியோகஸ்தர்களும், போலீஸ் அதிகாரிகளும் கூடப் பல முறை அவரை நாடி வந்து அவருடைய விருந்தாளியாகத் தங்கிச் சென்றிருக்கிறார்கள். பரிசுத்தமும் பயங்கரமும் ஒருங்கே கூடிய ரகசியச் சூழ்நிலையில் தங்கிலை மறந்த துறவியாக வாழ்க்கையை நடத்தி வந்த நாத்பாபா மரியாதைக்கும் மதிப்புக்கும் உகந்தவராகவே எல்லோருக்கும் தோற்றினார்.

யாரிடமும் இல்லாத ஒரு தனிப் பற்று அவருக்கு ஜகதீஷிடம் ஏற்பட்டு விட்டது. 'ஏன், எப்படி?' என்று அதற்குக் காரண-காரியத்தைக் கண்டுபிடிப்பது கடினமான காரியமாகும். அவரோடு ஓங்காரியாவுக்கு வந்த ஜகதீஷுக்கு அந்த இடம் மிகவும் பிடித்துப் போய் விட்டது. தனிமையும் கம்பீரமும் ஒருங்கே அமையப்பெற்று வனப்புடன் திகழ்ந்த அந்த வனப் பிரதேசத்தை அவன் மிகவும் விரும்பினான்.

அவன் கண்களெதிரே தாய்நாட்டின் உருவம் பிரத்யக்ஷமாகத் தோன்றியது. ஒரு புறம் பச்சைப் பசேல் என்று கண்களுக்குக் குளிர்ச்சி அளித்த பசும்புல் தரை; இன்னொரு புறம் கண்களைக் கவரும் வர்ண விசித்திர ஜாலங்களுடன் பூத்துக் குலுங்கும் மலர்க் கொத்துக்கள்; வேறு ஒரு புறம் நிலத்தில் ஆதவனின் கதிர்கள் விழாதபடி அடர்த்தியான நிழல் தரும் மரங்கள்; மற்றொரு புறம், மயில்கள், மான்கள், மனிதர்கள் முதலியவர்கள் மெய்ம்மறந்து உலாவிப் பொழுதுபோக்குவதற்கான அகன்ற மணல் வெளி; பிறிதொரு புறம் மழையிலிருந்தும் வெய்யிலிலிருந்தும் காத்துக் கொள்வதற்காகச் சிறு

குடிசைகளும் வீடுகளுமாக இருந்தன. இவற்றை யெல்லாம் அளித்தது யார்? இரக்கமே உருவான இயற்கை அன்னை தானே? இதையெல்லாம் எண்ணி எண்ணிப் பார்த்த ஜகதீஷ் இயற்கையுடன் ஒன்றிவிடத் தீர்மானித்தான்.

ஜகதீஷ் தினமும் காலையில் சீக்கிரம் எழுந்து புஷ்பங்கள் கொய்வான்; பாத்திகளைப் பதனிடுவான்; புதுப் பாத்திகள் வெட்டித் தயார் செய்வான்; கொடிகள் படரப் பரண்கள் அமைப்பான். எத்தனையோ தடவைகள் அவன் ஏற்றத்தில் தண்ணீர் இழுக்கவும் கற்றுக் கொண்டிருக்கிறான்; கலப்பை எடுத்து உழவும் புல் அறுத்துக் கட்டுக் கட்டவும் பயின்றிருக்கிறான். வாய்க்கால் வழியே ஓடும் நீரைக் கையில் மண்வெட்டியை எடுத்துப் பாத்தி பாத்தியாகப் பாய விட்டிருக்கிறான். இம்மாதிரி காரியங்களில் ஈடுபட்டு விட்ட அவன், 'இந்த ஜனங்கள் மனத்துக்கு ரஞ்சகமான இத்தகைய காரியங்களை யெல்லாம் விட்டு விட்டு ஏன்தான் இப்படி நாற்காலிகளிலும் மெத்தைகளிலும் உட்கார்ந்து பொழுதை வீண் பொழுதாக்க விரும்புகிறார்களோ, தெரியவில்லையே!' என்றும் எண்ணியிருக்கிறான்.

பூமியோடு தொடர்பு கொண்ட மானிடர்கள் அனைவரும் ஜடமாகி விடுகிறார்கள் என்று நகரத்திடையே வாழும் மக்கள் எண்ணுகிறார்கள். எண்ணுவதோடு மட்டும் நிறுத்திக் கொள்ளாமல் ஏளனமாகப் பேசவும் செய்கிறார்கள். அதற்கு அத்தாட்சியாகத் தங்களது குடியானவர்களின் நிலைமையையே நம் கண்களுக்கெதிரே கொண்டுவந்து நிறுத்தவும் செய்கிறார்கள். அதை யெல்லாம் காணும் போது நம்மை யறியாமலே அவர்களது சொல்லில் நம்பிக்கை ஏற்பட்டு விடும் போலக் கூடத் தோன்றுகிறது.

ஆனால் இயற்கையன்னையுடன் தொடர்பு கொண்டவர்கள் எல்லோரும் ஜடமாகவும் அழுக்கேறிய ஆடை அணிந்து அநாகரிக மானவர்களாகவும் ஏன் இருக்க வேண்டும்? எழில் மிகுந்த நறுமலர்களை நமக்கு அளிக்கும் இயற்கைத் தாய் தன்னோடு தொடர்பு கொண்டுள்ள மானிடர்களை ஜடமானவர்களாகவும் அழுக்கேறிய அரசிகர்களாகவும் வைப்பாளா? அவளுக்கு அம்மாதிரி யெல்லாம் ஏற்றத் தாழ்வு காணும் மனப்பான்மை இருக்குமா? யோசித்துப் பார்த்ததில் ஜகதீஷுக்கு அப்படி யெல்லாம் ஒருநாளும் இராது என்றே தோன்றியது.

ஆனால்...!

இயற்கையோடு ஒட்டி சூரிய சந்திரர்கள், நட்சத்திரங்கள் ஆகியவற்றின் குடை நிழலிலே வாழும் மனிதன், இயற்கையின் எழிலையே சிறிதும் அறியாதவர்களும், 'தான் உண்டு, தன்னுடைய வேலை உண்டு' என்றிருப்பவர்களுமான நகரத்து மாந்தர்களைக் காட்டிலும் ஏன் இப்படி அஞ்ஞானத்தில் விழுந்து கிடக்கிறான்?

இதற்குக் காரணம் தேடுவதில் இறங்கிய ஜகதீஷின் புத்தி பெரிய சிக்கலில் மாட்டிக் கொண்டு விட்டது. அவன் மனத்தில் அதை ஒட்டினாற் போல் பல்வேறு கேள்விகள் முளைத்துக் கிளை விடத் தொடங்கின.

மரங்களின் பசுமை மிகுந்த இலைகளுக்குள்ளே தன்னை மறைத்துக் கொண்டு இனிய கீதம் இசைக்கும் குயிலின் குரலைக் கேட்டபின், கார்முகில்களைக் காட்டிலும் கன அடர்த்தியான நிழல் தரும் தோப்புகளில், வர்ண விசித்திரங்கள் நிறைந்த தன் தோகைகளை விரித்து ஆனந்த நடனம் ஆடும் மயில்களின் நடனத்தைப் பார்த்த பின், அளப்பற்கரிய பனி முத்துக்கள் பாலவனின் கிரணங்களில் பளிச்சிட்டுப் பலவித வர்ண ஜாலங்கள் புரியும் வேடிக்கையைக் கண்டபின், இயற்கை வெளியில் இயற்கையோடு ஒன்றி உல்லாசமாக நடமாடும் பாக்கியம் கிடைத்த பின் இந்த நாட்டுப் புறத்தார்கள் தங்களுக்குக் கிடைத்துள்ள வாழ்வின் இன்பத்தைப் பருக வேண்டியவர்கள் தானே? அதை விட்டு விட்டுச் செயற்கை அழகு செய்து கொண்டு வாழும் நகரத்தார்களின் முகத்தை ஏன் பார்க்கிறார்கள்? இந்த நகர வாழ்விலே அவர்கள் கண்களுக்கு அப்படி என்ன அழகும் சுகமும் தோன்றுகின்றன?

இதன் காரணத்தைத் தேடுவதில் ஜகதீஷின் மனம் லயித்தது. புத்தியை நகரத்துச் சந்தையில் கொண்டு போய்க் குறைந்த விலைக்கு ஏலம் போட்டு விற்பதைக் காட்டிலும் கிராமத்திலேயே விற்றிருந்தால் இந்த வீண் செலவு ஏற்பட்டிராது என்று அவன் எண்ணினான். காந்தி மகாத்மா கண்ட கனவும் இதுதானே?

இம்மாதிரி யோசனையில் ஆழ்ந்திருந்த ஜகதீஷ் வெறும் யோசனையில் மட்டும் ஆழ்ந்திருக்கவில்லை. செயலிலும் இறங்கியிருந்தான். ஒரு புதுச் செடி வைப்பதற்காகக் குழி வெட்டி அதில் அதை நட்டுப் பிறகு மண்ணைத் தள்ளி மூடினான். அதைச் சுற்றி மாடு கன்றுகள் தின்றுவிடக் கூடாதே என்பதற்காக வேலியும் தயார் செய்தான். அதே சமயம் ஒரு ஆள் அவனை அணுகி, "சாமி உங்களைக் கூப்பிடுகிறது!" என்றான்.

"அட, சாமி அதற்குள் வந்து விட்டதா? இந்த வேலியைக் கட்டிவிட்டு இதோ வந்து விடுகிறேன். நீ போய்ச் சாமியிடம் சொல்லு!" என்றான் ஜகதீஷ்.



"இல்லைங்க. உங்களைக் கையோடு கூட்டி வரச் சொல்லிற்று. ஏதோ அவசர ஜோலி இருக்கிறாற் போலிருக்கிறது!" என்றான் வந்த ஆள்.

ஜகதீஷுக்குத் தன் வேலையை விட்டு விட்டுப் போக மனம் இல்லை. ஆனால் அதே சமயம் சாமியாரின் அழைப்பை மறுக்கவும் தோன்றவில்லை. எனவே, தயங்கித் தயங்கித் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே மடத்தை நோக்கிச் சென்றான்.

மடத்துக்குள் சென்று பார்த்தால் ஜுகல்கிஷோர் உட்கார்ந்திருந்தான். திடுமென்று அவனை அங்கே கண்டதில் ஜகதீஷுக்கு அளவற்ற வியப்பு உண்டாயிற்று. அதனால் சிறிது நேரம் வைத்த கண் வாங்காமல் அவனையே பார்த்தவாறு அசையாமல் நின்று விட்டான். "நீ இங்கே எங்கே அப்பா வந்தாய்?" என்று, சற்று வியப்பு அடங்கியதும், ஜுகல்கிஷோரைப் பார்த்துக் கேட்டான்.

"ஏன்? வரக்கூடாதா? உன்னைத் தேடிக் கொண்டு உன் பின்னாலேயே தான் வந்தேன்!" என்றான் ஜுகல்கிஷோர்.

"என் பின்னால் வந்தாயா? நான் இங்கே இருக்கிறேன் என்பது உனக்கு எப்படித் தெரியும்?"

"எனக்குத் தெரியாமல் இந்த உலகத்தில் ஒரு காரியம் நடந்துவிட முடியுமா? நடக்கக் கூடாத காரியத்தைப் பற்றி எதற்கு அப்பா பேச்சு?" என்றான் ஜுகல் கிஷோர். அவனுடைய அந்தப் பேச்சில் அகந்தை தொனித்தது. அதைத் தொடர்ந்தாற்போலவே, "ஜகதீஷ்! நான் உனக்கு ஒரு நல்ல செய்தி சொல்ல வந்திருக்கிறேன்!" என்று மகிழ்ச்சி எதுக்களிக்க அவனே கூறினான்.

"நல்ல செய்தியாவது, உனக்குத் தெரியவாவது? நாத்பாபா ஏதாவது சொல்லியிருப்பார். அதைக் கேட்டுக் கொண்டு இங்கே கயிறு திரிக்க வந்திருப்பாய்!" என்று ஜுகல் கிஷோரின் சுபாவத்தைப் புரிந்து கொண்டவன் போலப் பேசினான் ஜகதீஷ்.

"நாத்பாபா என்னை எங்கே அப்பா பார்க்கிறார், அவர் சொல்லி எனக்குத் தெரிவதற்கு?" என்றான் ஜுகல்கிஷோர். நாத்பாபாவின் பெயரைச் சொல்லித் தன்னை ஒன்றும் தெரியாதவன் என்று ஜகதீஷ் மட்டம் தட்டுவதாகத் தோன்றவே, அவன் தன் சொற்களில் சற்றுச் சூடேற்றிக் கொண்டு பேசினான்.

"மூன்று நாட்களாக அவர் நகர்ப்புறத்துக்குத்தான் வந்திருக்கிறார். எங்கேயாவது அவர் உன்னைப் பார்த்துச் சொல்லியிருக்கலாம் அல்லவா?" என்றான் ஜகதீஷ்.

"உன் நாத்பாபாவாவது சொல்லவாவது? அவர் எங்கே அப்பா நகர்ப்புறத்துக்கு வருகிறார்? இங்கேயேதான் எங்கேயோ இருக்கிறார்!"

"ஜுகல்கிஷோர்! நாத் பாபாவைப் பற்றி மரியாதைக் குறைவாகப் பேசினால் எனக்குக் கெட்ட கோபம் வந்துவிடும். ஆமாம், சொல்லி விட்டேன்! அவர்

விருப்பப்படித்தான் இங்கே எதுவுமே நடக்கும். அவர்தான் என்னை இத்தனை தூரம் காப்பாற்றி யிருக்கிறார். தெரியுமா?" என்றான் ஜகதீஷ்.

"ஏன், அப்பா! உனக்கு ஓடி ஒளிய வேறு இடமே கிடைக்க வில்லையா? ஜகதீஷ்! இன்னொரு ரகசியத்தையும் இன்று உனக்குச் சொல்லி வைக்கிறேன். உன்னைப் பற்றி நாத்பாபாவிடம் சிபாரிசு செய்தவனே நான்தான் என்பதையும் மறந்து விடாதே! நான் மட்டும் சொல்லவில்லையென்றால், உன்னைக் கிழித்துக் கொன்று தின்றே யிருப்பார் அவர்! தெரியுமா?" என்றான் ஜுகல்கிஷோர்.

"நாத்பாபாவின் வரலாற்றை விவரமாகத் தெரிந்து கொண்டிருந்தால், நீ இப்படி மட்ட ரகமாகப் பேசமாட்டாய். உன் உள்ளத்திலே உதார குணம் இடம் பெற்றிருக்கும்!" என்றான் ஜகதீஷ்.

இதைக் கேட்டதும் ஜுகல்கிஷோர் கடகட வென்று சிரித்தான். அயலான் இடம் ஆயிற்றே! இப்படியெல்லாம் இஷ்டப்படிப் பேசிச் சிரிக்கலாமா என்ற எண்ணமே அவனுக்கு எழவில்லை. ஏதோ சொந்த வீட்டைப் போல எண்ணிவிட்டான் அந்த இடத்தை. எப்பொழுதுமே அவனுக்கு இதுதான் பழக்கம். இது தன்னுடையது, இது அயலானுடையது என்ற பாகுபாடே அவன் காட்டுவதில்லை. "பேஷ், பேஷ்! என்னைக் காட்டிலும் நீ அவருடைய வரலாற்றை அதிகமாகத் தெரிந்து வைத்திருக்கிறாயே! இதுவரை எனக்கு இவ் விஷயம் தெரியாமற் போய் விட்டதே!" என்றான் குத்தலாக.

"ஜுகல்கிஷோர்! நாத்பாபா நகரத்திலிருந்து வந்து விட்டாராம். நீயோ இப்படி நாவை அடக்காமல் பேசுகிறாய்! அவர் கேட்டு விட்டால்...? இப்பொழுது அவர் இங்கே வரப்போகிறார். அதற்காகத்தான் என்னை இங்கே கூப்பிட்டனுப்பி யிருக்கிறார்.—ஆமாம், நீ ஏதோ நல்ல செய்தி கொண்டு வந்திருப்பதாகக் கூறினாயே, அது என்ன? கோகிலாவைப் பார்த்தாயா?" என்று கேட்டான்.

ஜகதீஷுக்கு எப்பொழுதுமே கோகிலாவின் நினைவுதான்! அதனால் ஜுகல்கிஷோர் சொல்ல விரும்புவது கோகிலாவைப் பற்றிய நற்செய்தியாகத்தான் இருக்கும் என்று அவன் தீர்மானித்து விட்டான். வெளிப்படையாக அந்தக் கேள்வியைக் கேட்டும் விட்டான்.

"ஜகதீஷ்! மனிதன் மிக மிகக் கொடிய மிருகம், அப்பா! அவனைப் பற்றி உனக்கு அதிகமாகத் தெரியவில்லை. எத்தனை பெரிதாகத் துயரம் ஏற்பட்டாலும் அதைச் சீக்கிரமே மறந்து விடும் கலையை அவன் நன்கு கற்று வைத்திருக்கிறான் — அது போகட்டும். உன்னிடம் நான் என்ன சொல்ல வந்தேன், தெரியுமா? உன்மேல் திருட்டுக் குற்றம் சுமத்தப்பட்டதே, அன்று இரவுக்கிரவே கோகிலா யாருடனோ ஓடி விட்டாளாம்!" என்றான் ஜுகல்கிஷோர்.

"ஒரு நாளும் இராது. நீ சொல்வதையெல்லாம் நம்பிவிட நான் ஒன்றும் அவ்வளவு முட்டாள் அல்ல!" என்றான் ஜகதீஷ். அவனுடைய குரலில் அலாதி உறுதி தொனித்தது.

"மறுபடியும் உனக்குச் சொல்கிறேன், ஜகதீஷ்! நான் கூறுவது முற்றிலும் உண்மையே!" என்றான் ஜுகல்கிஷோர்.

"நல்ல ஆள் அப்பா, நீ! இந்தச் சந்தோஷச் செய்தியைச் சொல்லத்தானா நீ இவ்வளவு தூரம் வந்தாய்?" என்று கேட்டான் ஜகதீஷ்.

ஜுகல்கிஷோர் மீண்டும் ஒரு முறை உரக்கச் சிரித்தான். பிறகு, "ஜகதீஷ், நீ இன்னும் ஏதும் அறியாத அப்பாவியாகத்தான் இருக்கிறாய். உன் சுபாவத்தில் துளிக்கூட மாறுதலே உண்டாகவில்லை. பயப்படாதே அப்பா, பயப்படாதே! உன் கோகிலா ஓரிடத்துக்கும் ஓடிப் போகவில்லை. உன் நினைவாகவே தான் இருக்கிறாள். அவளைப் பார்க்க இன்றிலிருந்து உனக்கு விடுதலையும் கிடைத்து விட்டது!" என்றான்.

"என்ன? அப்படியா?" என்று ஆர்வத்துடன் கேட்ட ஜகதீஷுக்குத் திடீரென்று சந்தேகம் எழுந்தது. "ஆமாம். இப்படிப் புதிர் போலச் சொன்னால்...? சற்று விளங்கத்தான் சொல்லேன்!" என்றான்.

"இன்றிலிருந்து நீ ஓடி ஒளிந்து வாழ வேண்டிய தேவையில்லை. உன் மீது சுமத்தப்பட்டிருந்த குற்றச்சாட்டு எடுபட்டு விட்டது. எனவே இனி நீ குற்றவாளி இல்லை!"

"அது எப்படி?"

"இந்தா! நேற்றையப் பத்திரிகையைப் படித்துப் பார், தெரியும்!" என்று சொல்லி ஜுகல் கிஷோர் 'கர்ஜனை'ப் பத்திரிகையின் முதல் நாள் இதழை ஜகதீஷின் கையில் கொடுத்தான். அதில் கீழ்வரும் செய்தி பிரசுரமாகி யிருந்தது.

**ஆலைத் திருட்டின் ரகசியம் அம்பலம்**
**விஷயம் மேலும் சிக்கலாகி விட்டது!**

சமீபத்தில் ஸர் பிஹாரிலாலின் ஆலையில் பதினையாயிரம் ரூபாய் திருட்டுப் போன விஷயம் நேயர்களுக்கு நினைவிருக்கலாம். அதைக் கண்டு பிடிப்பதற்காகப் போலீஸார் எடுத்துக் கொண்ட முயற்சி மிகவும் பாராட்டுதற்குரியது. சந்தேகத்துக்கு இடம் தந்து ஓடி ஒளிந்து தலைமறைவாகி விட்ட ஜகதீஷைப் பிடிப்ப

தற்காகப் போலீஸார் எடுத்துக் கொண்ட முஸ்திபுகளும் சொல்லத் தரமன்று. ஆனால் பிராணலாலின் அறையிலுள்ள அலமாரியிலிருந்தே அந்தப் பதினையாயிரம் ரூபாய்களும் கிடைத்து விட்டன. அதனால் வழக்கு மேலும் வளராமல் தடைப்பட்டு விட்டது.

மேஜை டிராயரிலிருந்து மறைந்த பணம் பக்கத்து அலமாரியிலிருந்து அகப்பட்டு விட்டது. தமது ஞாபகக் குறையின் மேல் குற்றத்தைச் சுமத்திப் பிராணலால் வழக்கை வாபஸ் பெற முயற்சித்துக் கொண்டிருக்கிறார்.

சந்தேகத்துக்கு ஆளான ஜகதீஷைத் தப்புவிப்பதற்காக அவன் நண்பர்கள் எடுத்துக் கொண்ட பிரயாசையையும் இங்கே குறிப்பிட வேண்டும். இத்தகைய முடிவுகளுக்குக் காரணம் அதுவாகவே இருக்கலாமோ என்ற சந்தேகம் மக்களுக்கு எழுந்தால் அதில் ஆச்சரியப்படுவதற்கு என்ன இருக்கிறது?

திருட்டை மறைப்பதற்காகப் பணம் தண்ணீராகச் செலவழிக்கப் படுகிறது என்ற செய்தியும் நம்பகமான இடங்களிலிருந்து நமக்கு வந்துள்ளது. பெருமையைப் பாதுகாப்பதற்காக லஞ்சம் கொடுப்பது என்பது நியாயத்துக்குப் புறம்பானது; செல்வாக்கை உபயோகிப்பதும் நெறியற்ற செய்கையாகும்.

செல்வாக்கையும் லஞ்சத்தையும் உபயோகித்துக் குற்றத்தை அமுக்கி விடலாம். ஆனால் குற்றவாளி தன் குற்றத்துக்குத் தண்டனை பெறாமல் தப்புவது என்பது கூடாது. நியாயத்தை வேண்டி மக்கள் இடும் இந்தக் கூக்குரல் அரசாங்கத்தின் காதில் விழுமா? சம்பந்தப்பட்ட அதிகாரிகள் மறுமுறையும் இந்த வழக்கை ஆராய்ந்து நியாயத்தையும் நேர்மையையும் நிலைநாட்ட முயற்சிப்பார்களா?– இதுதான் இப்பொழுதுள்ள பிரச்னை!

செய்தியைப் படித்து முடித்த ஜகதீஷ் இலேசாகச் சிரித்தான். "மக்கள் இடும் கூக்குரலாம்! பேஷ்! பேஷ்! நானும் வேண்டுமானால் இந்தக் குரலோடு குரல் கொடுத்துக் கூவுகிறேன். ஏனெனில் எனக்கும் நியாயம் கிடைக்க வேண்டும் அல்லவா? ஆனால்... ஆனால்!" என்று இழுத்தான்.

"உன் 'ஆனால்' எல்லாம் எனக்கு இப்பொழுது தேவையில்லை. நீ விடுபட்டு விட்டாய். குற்றம் உன் மீதிருந்து எடுபட்டு விட்டது. போய் உன் கோகிலாவைப் பார்த்து விட்டு வா!" என்றான் ஜுகல் கிஷோர்.

"இதோ போகிறேன். எதற்கும் முதலில் நாத்பாபாவைப் பார்த்து இந்தச்



சிறந்த விளம்பர ஆலோசகர்களான மெஸர்ஸ் எபிஷியண்ட் பப்ளிஸிட்டி கம்பெனியார் தங்கள் ஸ்தாபனத்தின் பத்தாவது ஆண்டு விழாவைச் சமீபத்தில் சிறப்பாகக் கொண்டாடினார்கள். இந்த விழாவை யொட்டி எபிஷியண்ட் பப்ளிஸிட்டியார் ஒரு பெரிய விருந்து அளித்தார்கள். மேற்படி விருந்தில் வர்த்தகப் பிரமுகர்களும், பிரபல பத்திரிகைக்காரர்களும் கலந்து கொண்டு சிறப்பித்தனர். மேலே உள்ள படத்தில் கம்பெனியின் டைரக்டர்களான ஸ்ரீ எஸ். ராமச்சந்திரன், ஸ்ரீ எஸ். கணபதி, ஸ்ரீ எஸ். கிருஷ்ணன் முதலியவர்களைக் காணலாம்.

செய்தியைச் சொல்லி விட்டுத்தானே புறப்பட வேண்டும்?" என்றான் ஜகதீஷ்.

"வேண்டாம், வேண்டாம்! என்னைப் பார்த்தால் நாத்பாபாவைப் பார்த்தாற் போலத்தான். நீ போ. நான் அவரிடம் சொல்லிக் கொள்கிறேன்!" என்றான் ஜுகல் கிஷோர்.

"அதெப்படி? அவரைத் தரிசிக்காமல் என்னால் திடுதிப்பென்று போக முடியாது! அப்புறம் நான் திரும்பி இங்கே வந்து இருக்க வேண்டும். அதனால் அவரிடம் சொல்லிக் கொள்ளாமல் எப்படிப் போவது? நாத்பாபா மடத்தில் இருக்கிறாரா அல்லது வேறு எங்கேயாவது......"

"மடத்தில் இராமல் வேறு எங்கே போகப் போகிறார்? இனி மேல் உன் நாத் பாபாவுக்கு இந்த மடம்தான் கதி. இதை விட்டால் அவருக்கு வேறு போக்கிடம் கிடையாது!"

"ஆமாம், அவர் உனக்கு என்ன தீங்கு இழைத்தார்? அவர் பேச்சை எடுத்தாலே இப்படி வெடிப்பாகப் பேசுகிறாயே!" என்றான் ஜகதீஷ்.

"என்ன தீங்கு இழைத்தாரா?" என்று கேட்ட ஜுகல்கிஷோர் வீராவேசம் கொண்டவன் போலத் தாவி எழுந்தான். "அந்தக் கொலைகாரச் சாமியாரை இன்று இங்கேயே உயிரோடு வெட்டிப் புதைத்து விட்டுத்தான் மறு காரியம்!" என்றான். அப்பொழுது அவனது கரகரத்த குரலில் கடுமை குடேறி யிருந்தது.

அவன் வார்த்தைகளைக் கேட்ட ஜகதீஷ் பலத்த யோசனையில் ஆழ்ந்தான். ஜுகல் கிஷோர் இத்தனை ஆத்திரப்பட்டு இது வரை அவன் பார்த்ததே யில்லை.

"ஜுகல் கிஷோர்! உன்னைப் பற்றி நான் எத்தனை எத்தனையோ கதை கதையாகக் கேட்டிருக்கிறேன். அதோடு உன்னை எத்தனையோ உருவங்களில் பார்க்கவும் பார்த்திருக்கிறேன். ஆனால் உன் முகத்தில் கோபம் இப்படிக் கொள்ளாக வெடித்துப் பார்த்ததே யில்லை. உலகத்தில் எத்தகைய நிகழ்ச்சி நிகழ்ந்தாலும் எனக்குக் கோபத்தை உண்டாக்க முடியாது என்று செருக்குத் தலைக்கேற நீ மார்பு தட்டிக் கொள்வாயே! இன்று அந்த அகந்தை யெல்லாம் எங்கே போய் விட்டது?" என்று கேட்டான் ஜகதீஷ்.

அதைக் கேட்ட ஜுகல்கிஷோர் ஒரு வறட்டுச் சிரிப்புச் சிரித்தான். "சே! எனக்காவது, கோபம் வரவாவது? உன் நாத்பாபாவைப் போல் நடித்தேனைக்கும்! சரி, வா! நேரம் ஆகிறது. குதிரையைக் கொண்டு வரச் சொல். உன் கோகிலா இங்கிருந்து பத்துப் பன்னிரண்டு மைல் தூரத்தில்தான் இருக்கிறாள். நீ உன் வீட்டுக்கு ராதா என்று ஒரு பெண்ணை அழைத்து வந்து அடைக்கலம் அளித்திருந்தாய் அல்லவா? அவள் வீட்டில் தான் கோகிலா இப்பொழுது தங்கியிருக்கிறாள்!" என்றான்.

"உனக்கு இந்தப் பக்க மெல்லாம் நன்றாகத் தெரியுமோ? — ஏன் ஜுகல் கிஷோர்! உனக்கும் நாத்பாபாவுக்கும் எப்படி உறவு ஏற்பட்டது?"

"அதைப்பற்றி உனக்கு என்ன கேள்வி?"

"ஒன்றும் இல்லை, சும்மாத்தான் கேட்கிறேன். உனக்கும் சாந்தா கௌரிக்கும் ஏதாவது உறவு-கிறவு உண்டோ?"

"இத்தகைய சந்தேகம் உனக்கு எப்படி உண்டாயிற்று?"

"நாத்பாபாவின் மேல் உனக்கு ஆத்திரம் ஆத்திரமாக வருகிறதே! அதைப் பார்த்துத்தான் எனக்கு இந்தச் சந்தேகம் உண்டாயிற்று. நாத்பாபா இதுபற்றி ஏன் இதுவரை ஒன்றுமே சொல்லாமல் இருக்கிறார் என்பதும் புரியவில்லை." (தொடரும்)

# தெம்பூட்டுகிறது, மணமூட்டுகிறது!

மலரின் பனித்துளிகள் போல புதுமையையும், ரம்மிய மணத்தையும் உங்கள் மேனியில் பெய்கிறது எக்லா டால்க். குளித்தபின், உடை யணியுமுன் உடம்பில் எக்லா டால்கம் பவுடரைப் பூசுங்கள்.



வெப்ப நாளிலும் குளுமை, இதம் அளிப்பது எக்லா. அது வியர் வையை உறிஞ்சும். மெல்லிய எக்லா ஒரு லட்சிய முகப்பவுடரும் கூட.




கால்கேட்

# எக்லா

## டால்க்பவுடர்

**இந்தியா விரும்பும் நறுமண டால்க்**

EC/G/I




## 1

நமது கதாநாயகர் பிரதிபந்தபுரம் மகா ராஜா அவர்களை, ஹிஸ் ஹைனஸ் ஜமேதார் ஜெனரல் – கிலேதார் – மேஜர் சத வியாக்ர - ஸம்ஹாரி, மகா ராஜாதி ராஜ விச்வபுவன ஸம்ராட் ஸர் ஜில்லானி ஜங்ஜங் பகதூர் எம். ஏ. டி. ஏ. எஸ். டி. சி., எஸ். ஆர். எஸ். கே. என்றும் சொல்வதுண்டு ; 'புலி ராஜா' என்று சுருக்கமாகச் சொல்வதும் உண்டு. அவருக்குப் 'புலிராஜா' என்ற பெயர் ஏன் வந்தது என்பதைத்தான் இங்கே சொல்ல முன் வந்திருக்கிறேன் ; ஆனால் முன் வருவதுபோல் வந்து விட்டுப் பின் வாங்கும் உத்தேசம் எனக்குக் கொஞ்சம் கூடக் கிடையாது. "ஸ்டுகா" பாம்பர் விமானம் வந்தாலும் நான் பயப்படப் போவதில்லை. "ஸ்டுகா" தான் என் கதைக்குப் பயந்து ஓடும்படி இருக்கும்.

புலி ராஜாவைப் பற்றி மிகவும் முக்கியமான ஒரு விஷயத்தை முதலிலேயே சொல்லி விடுவது அவசியமாகிறது. ஏனெனில், அவரைப் பற்றிப் படிக்கும்போது அப்பேர்ப்பட்ட அஸகாய சூரரைக் கண்ணால் பார்க்க வேண்டுமென்ற ஆசை எல்லோருக்கும் அளவில்லாமல் உண்டாகி விடும். ஆனால், அந்த ஆசை நிறைவேறுவதற்கு வழி கிடையாது. பரதன் ராமனிடம் தசரதரைக் குறித்துச் சொன்ன பிரகாரம், உலகிலே பிறக்கும் ஜீவர்களெல்லாம் கடைசியாக எந்த இடத்துக்குப் போய்ச் சேருகிறார்களோ, அங்கே நமது புலி ராஜாவும் விஜயமாகி விட்டார். அதாவது சுருங்கச் சொன்னால் புலி ராஜா இறந்து போனார்!

அவர் எப்படி இறந்து போனார் என்பது ஒரு அதிசயமான விஷயம். அதைக் கதையின் கடைசியிலேதான் சொல்ல வேண்டும். ஆனால் அவருடைய மரணத்தில் ஒரு பெரிய விசேஷம் என்னவென்றால் அவர் பிறந்த காலத்திலேயே, அவர் ஒருநாள் இறந்தும் போவார் என்று ஜோசியர்கள் கண்டு பிடித்துச் சொல்லி விட்டார்கள்!

"குழந்தை வீராதி வீரனாகவும் சூராதி சூரனாகவும் தீராதி தீரனாகவும் விளங்குவான். ஆனால்..." என்று மென்று விழுங்கினார்கள்.

"என்ன சமாசாரம்!" என்று அழுத்திக் கேட்டதின் பேரில், "சொல்லக் கூடாது; ஆனாலும் சொல்ல வேண்டி யிருக்கிறது. இந்த ஜாதகனுக்கு ஒரு காலத்தில் மரணம் நேரிடும்" என்றார்கள்.

அந்த சமயத்தில் ஒரு பெரிய அதிசயம் நடந்தது. பிறந்து பத்து தினங்கள்தான் ஆன ஜில்லானி ஜங்ஜங் பகதூர் வாயிலிருந்து ஒரு ஆச்சரியமான வார்த்தை கிளம்பிற்று. "பிரகஸ்பதிகளே" என்பதுதான் அந்த வார்த்தை.

எல்லோரும் அப்படியே பிரமித்துப் போய் நின்று விட்டார்கள். ஒருவரை யொருவர் பார்த்து விழித்தார்கள்.

"நான்தான் பேசினேன், பிரகஸ்பதிகளே!"

இந்தத் தடவை சந்தேகத்துக்கே இட மில்லை. பிறந்து பத்தே நாளான குழந்தைதான் அவ்வளவு திவ்யமாகப் பேசி யிருக்கிறது!

தலைமை ஜோசியர் மூக்குக் கண்ணாடியைக் கழற்றி விட்டு, குழந்தையை உற்றுப் பார்த்தார்.

"பிறந்தவர் யாவரும் இறந்துதானே தீர வேண்டும்! அதற்கு நீங்கள் என்ன ஜோசியம் சொல்வது! மரணம் எந்த விதத்தில் நேரும் என்று சொன்னாலும் அர்த்தம் உண்டு" என்று சின்னஞ் சிறு கீச்சுக் குரலில் யுவராஜா திருவாய் மலர்ந்தார்.

ஜோசியர் தலைவர் மூக்கிலே விரலை வைத்து அதிசயித்தார். பத்து நாள் குழந்தை பேசுகிறது. அதோடு இல்லை. இவ்வளவு புத்தி சாலித்தனமான கேள்வி கேட்கிறது என்றால்— இதென்ன, யுத்த இலாகா அறிக்கைகளைப் போல் தோன்றுகிறதே தவிர, நம்பக் கூடியதா யிருக்கிறதா!

தலைமை ஜோசியர் மூக்கிலிருந்த விரலை எடுத்துவிட்டு, யுவராஜாவை உற்றுப் பார்த்து விட்டுச் சொன்னார் :—

"ரிஷப லக்னத்தில் யுவராஜா ஜனனம். ரிஷபத்துக்கும் புலிக்கும் பகை. ஆகையால் புலியினால் மரணம்."

புலி என்ற வார்த்தையைக் கேட்டதும் யுவராஜா ஜங்ஜங் பகதூர் பயந்து நடுங்கியிருப்பார் என்று நீங்கள் நினைக்கலாம். அதுதான் இல்லை. புலி என்று கேட்டதும் யுவராஜா ஒரு உறுமல் உறுமினார். பிறகு இரண்டு பயங்கரமான வார்த்தைகள் அவர் வாயிலிருந்து வெளி வந்தன :—

"புலிகள் ஜாக்கிரதை!"

மேலே கூறிய சம்பவம் பிரதிபந்த புரத்தில் வழங்கி வந்த வதந்தியே தான். ஆனால் பின்னால் நடந்தவைகளைக் கொண்டு பார்க்கும் போது, அது உண்மையா யிருக்கலா மென்றே தோன்றுகிறது.

## 2

யுவராஜா ஜங் ஜங் பகதூர் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தார். மேற்கூறிய சம்பவத்தைத் தவிர அவருடைய குழந்தைப் பருவத்தில்

வேறு அதிசயம் ஒன்றும் நடக்கவில்லை. மற்ற சுதேச சமஸ்தானங்களின் யுவ ராஜாக்களைப் போல் தான் அவரும் இங்கிலீஷ் பசுவின் பாலைக் குடித்து, இங்கிலீஷ் நர்ஸினால் போஷிக்கப்பட்டு, இங்கிலீஷ் உபாத்தியாயரால் இங்கிலீஷ் ஸினிமாக்கள் பார்த்து இப்படியாக வளர்ந்து வந்தார். வயது இருபது ஆனதும், அதுவரைக்கும் 'கோர்ட் ஆப் வார்ட்ஸி'ல் இருந்த ராஜ்யமும் கைக்கு வந்தது.

ஆனால் ராஜ்யத்தில் மட்டும் மேற்சொன்ன ஜோசியக் கூற்று எல்லோருக்கும் நினைவிருந்தது. அநேகர் அதைப் பற்றிப் பேசியும் வந்தனர். மெதுவாக மகாராஜாவின் காதிலும் பேச்சு விழுந்தது.

பிரதிபந்தபுரம் சமஸ்தானத்தில் காடுகள் ஏராளமாக உண்டு; அவற்றில் புலிகளும் உண்டு. "தன்னைக் கொல்ல வந்த பசுவையும் கொல்லலாம்" என்ற பழமொழி மகாராஜாவுக்குத் தெரிந்திருந்தது. தன்னைக் கொல்ல வரும் புலியைக் கொல்லுவதைப் பற்றி என்ன ஆட்சேபணை! — மகாராஜா புலி வேட்டையாடக் கிளம்பினார்.



முதல் புலியைக் கொன்றதும் மகாராஜாவுக்கு ஏற்பட்ட குதூகலத்துக்கு அளவில்லை. சமஸ்தானத்தின் ஜோசியர் தலைவரைக் கூப்பிட்டு அனுப்பினார். செத்த புலியை அவரிடம் காட்டி "இப்போது என்ன சொல்கிறீர்!" என்று கேட்டார்.

"மகாராஜா இந்தமாதிரியே 99 புலிகளைக் கொன்று விடலாம்; ஆனால்......" என்று ஜோசியர் இழுத்தார்.

"ஆனால் என்ன! தைரியமாகச் சொல்லும்!"

"ஆனால் நூறாவது புலி விஷயத்தில் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்."

"சரி, நூறாவது புலியையும் கொன்று விட்டால் அப்புறம்!"

"அப்புறம், என்னுடைய ஜோசிய புஸ்தகங்களை யெல்லாம் கிழித்து நெருப்பு வைத்து விட்டு......"

"வைத்து விட்டு......!"

"தலையில் கிராப்பு வைத்துக் கொண்டு இன்ஷூரன்ஸ் கம்பெனி ஏஜெண்டாகப் போய் விடுகிறேன்!" என்று ஜோசியர் சம்பந்தமில்லாமல் முடித்தார்.

## 3

பிரதிபந்தபுரம் சமஸ்தானத்தின் காடுகளிலிருந்த புலிகளுக்கெல்லாம் அன்று முதல் கொண்டாட்டந்தான்.

மகாராஜாவைத் தவிர வேறு யாரும் புலி வேட்டை ஆடக் கூடாது என்று உத்தரவு பிறந்தது.

தப்பித் தவறி யாராவது ஒரு புலியின் மேல் கல்லை விட்டெறிந்தால் கூட, அப்படிப்பட்ட ராஜ துரோகத்தைச் செய்தவனுடைய சொத்துக்களெல்லாம் பறிமுதல் செய்யப்படும் என்று தண்டோரா போடப்பட்டது.

மகாராஜா நூறு புலிகளை முழுசாகக் கொன்ற பிறகுதான் மற்றக் காரியங்களில் கவனம் செலுத்துவது என்று கங்கணம் கட்டிக் கொண்டார். அவருடைய உத்தேசம் நன்கு நிறைவேறியும் வந்தது.

அபாயங்கள் அவருக்கு நேரிடாமல் இல்லை. சில தடவை துப்பாக்கிக் குறி தவறிப் புலி அவர் மேல் பாயவும், அதனுடன் கை கலந்து சண்டை போடவும் நேர்ந்தது. ஒவ்வொரு தடவையிலும் அவர்தான் கடைசியில் வெற்றி பெற்றார்.

இன்னொரு சமயம் அவருடைய சிம்மாசனத்துக்கே ஆபத்து வருவதாயிருந்தது. ஒரு பெரிய பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர் பிரதிபந்தபுரத்துக்கு விஜயம் செய்தார். அவருக்குப் புலி வேட்டையில் ரொம்பப் பிரியம். அதைக் காட்டிலும் தாம் கொன்ற புலிக்குப் பக்கத்தில் நின்று புகைப்படம் எடுத்துக் கொள்வதில் அதிகப் பிரியம்.

வழக்கம்போல் அவர் பிரதிபந்தபுரம் சமஸ்தானத்திலும், புலிவேட்டையாட விரும்பினார். ஆனால் மகாராஜா கண்டிப்பாக மறுத்து விட்டார். "வேறு என்ன வேட்டைக்கு வேண்டுமானாலும் ஏற்பாடு செய்கிறேன். பன்றி வேட்டையா! ஆடுங்கள். எலி வேட்டையா! நடத்துங்கள். கொசு வேட்டையா! இதோ தயார். ஆனால் புலி வேட்டை மட்டும் இங்கே முடியாது" என்றார் மகாராஜா.

"துரை தான் புலியைக் கொன்று ஆகவேண்டு மென்று அவசியமில்லை. மகாராஜாவே கொல்லலாம். செத்த புலிக்குப் பக்கத்தில் கையில் துப்பாக்கியுடன் நின்று போட்டோ எடுத்துக் கொள்வதுதான் துரைக்கு முக்கியம்" என்று மேற்படி பிரிட்டிஷ் உத்தியோகஸ்தரின் காரியதரிசி சமஸ்தான திவான் மூலமாகச் சொல்லி அனுப்பினார். இதற்கு மகாராஜா சம்மதிக்கவில்லை. இப்போது கொஞ்சம் இடம் கொடுத்து விட்டால், அப்புறம் இன்னும் சிலபிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்களும் புலி வேட்டைக்கு வந்து சேரலாமல்லவா!

இப்படி ஒரு பெரிய ஆங்கில உத்தியோகஸ்தரின் விருப்பத்துக்குக் குறுக்கே நின்றதன் பயனாக, மகாராஜாவின் கையை விட்டு ராஜ்யமே போய் விடுமோ என்று பயம் உண்டாயிற்று.

இதைக் குறித்து மகாராஜாவும் திவானும் கலந்தாலோசித்தார்கள். உடனே கல்கத்தாவிலுள்ள ஒரு பெரிய இங்கிலீஷ் நகைக் கம்பெனிக்குத் தந்தி போயிற்று:—"வைர மோதிரங்கள் சில உயர்ந்த மாதிரிகள் அனுப்பி வைக்கவும்" என்று.

அப்படியே வைர மோதிரங்கள் சுமார் ஐம்பது தினுசுகள் வந்தன. அவற்றை அப்படியே மகாராஜா மேற்படி பிரிட்டிஷ் உத்தியோகஸ்தரின் தர்ம பத்தினிக்கு அனுப்பி வைத்தார். துரைசானி அம்மாள் ஏதாவது ஒன்றிரண்டு பொறுக்கிக் கொண்டு பாக்கியைத் திருப்பி அனுப்பி விடுவாரென்று மகாராஜாவும் திவானும் எதிர்பார்த்தார்கள்.

ஆனால் சற்று நேரத்துக்கெல்லாம் துரைசானியிடமிருந்து பதில் வந்து விட்டது:—

"நீங்கள் அனுப்பிய பரிசு மோதிரங்களுக்காக மிகவும் வந்தனம்."

இரண்டு நாளைக்கெல்லாம் நகைக் கம்பெனியாரிடமிருந்து மூன்று லட்சம் ரூபாய்க்கு பில் வந்தது. மூன்று லட்சம் ரூபாய் போனாலும் சிம்மாசனத்துக்கு ஆபத்தில்லாமல் தப்பியது பற்றி மகாராஜாவுக்கு சந்தோஷந்தான்.

## 4

மகாராஜாவின் புலி வேட்டை விரதம் நன்கு நிறைவேறி வந்தது. பத்து வருஷ காலத்தில் எழுபது புலிகள் வரையில் வேட்டையாடிக் கொன்று விட்டார். அதற்குப் பிறகு ஒரு பெரிய இடையூறு எதிர்ப்பட்டது. பிரதிபந்தபுரம் காடுகளில் புலிகளே அற்றுப் போய்விட்டன போல் தோன்றியது. புலிகள் ஒரு வேளை கருத்தடை முறைகளைக் கையாண்டனவோ அல்லது 'ஹரிகிரி' செய்து கொண்டனவோ, அல்லது வெள்ளைக்காரர்களின் கையினால் தான் சாக வேண்டுமென்று ஆசைப்பட்டுக் கொண்டு நாட்டை விட்டு ஓடிப் போயினவோ, தெரியவில்லை.



மகாராஜா திவானைக் கூப்பிட்டார். "திவான் சாகிப், இன்னும் முப்பது புலி இந்தத் துப்பாக்கிக்கு இரையாகித் தீர வேண்டுமென்று உமக்குத் தெரியுமோ இல்லையோ!" என்று கேட்டார்.

திவான் துப்பாக்கியைப் பார்த்து நடுநடுங்கி, "மகாராஜா! நான் புலியில்லை..." என்றார்.

"நீர் புலி என்று எந்த மூட்டாள் சொன்னது!"

"இல்லை, நான் துப்பாக்கி இல்லை" என்றார் திவான்.

"நீர் புலியுமில்லை. துப்பாக்கியுமில்லை. திவான் சாகிப்! உம்மைக் கூப்பிட்ட காரணம் வேறு. நான் கலியாணம் செய்து கொள்வதென்று தீர்மானித்துவிட்டேன்" என்றார் மகாராஜா.

திவானுக்கு உளறல் இன்னும் அதிகமாகி விட்டது. "மகாராஜா ஏற்கெனவே எனக்கு இரண்டு மனைவிகள் இருக்கிறார்கள்; உங்களையும் கல்யாணம் செய்து கொண்டு..."

"சட்! என்னங் காணும் உளறுகிறீர்! உம்மை எதற்காக நான் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன்! எனக்கு வேண்டியது புலி..."

"மகாராஜா வேண்டாம்; யோசனை செய்யுங்கள். உங்கள் குலத்து முன்னோர்கள் கத்தியைக் கல்யாணம் செய்து கொண்டார்கள். நீங்கள் வேணுமானால் துப்பாக்கியைக் கல்யாணம் செய்து கொள்ளுங்கள். இந்த சமஸ்தானத்துக்குப் புலிராஜா இருப்பது போதும்; புலி ராணி வேறே வேண்டாம்!"

இதைக் கேட்ட மகாராஜா குபீரென்று சிரித்து விட்டு, "புலியுமில்லை, துப்பாக்கியுமில்லை. மனுஷப் பெண்ணைத்தான் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன். தற்சமயம் எந்தெந்த சமஸ்தானத்தில் புலி இருக்கிறதென்று முதலில் கணக்குத் தயார் செய்யும். பிறகு புலி இருக்கிற சமஸ்தானத்தில் ராஜ வம்சத்தில் கல்யாணத்துக்குப் பெண் இருக்கிறதா என்று பாரும்" என்றார்.

திவான் அப்படியே பார்த்தார். கடைசியில், மகாராஜாவின் விருப்பத்தின்படியே புலிகள் நிறைய உள்ள சமஸ்தானத்தில் பெண் பார்த்துக் கல்யாணமும் செய்து வைத்தார்.

மகாராஜா ஜங்ஜங் பகதூர் ஒவ்வொரு தடவை மாமனார் வீடு சென்ற போதும் ஐந்தாறு புலிகளைக் கொன்று எடுத்துக் கொண்டு வந்தார். இப்படியாக மகாராஜா கொன்ற எல்லாப் புலிகளின் தோலும்—சரியாக 99 தோல்—அரண்மனை ஆஸ்தான மண்டபத்தின் சுவர்களை அலங்கரித்தன.

## 5

கடைசியில் நூற்றுக்கு இன்னும் ஒரு புலி தான் பாக்கி என்ற நிலைமை ஏற்பட்டதும் மகாராஜாவின் பரபரப்பு மிகவும் அதிகமாயிற்று. பகலில் அதே நினைவு; இரவில் அதே கனவு; இதற்குள்ளே, மாமனார் சமஸ்தானத்திலும் புலிப் பண்ணை வறண்டு போய்விட்ட படியால், புலிகள் அகப்படுவது மிகவும் பிரயாசையாய்ப் போயிருந்தது. ஆனாலும், இன்னும் ஒன்றே ஒன்றுதானே! இன்னும் ஒரு புலி மட்டும் கொன்று விட்டால், அப்புறம் பயமே இல்லை. புலி வேட்டையையே விட்டு விடலாம்.

ஆனால், இந்தக் கடைசிப் புலி விஷயத்தில் வெகு ஜாக்கிரதையாயிருக்க வேண்டும். காலஞ்சென்ற தலைமை ஜோசியர் என்ன சொன்னார்! "99 புலிகளை மகாராஜா கொன்றபோதிலும் 100-வது புலி விஷயத்தில் ஜாக்கிரதையாயிருக்க வேண்டும்!" உண்மைதான்; புலி பொல்லாத மிருகம். ஜாக்கிரதையாகத் தான் இருக்க வேண்டும்—ஆனால், அந்த நூறாவது புலிக்கு எங்கே போகிறது? புலி கிடைப்பது புலிப் பால் கிடைப்பதை விடக் கஷ்டமாகி விட்டதே!

மகாராஜா இப்படிப்பட்ட கவலையில் ஆழ்ந்திருந்தபோது, அந்தக் கவலையைப் போக்கக் கூடிய ஒரு அருமையான சந்தோஷச் செய்தி வந்தது. அந்த சமஸ்தானத்திலேயே மலைக் கிராமம் ஒன்றில் திடீர் திடீரென்று சில ஆடுகள் காணாமல் போய் வந்தன. 'முழு ஆடு விழுங்கிகள்' என்று பெயர் பெற்ற காதர் மியான் சாகிபுவையும் வீராசாமி நாயக்கரையும் விசாரித்து, அவர்கள் பொறுப்பாளிகள் அல்ல என்று தெரிய வந்ததும், புலிதான் வந்திருக்க வேண்டுமென்று நிச்சயமாயிற்று. கிராமவாசிகள் ஓடிப் போய் மகாராஜாவிடம் தெரிவித்தார்கள். அந்தக் கிராமத்துக்கு மூன்று வருடம் வரி, வாய்தா, குவிட்ரெண்ட், ஜமாபந்தி, புறம் போக்குப் பட்டி ஒன்றுமே கிடையாது என்று மகாராஜா தெரிவித்து விட்டு, உடனே வேட்டைக்குக் கிளம்பினார்.

புலி இலேசில் அகப்படவில்லை. வேண்டுமென்று, மகாராஜா கையில் அகப்படக்கூடாதென்றே, அது ஒளிந்து கொண்டிருந்ததாகத்

தோன்றியது. மகாராஜாவோ, புலி அகப்பட்டாலொழியக் காட்டை விட்டு வரமாட்டேனென்று பிடிவாதம் பிடித்தார். அதோடு, நாளாக ஆக மகாராஜாவின் கோபமும் பிடிவாதமும் அதிகமாகிக் கொண்டு வந்தன. அதன் பயனாக அநேக உத்தியோகஸ்தர்களுக்கு வேலை போய் விட்டது.

ஒரு நாள் ரொம்பக் கோபம் வந்தபோது மகாராஜா திவானைக் கூப்பிட்டு, "சமஸ்தானத்தில் நிலவரியை உடனே இரண்டு பங்கு செய்யுங்கள்" என்றார். திவான், "பிரஜைகளுக்கு அதிருப்தி உண்டாகும், மகாராஜா! அப்புறம் நம் சமஸ்தானத்திலும் ஸ்டேட் காங்கிரஸ் ஏற்பட்டு விடும்!" என்றார்.

"அப்படியானால் உம் வேலையை ராஜினாமா செய்து விட்டுப் போம்!" என்றார் மகாராஜா.

இதற்குமேல் மகாராஜாவுக்குப் புலி அகப்படா திருந்தால் விபரீதந்தான் என்று தீர்மானித்துக் கொண்டு வீட்டுக்குப் போனார் திவான். அங்கே சென்னை பீபிள்ஸ் பார்க்கிலிருந்து வாங்கிக் கொண்டு வந்து இரகசியமாய் வைத்திருந்த புலியைப் பார்த்ததுந்தான் அவருக்கு உயிர் வந்தது.

அன்று இரவு நடுநிசியில் ஊரெல்லாம் அடங்கிய பிறகு, திவானும் அவருடைய வயது முதிர்ந்த மனைவியும் மேற்படி புலியை இழுத்துக் கொண்டு வந்து மோட்டாரில் ஏற்றினார்கள். திவான் தாமே மோட்டாரை ஓட்டிக் கொண்டு போய், மகாராஜா வேட்டையாடிக் கொண்டிருந்த காட்டுக்குப் பக்கத்தில் புலியை இறக்கினார்! மோட்டாரிலிருந்து இறங்க மாட்டேனென்று சத்தியாக்கிரகம் செய்த அந்தப் புலியைப் பிடித்து இழுத்துக் கீழே தள்ளுவதற்குள் திவானுக்கு மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்கி விட்டது!

மறுநாள் மகாராஜாவின் முன்னால் மேற்படி கிழப் புலியானது வந்து, "எஜமானே! என்ன ஆக்ஞை!" என்று கேட்பதுபோல் நின்றது. மகாராஜா அளவிறந்த உற்சாகத்துடன் துப்பாக்கியை எடுத்துக் குறி வைத்துச் சுட்டார். உடனே புலி சுருண்டு விழுந்தது.

"நூறாவது புலியைக் கொன்று விட்டோம்; விரதம் நிறைவேறி விட்டது!" என்ற மகத்தான குதூகலம் மகாராஜாவின் மனத்தில் தோன்றிற்று. அந்த நூறாவது புலியை, தமது தலைநகரில் ஊர்வலமாகக் கொண்டு வரும்படி கட்டளை யிட்டு விட்டு, மகாராஜா மோட்டாரில் ஏறி விரைந்து முன்னால் சென்றார்.

அவர் போன பிறகு, மற்ற வேட்டைக்காரர்கள் புலியின் அருகில் சென்று பார்த்தார்கள். புலியும் கண்களைப் பேந்தப் பேந்த விழித்து அவர்களைப் பார்த்தது! புலி சாகவில்லை யென்றும், அதன்மேல் குண்டே பாயவில்லை யென்றும் அவர்கள் கண்டார்கள். குண்டு சமீபத்தில் போன அதிர்ச்சியினாலேயே அது அப்படி மூர்ச்சையாகி விழுந்திருந்தது! வேட்டைக்காரர்கள் யோசனை செய்தார்கள். குண்டு குறி தவறிப்போன செய்தி மகாராஜாவுக்குத் தெரியக் கூடாது, தெரிந்தால் தங்களுடைய உத்தியோகத்துக்கு ஆபத்து என்று அவர்கள் தீர்மானித்தார்கள். அவர்களில் ஒருவன் புலிக்கு ஒரு அடி தூரத்திலிருந்து குறி தவறாமல் சுட்டு அதைக் கொன்று தீர்த்தான்.

பிறகு, மகாராஜாவின் கட்டளையின்படி, அந்த செத்த புலியை நகரில் ஊர்வலம் விட்டுக் கொண்டு போய்க் கடைசியில் அதைப் புதைத்துச் சமாதியும் எழுப்பினார்கள்.

## 6

மேற்கூறிய விசேஷ சம்பவம் நடந்து சில தினங்களுக்குப் பிறகு மகாராஜாவின் குமாரனுக்கு மூன்றாவது பிறந்த தினக் கொண்டாட்டம் நடந்தது. இதுவரையில் புலி வேட்டையிலேயே கவனமாயிருந்த மகாராஜா பட்டத்து இளவரசனைப் பற்றிக் கொஞ்சமும் கவனிக்கவில்லை. இப்போது அவருடைய கவனம் குழந்தையின் மீது சென்றது. பிறந்த தினத்தன்று குழந்தைக்கு ஏதாவது பரிசு கொடுக்க வேண்டுமென்று ஆசைப்பட்டார். பிரதிபந்தபுரம் கடைத்தெருவுக்குப் போனார். கடை கடையாகத் தேடியும் அவருக்கு ஒன்றும் கிடைக்கவில்லை. கடைசியில் ஒரு பொம்மைக் கடையில் ஒரு சின்ன மரப்புலியைப் பார்த்தார். "இதுதான் சரியான பரிசு" என்று உடனே தீர்மானித்து விட்டார்.

அந்த மரப்புலியின் விலை இரண்டே காலணாத்தான். ஆனால், மகாராஜா கேட்கும்போது அவ்வளவு குறைந்த விலை சொன்னால் நிச்சயம் அவசரச் சட்டத்தின் கீழ் தண்டனை கிடைக்குமென்று தெரிந்த கடைக்காரன், "மகாராஜா! இது ரொம்பக் கலைத் திறமை பொருந்திய பொம்மை; விலை மூந்நூறு ரூபாய்!" என்றான்.

"ரொம்ப சந்தோஷம்! யுவ ராஜாவின் பிறந்த தினக் கொண்டாட்டத்துக்கு இது உன்னுடைய காணிக்கையாக இருக்கட்டும்" என்று சொல்லிவிட்டு, மகாராஜா அதை எடுத்துச் சென்றார்.

யுவராஜாவின் பிறந்த தினத்தன்று, தகப்பனும் குழந்தையும் அந்த சின்னஞ்சிறு மரப் புலியை வைத்துக் கொண்டு விளையாடினார்கள். யாரோ பட்டிக் காட்டுத் தச்சன் செய்த பொம்மை அது. ஆகையால் அதன் மேலெல்லாம் சிலாம்பு சிலாம்பாய் நின்றது. மகாராஜா அதைக் கையில் வைத்துக் கொண்டு விளையாடும்போது வலது கையில் ஒரு சிலாம்பு குத்தியது. இடது கையால் சிலாம்பைத் தட்டி எறிந்து விட்டு மகாராஜா மேலும் விளையாடிக் கொண்டிருந்தார்.

சிலாம்பு குத்திய இடத்தில் மறுநாள் சின்னக் கொப்புளம் புறப்பட்டது.

இரண்டு நாட்களில் அது பெரிய சிரங்காயிற்று. நாலு நாளைக்கெல்லாம் கை முழுவதும் புரையேறி விட்டது.

சென்னைப் பட்டணத்திலிருந்து பெரிய ஸர்ஜன்கள் மூன்றுபேர் வரவழைக்கப்பட்டார்கள்.

அவர்கள் கூடி ஆலோசித்து, "ஆபரேஷன் செய்ய வேண்டியதுதான்" என்று தீர்மானித்தார்கள். ஆபரேஷன் நடந்தது.

மூன்று ஸர்ஜன்களும் ஆபரேஷன் செய்து விட்டு வெளியில் வந்து பின்வரும் செய்தியைத் தெரிவித்தார்கள்:—

"ஆபரேஷன் வெற்றிகரமாய் நடந்தது; மகாராஜா காலமாகி விட்டார்!"

இவ்விதமாக, நூறாவது புலியானது கடைசியில் புலிராஜாவின் மேல் வஞ்சம் தீர்த்துக் கொண்டது! —'கல்கி' 1—8—41

Printed & Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras - 10. Editor: Mi. Pa. Somasundaram

# "உங்களுக்கு ஒரு செய்தி" என்கிருர் நிகார்



## லக்ஸ் டாய்லட் சோப்பில்




# அற்புதமான ஒரு புது மணமுள்ளது

"அது எவ்விதமானது? அது குளிர்ந்தது, மலர் போன்றது, நீடித்து இருக்கக்கூடியது! எனக்குப் பிடித்த அழகு சாதனமான, மிருதுவான, நிறைந்த லக்ஸ் நுரைக்கு அது மனோகரமான மணத்தைத் தருகிறது!

தலைமுதல் கால் வரை கவர்ச்சி அளிக்க பெரிய சைஸிலும் கிடைக்கிறது.

LUX
TOILET SOAP

இந்தியாவில் தயாரித்தது.

## லக்ஸ் டாய்லட் சோப்




சினிமா நட்சத்திரங்களின் சுத்தமான, மென்மையான, அழகு தரும் சோப்

LTS. 439-50 TM

REGISTERED No. M. 4392
Registered as newspaper in Ceylon